# श्री नारायणीयम्

# நாராயணீயம்

**5-ம் பாகம்**

(81-வது தசகம் முதல் 100-வது தசகம் முடிய)



அம்ருதவாக் வர்ஷி, உபன்யாஸக சக்ரவர்த்தி, வைதிக தர்ம
ஸம்ரக்ஷக, ப்ரவசன துரீண, வேதயாக, ராமாயண
தத்வ உபதேசக, ராமாயண கேஸரி,
பாரத சிம்ஹம், ப்ரம்ஹஸ்ரீ

**S. அனந்தராம தீக்ஷிதர்**

எழுதிய தமிழ் உரையுடன்



ராஜன் அண் கோ. (பிரிண்டர்ஸ்) சென்னை-இல்
அச்சிடப்பட்டது.

 [விலை ரூ. 2



அம்ருத வாக்வர்ஷீ, உபன்யாஸக சக்ரவர்த்தி, வைதிக
தர்ம ஸம்ரக்ஷக, ப்ரவசன துரீண, வேதயாக பரிபாலக,
ராமாயண தத்வ உபதேசக, ராமாயண கேஸரி,
பாரத ஸிம்ஹம்

**சேங்காலிபுரம் ப்ரும்ஹஸ்ரீ**
**S. அனந்தராம தீக்ஷிதர்**

# முகவுரை

—o—

ஸ்ரீ குருவாயூரப்பனின் ஸ்தோத்திரமாகிய ஸ்ரீ நாராயணீயம், இந்த ஐந்தாவது பாகத்துடன் பூர்த்தியாகிறது. இதில் 81-வது தசகத்தில் ஆரம்பித்து 100-வது தசகம் முடிய உள்ளது. இந்த ஐந்தாவது பாகத்தில் த்ரௌபதி கல்யாணம் முதல் ஆரம்பித்து சுபத்ரா கல்யாணம், காளிந்தீ மித்ரவிந்தை முதலிய மஹிஷிகளின் விவாஹம் முதலிய சரித்திரங்கள் கூறப்பட்டுள்ளன. ஸ்ரீமத் பாகவதம் 10-வது ஸ்கந்தத்திலுள்ள கதைகளின் ஸாரமே இவைகள். மேலும் பாகவதம் 11-வது, 12-வது ஸ்கந்தங்களின் ஸாரம் மிக அழகாக பட்டத்ரியால் கூறப்பட்டுள்ளது இதில் அடங்கியுள்ளது. இதை ஒரு முறை படிப்பதால் ஸ்ரீமத் பாகவதத்தை பல முறை படித்த புண்யம் நிச்சயம் ஏற்படும். ஆஸ்திகர்கள் இந்த பாகத்தை படித்து ஸ்ரீ குருவாயூரப்பனின் பரிபூர்ண அனுக்ரஹத்தை அடையும் படி கோறுகிறேன்.

இந்த 5-வது பாகத்தில் சில ஸ்லோகங்களில் அச்சுபிழைகள் முதலியன உள்ளன. இவைகளை கடைசி பக்கத்தில் திருத்தி அந்தந்த பக்கங்களில் சரியாக படிக்க எழுதியுள்ளேன். பாராயணம்

செய்யும் பக்தர்கள் முன்னமேயே திருத்தி கொள்ள கோறுகிறேன். மறு பதிப்பில் இந்த தோஷங்களை விலகிவிட ஸ்ரீ பகவான் அருள் புரியும்படி பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு

சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்



ஸ்ரீ குருவாயூரப்பன்

श्रीकृष्णाय नमः

# श्री नारायणीयम्

—o—

## ஸ்ரீ குருவாயூரப்பனின் பெருமை

சமீபத்தில் மின்சாரக் கம்பனியில் பிரபல வேலையில் இருக்கும் ஒருவருக்கு புற்றுநோய் வயிற்றுக்குள் வந்துவிட்டது. துயரத்தைப் பொறுக்க முடியாமல் ஆப்பரேஷன் செய்துக் கொண்டார். ஆங்கில வைத்தியர்கள் இந்த வியாதி அனுகூலமாகாது என கூறிவிட்டு வீட்டுக்கு அழைத்துப் போகும்படி கூறிவிட்டனர். அவர் பல முறை பெரியோர்களிடம் ஸ்ரீமத் பாகவதத்தையும், நாராயணீயத்தையும் ச்ரவணம் செய்திருக்கிறார். அந்த புண்ணியத்தினால் ஸ்ரீ நாராயணீயத்தை பாராயணம் செய்தால் அனுகூலமாகிவிடும் என்று தோன்றிற்று. உடனேயே நாராயணீயத்தை பாராயணம் செய்ய ஆரம்பித்தார். சில மாதங்களிலேயே அவருக்கு வயிற்றுவலி முதலிய தொந்தரவுகள் நீங்கிவிட்டது. மறுபடியும் அந்த ஆங்கில வைத்தியர்களிடம் சென்று மறுபடியும் அந்த இடத்தை ஆப்ரேஷன் செய்து பார்க்கச் சொன்னார். பார்த்ததில் அந்த வியாதி நீங்கியதைக் கண்டு ஆச்சரியப்பட்டு ஆனந்தமடைந்தனர். இக்கலியில் ஸ்ரீ நாராயணீயமும் ஸ்ரீ குருவாயூரப்பனும் கண்கண்ட தெய்வமாகும்.

—o—

### 81-வது தசகம்

### பகவான் திரௌபதியின் விவாஹத்திற்குச் செல்வது

स्निग्धां मुग्धां सततमपि तां लालयन् सत्यभामां
यातो भूयः सह खलु तया याज्ञसेनीविवाहम् ।
पार्थप्रीत्यै पुनरपि मनागास्थितो हस्तिपुर्यां
शक्रप्रस्थं पुरमपि विभो संविधायागतोऽभूः ॥ 1 ॥

ஸ்நிக்தாம் முக்தாம் ஸததமபி தாம் லாலயந்
ஸத்யபாமாம்
யாதோ பூய: ஸஹ கலு தயா யாக்ஞஸேநீவிவாஹம் |
பார்த்தப்ரீத்யை புனரபி மநாகாஸ்திதோ ஹஸ்தி
புர்யாம்
சக்ரப்ரஸ்தம் புரமபி விபோ ஸம்விதாயாகதோsபூ: ||

ப்ரபுவான ஹே குருவாயூரப்பா, அன்பு கொண்டவளும் அழகுள்ளவளுமான அந்த ஸத்யபாமாவை சந்தோஷிக்கச் செய்தீர். மீண்டும் ஸத்யபாமாவுடன் திரௌபதியின் விவாஹத்திற்காக ஹஸ்தினபுரம் சென்றீர். மேலும் பாண்டவர்களின் அன்பைக் கோறி அப்பட்டணத்திலேயே சில தினங்கள் தங்கி இந்திரப்பிரஸ்தம் என்ற பட்டணத்தை விச்வகர்மாவைக் கொண்டு நிர்மாணம் செய்து துவாரகா நகரம் திரும்பினீராமே.

•

## ஸுபத்ரா கல்யாணம்

भद्रां भद्रां भवदवरजां कौरवेणार्थ्यमानां
त्वद्वाचा तामहृत कुहनामस्करी शक्रसूनुः ।
तत्र क्रुद्धं बलमनुनयन् प्रत्यगास्तेन सार्धं
शक्रप्रस्थं प्रियसखमुदे सत्यभामा सहायः ॥ 2 ॥

பத்ராம் பத்ராம் பவதவரஜாம் கௌரவேணார்த்ய
மாநாம்
த்வத்வாசா தாமஹ்ருத குஹநாமஸ்கரீ சக்ரஸூநு: |
தத்ர க்ருத்தம் பலமநுநயந் ப்ரத்யகாஸ்தேந ஸார்தம்
சக்ரப்பரஸ்தம் ப்ரியஸகமுதே ஸத்யபாமா ஸஹாய: ||

ஹே குருவாயூரப்பா, தங்கள் சகோதரியும் மங்கள ஸ்வரூபியும், துரியோதனனால் கேட்கபடுகிறவளுமான அந்த சுபத்திரையை, தாங்கள் கூறியதன்பேரில் அந்த அர்ஜு

னன் ஸன்யாசி வேஷம் கொண்டு அபஹரித்துச் சென்ருன். அதனுல் கோபமடைந்த பலராமனை ஸமாதானம் செய்து அவரோடு கூட ப்ரியஸ்னேகிதனுன அர்ஜுனனின் சந்தோஷத்தைக் கோறி ஸத்யபாமாவை அழைத்துக் கொண்டு இந்திரபிரஸ்தம் சென்றீராமே.

### காளிந்தி, மித்ரவிந்தை, இவர்களின் விவாஹம்

तत्र क्रीडन्नपि च यमुनाकूलदृष्टां गृहीत्वा
तां कालिन्दीं नगरमगमः खाण्डवप्रीणिताग्निः ।
भ्रातृत्रस्तां प्रणयविवशां देव पैतृष्वसेयीं
राज्ञां मध्ये सपदि जहृषे मित्रविन्दामवन्तीम् ॥ 3 ॥

தத்ர க்ரீடந்நபி ச யமுனகூலத்ருஷ்டாம் க்ருஹீத்வா
தாம் காலிந்தீம் நகரமகம: காண்டவப்ரீணிதாக்நி: ।
ப்ராத்ருத்ரஸ்தாம் ப்ரணயவிவசாம் தேவ பைத்ருஷ்வ ஸேயீம்
ராக்ஞாம் மத்யே ஸபதி ஜஹ்றிஷே மித்ரவிந்தாம– வந்தீம் ॥

ஹே குருவாயூரப்பா, பிறகு காண்டவனத்தைக் கொடுத்து அக்னியை திருப்தி செய்துவிட்டு, யமுனு நதி கரையில் கண்ட அந்த காளிந்தியை க்ரஹித்துக்கொண்டு துவாரகைக்குச் சென்றீர். பிறகு தேவனுன தாங்கள் தங்கள் அத்தையான ராஜாதி தேவியின் பெண்ணும், சகோதரர்களிடமிருந்து பயம் அடைந்தவளும், அன்பினுல் பரவசமாய் இருக்கிறவளுமான மித்ரவிந்தையை அவந்தி தேச அரசர்களின் நடுவில் உடன் க்ரஹித்தீராமே.

## ஸத்யை, பத்ரை இவர்களின் விவாஹம்

सत्यां गत्वा पुनरुदवहो नग्नजिन्नन्दनां तां
बध्द्वा सप्तापि च वृषवरान् सप्तमूर्तिर्निमेषात् ।
भद्रां नाम प्रददुरथ ते देव सन्तर्दनाद्या-
स्तत्सोदर्यां वरद भवतः साऽपि पैतृष्वसेयी ॥ 4 ॥

ஸத்யாம் கத்வா புனருதவஹோ நக்நஜிந்நந்தநாம் தாம்
பத்வா ஸப்தாபி ச வ்ருஷவராந் ஸப்தமூர்திர் நிமேஷாத் |
பத்ராம் நாம ப்ரததுரத தே தேவ ஸந்தர்தநாத்யா—
ஸ்தத்ஸோதர்யாம் வரத பவதः ஸாऽபி பைத்ருஷ்வ ஸேயீ ||

ஹே குருவாயூரப்பா, கோஸல தேசத்தைச் சேர்ந்த நக்னஜித்தின் பெண்ணை விவாஹம் செய்துகொள்ள பந்தய மாக வைத்த ஏழு காளைகளை தாங்கள் ஏழு உருவம் எடுத்துக்கொண்டு நிமிஷத்தில் கட்டி அடக்கி அந்தப் பெண்ணை விவாஹம் செய்து கொண்டீர். வரதனை ஹே குருவாயூரப்பா, ஸந்தர்தனன் முதலிய கேகய அரசகுமாரர் கள், தன் சகோதரியான பத்ரையை தங்களுக்கு விவாஹம் செய்துகொடுத்தார்கள். அந்த பத்ரையும் தங்கள் அத்தை யான அருத் கீர்த்தியின் பெண் தானுமே.

## லக்ஷ்மணையின் விவாஹம்

पार्थाद्यैरप्यकृतलवनं तोयमात्राभिलक्ष्यं
लक्ष्यं छित्वा शफरमवृथा लक्ष्मणां मद्रकन्याम् ।
अष्टावेवं तव समभवन् वल्लभास्तत्र मध्ये
शुश्रोथ त्वं सुरपतिगिरा भौमदुश्चेष्टितानि ॥ 5 ॥

பார்தாத்யைரப்யக்ருதலவநம் தோய மாத்ரா
பிலக்ஷ்யம்
லக்ஷம் சித்வா சபரமவ்ருதா லக்ஷ்மணும் மத்ரகந்யாம் |
அஷ்டாவேவம் தவ ஸமபவந் வல்லபாஸ்தத்ர
மத்யே
சுச்ரோத த்வம் ஸுரபதிகிரா பௌமதுச்
சேஷ்டிதாநி ||

ஹே குருவாயூரப்பா, அர்ஜுனன் முதலியவர்களால் அடிக்க முடியாததும். ஜலத்தில் மட்டும் காணத் தகுந்தது மான மீன் உருவாய் கொண்ட குறியை அடித்து மத்ர அரசனின் பெண்ணுன லக்ஷ்மண என்றவளை, க்ரஹித்தீரா மே. ஆக தங்களுக்கு எட்டு மனைவிகள் இருந்தார்கள். இவ்விதமிருக்க நரகன் என்ற அசுரன் இந்திரன், தன் தாயான அதிதியின் குண்டலம் முதலியவற்றை நரகாசுரன் அபஹரித்ததாயும் உலகத்தை துன்பப்படுத்துவதாயும் கூறி யதைத் தாங்கள் கேட்டீராமே.

### கருடன் மீதேறி ப்ராக் ஜ்யோதிஷபுரம் செல்வது

स्मृतायातं पक्षिप्रवरमधिरूढस्त्वमगमो
वहन्नङ्के भामामुपवनमिवारातिभवनम् ।
विभिन्दन्दुर्गाणि त्रुटितपृतनाशोणितरसैः
पुरं तावत्प्राग्ज्योतिषमकुरुथाः शोणितपुरम् ॥ 6 ॥

ஸ்ம்ருதாயாதம் பக்ஷிப்ரவர மதிரூடஸ்த்வமகமோ
வஹந்நங்கே பாமாமுபவனமிவாராதி பவநம் |
விபிந்தந்துர்காணி த்ருடித ப்ருதநாசோணிதரஸை:
புரம் தாவத்ப்ராக்ஜ்யோதிஷம குருதா :
சோணிதபுரம் ||

ஹே குருவாயூரப்பா, தாங்கள் நினைத்த மாத்திரத்தில் வந்த கருடன் மேல் ஏறிக்கொண்டு சத்ருவான நரகாசுரனின் பட்டணத்திற்கு, புஷ்பத் தோட்டத்திற்குப் போவது போல் ஸத்யபாமாவையும் மடியில் வைத்துக் கொண்டு சென்றீர். அந்த நகரின் கோட்டைகளை இடித்துக் கொண்டு ஸேனைகளை அறுத்து அதன்ரத்தங்களால் ப்ராக்ஜ்யோதிஷம் என்ற அப்பட்டணத்தை சோணிதபுரம் என்று (ரத்தம் நிறைந்த புரமாக)ச் செய்தீராமே.

### முரன், நரகன், என்ற அசுரர்களை வதம் செய்வது

मुरस्त्वां पञ्चास्यो जलधिवनमध्यादुदपतत्
स चक्रे चक्रेण प्रदलितशिरा मङ्क्षु भवता ।
चतुर्दन्तैर्दन्तावलपतिभिरिन्धानसमरं
रथाङ्गेन छित्त्वा नरकमकरोस्तीर्णनरकम् ॥ 7 ॥

முரஸ்த்வாம் பஞ்சாஸ்யோ ஜலதிவநமத்யாதுதபதத்
ஸ சக்ரே சக்ரேண ப்ரதலிதசிரா மங்க்ஷு பவதா |
சதுர்தந்தைர் தந்தாவலபதிபிரிந்தாநஸமரம்
ரதாங்கேந சித்வா நரகமகரோஸ்தீர்ணநரகம் ||

ஹே குருவாயூரப்பா, ஐந்து முகங்கொண்ட முரன் என்ற அசுரன் பெரிய மடுவின் ஜலத்திலிருந்து தங்களை எதிர்த்து வந்தான். உடன் தாங்கள், ஸுதர்சனம் என்ற சக்ரத்தால் அந்த முரனை தலையை யறுத்து நிக்ரஹம் செய்தீர். பிறகு நான்கு தந்தங்களையுடைய சிறந்த யானைகளுடன் வெகு நேரமாய் நீண்ட யுத்தம் செய்த அந்த நரகாசுரனை தன் ஸுதர்சனம் என்ற சக்ரத்தால் நரகத்தைத் தாண்டினவனாக (ஸம்ஸாரத்தைத் தாண்டினவனாக) செய்தீராமே.

## பகவான் நரகாசுரனின் பிள்ளைக்கு ராஜ்யமளித்தல்

स्तुतो भूम्या राज्यं सपदि भगदत्तेऽस्य तनये
गजं चैकं दत्त्वा प्रजिघयिथ नागान्निजपुरम् ।
खलेनाबद्धानां स्वगतमनसां षोडश पुनः
सहस्राणि स्त्रीणामपि च धनराशिं च विपुलम् ॥ 8 ॥

ஸ்துதோ பூம்யா ராஜ்யம் ஸபதி பகதத்தேऽஸ்ய தநயே
கஜம் சைகம் தத்வா ப்ரஜிகயித நாகாந்நிஜபுரம் ।
கலேநாபத்தாநாம் ஸ்வகதமனஸாம் ஷோடச புன:
ஸஹஸ்ராணி ஸ்திரீணாமபி ச தனராசிம் ச விபுலம் ॥

ஹே குருவாயூரப்பா தங்களை நரகாசுரனின் தாயான பூமிதேவி ஸ்தோத்திரம் செய்தாள். அதனால் அந்த நரகாசுரனின் பிள்ளையான பகதத்தன் என்பவனிடம் உடன் ராஜ்யத்தையும், ஒரு யானையையும் கொடுத்தீர் பிறகு மற்ற யானைகளையும், துஷ்ட நரகனால் கட்டுண்டவர்களும், தங்களிடத்தில் அன்பு கொண்டவர்களும் ஆன பதினாறாயிரம் கன்னிகைகளையும் பெருத்த தன குவியலையும் தாங்கள், தங்கள் பட்டணமான துவாரகைக்கு அனுப்பினீராமே.

## பாரிஜாத ஹரணம்

भौमापाहृतकुण्डलं तददितेर्दातुं प्रयातो दिवं
शक्राद्यैर्महितः समं दयितया द्युस्त्रीषु दत्तह्रिया ।
हृत्वा कल्पतरुं रुषाऽभिपतितं जित्वेन्द्रमभ्यागम-
स्तत्तु श्रीमददोष ईदृश इति व्याख्यातुमेवाकृथाः ॥ 9 ॥

பௌமாபாஹ்ருத குண்டலம் தததிதேர்தாதும்
ப்ரயாதோதிவம்
சக்ராத்யைர்மஹித: ஸமம் தயிதயாத்யுஸ்த்ரீஷு
தத்தஹ்ரியா ।
ஹ்ருத்வா கல்பதரும் ருஷாऽபிபதிதம் ஜித்வேந்த்ரமப்-
யாகம
ஸ்தத்து ஸ்ரீமததோஷ ஈத்ருச இதி வ்யாக்யாதுமே-
வாக்ருதா:

ஹே குருவாயூரப்பா, முன்பு அதிதியிடமிருந்து நரகாசுரன் க்ரஹித்துச் சென்ற அக்குண்டலங்களை அவனிடமிருந்து பெற்று, அவைகளை இந்திரனின் தாயான அதிதியிடம் கொடுப்பதற்கு தாங்கள் தேவலோகம் சென்றீர். தன் அழகால் தேவலோக ஸ்திரீகளை லஜ்ஜையடையச் செய்யும் ப்ரியையான ஸத்யபாமையுடன் வந்த தங்களை இந்திரன் முதலிய தேவர்கள் பூஜித்தார்கள். திரும்பும் போது கல்பவ்ருக்ஷத்தை (பாரிஜாத வ்ருக்ஷத்தை) எடுத்துக் கொண்டு வரும் தங்களை கோபத்தால் எதிர்த்த இந்திரனை ஜயித்து ஊர் திரும்பினீராமே. ஐச்வர்ய மதத்தால் இவ்விதமான தோஷம் ஏற்படுகிறது என்பதை உலகிற்கு விளக்கவே இவ்விதம் செய்தீர்,

## பகவானின் குடும்பவாழ்க்கையை நாரதர் காண்பது

कल्पद्रुं सत्यभामाभवनभुवि सृजन् द्व्यष्टसाहस्रयोषाः
स्वीकृत्य प्रत्यगारं विहितबहुवपुर्लालयन् केलिभेदैः ।
आश्चर्यान्नारदालोकितविविधगतिस्तत्र तत्रापि गेहे
भूयः सर्वासु कुर्वन्दश दश तनयान् पाहि वातालयेश ॥

கல்பத்ரும் ஸத்யபாமாபவனபுவி ஸ்ருஜந் த்வயஷ்ட-
ஸாஹஸ்ரயோஷா:
ஸ்வீக்ருத்ய ப்ரத்யகாரம் விஹிதபஹுவபுர்லாலயந் கேளிபேதை:
ஆச்சர்யாந்நாரதாலோகித விவிதகதிஸ்தத்ர தத்ராபி கேஹே
பூய: ஸர்வாஸு குர்வந்தச தச தநயாந் பாஹி வாதாலயேச ||

மேலும் தாங்கள் அந்த பாரிஜாத வ்ருக்ஷத்தை ஸத்ய பாமாவின் வீட்டுத் தோட்டத்தில் ஸ்தாபித்தீர். பிறகு அந்த பதினாறுயிரம் ஸ்திரீகளை விவாஹம் செய்துகொண்டு அவர்களை தனித் தனியான வீட்டில் வசிக்க செய்து தாங்களும் பதினாராயிரம் உருவம் எடுத்துக் கொண்டு பலவிதமான லீலைகளால் ஒவ்வொருவரையும் சந்தோஷிக்கச் செய்தீர். பதினாறுயிரம் கோபிகைகளோடு ஒரு கிருஷ்ணன் எவ்விதம் வாழ முடியும் என்ற எண்ணத்துடன் தங்களைக் காணவந்த நாரதர் ஒவ்வொரு வீட்டிலும் தாங்கள், அக்காலத்திற்குறிய ஸ்னானம், ஜபம், பூஜை, கர்மாக்களை செய்துக்கொண்டிருப் பதைக் கண்டு ஆச்சர்யமடைந்தார். ஒவ்வோரு ஸ்திரீ யினிடத்திலும், பத்து, பத்து புத்திரர்களை பெற்றீராமே. அப்பேர்கொத்த ஹே குருவாயூரப்பா தாங்கள் காற்க வேண்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் ஆம் என தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ அப்பனின் மஹிமை

30-8-60 அன்று சென்னையிலிருந்து பிரபல ஆங்கில வைத்தியர் தான் ஸ்ரீ குருவாயூரப்பன் சன்னிதியில் கண்ட வைபவத்தை மனமுருகி தெரிவித்திருக்கிறார். அக்கடிதத் தில் சமீபத்தில் மைலாப்பூரிலும், பங்களூரிலும் கல்கி ஆபீ ஸிலும் அவர்கள் தம்பதிகளாய், நான் செய்து வந்த ஸ்ரீ ராமாயண, ஸ்ரீமத் பாகவத, ஸ்ரீ மஹா பாரத உபன்

யாஸத்தை ச்ரவணம் செய்து வந்தார்கள். அப்பொழுது நான் நாராயணீயத்தைக் கூறியதைக் கேட்டார்களாம். அதிலிருந்து குருவாயூருக்குச் சென்று ஸ்ரீ அப்பனை தர்சனம் செய்தார்களாம் ஸ்ரீ அப்பனுக்கு பொன்னுடையும் போர்த்தினார்களாம். பொன்னுடை போர்த்தி தர்சிக்கும் போது, நான் உபன்யாசத்தில் கூறியபடி நான் தலையை ஆட்டி காற்கிறேன் என்று கூறுவதுபோல் தோன்றிற்றும். அதனால் ஸன்னிதியை விட்டு வர மனமில்லாமல் பல தினங்கள் அங்கு தங்கி தர்சித்தார்களாம். அவர்களுடைய மனைவி ஸ்ரீ அப்பனின் ஸன்னிதியில் மனமுறுகி பஜனையும் செய்தார்களாம். இதற்கெல்லாம் காரணம் தாங்கள்தான் என மிகவும் புகழ்ந்து எழுதியுள்ளார்கள்.

ஸ்ரீ குருவாயூரப்பனை தர்சிக்க நானும் காரணமாக ஆனேன் என்பதை நினைத்து சந்தோஷமடைகிறேன்.

நான் பிரசுரித்திருக்கும் ஜயமங்கள ஸ்தோத்திரத்தில் உள்ள நாராயணீய ஸ்லோகங்களையும் அவர் மனைவி பாராயணம் செய்து வந்தார்களாம்.

—o—

82-வது தசகம்

प्रद्युम्नो रौक्मिणेयः स खलु तव कला शम्बरेणाहृतस्तं
हत्वा रत्या सहाप्तो निजपुरमहरद्रुक्मिकन्यां च धन्याम् ।
तत्पुत्रोऽथानिरुद्धो गुणनिधिरवहद्रोचनां रुक्मिपौत्रीं
तत्रोद्वाहे गतस्त्वं न्यवधि मुसलिना रुक्म्यपि द्यूतवैरात् ॥

ப்ரத்யும்நோ ரௌக்மிணேய: ஸ கலு தவ கலா
சம்பரேணாஹ்ருதஸ்தம்
ஹத்வா ரத்யா ஸஹாப்தோ நிஜபுரமஹரத்ருக்மி-
கன்யாம் ச தந்யாம் |
தத்புத்ரோऽதாநிருத்தோ குணநிதிரவஹத்ரோசநாம்
ருக்மிபௌத்ரீம்
தத்ரோத்வாஹே கதஸ்த்வம் ந்யவதி முஸலிநா
ருக்ம்யபி த்யூதவைராத் ||

ஓ குருவாயூரப்பா ப்ருத்யும்னன் ருக்மிணியினிடத்தில் தங்களுக்குப் பிறந்தவன் அவன் தங்களுடைய அம்சம், அவனை சம்பரன் என்ற அசுரன் அபஹரித்துச் சென்றான். அதாவது ப்ரத்யும்னனை பிறந்ததும், சம்பரன் என்ற அசுரன் சமுத்திரத்தில் எறிந்துவிட்டான். அக்குழந்தையை மீன் விழுங்கியது. வலையர் மீன்களை பிடித்து, சம்பரன் வீட்டில் கொண்டு கொடுத்தார்கள். சமையல்காரன் ஒரு மீன் வயிற்றில் இக்குழந்தை ப்ரத்யும்னன் இருப்பதைக்கண்டு அதை எடுத்து அவ்வீட்டில் இருந்த ரதி தேவியிடம் கொடுத்தான். இக்குழந்தையை அவள் வளர்த்தாள். இவன் யௌவன வயது அடைந்ததும் தன் பர்த்தாவான மன்மதன் ப்ரத்யும்னனாக வந்திருப்பதை அறிந்து அவனிடம் அன்புகொண்டு வசித்து வந்தாள். பிறகு ப்ரத்யும்னன் சம்பரனைக் கொன்று ரதியுடன் துவாரகைக்கு வந்தான். மீண்டும் தன் மாமாவின் பெண்ணும் நல்ல பாக்யசாலியுமான ருக்மவதியையும் விவாஹம் செய்துகொண்டான். ப்ரத்யும்னனின் புத்திரனான நற்குணங்கள் நிரம்பியவனான அநிருத்தன், ருக்மியின் பேத்தியான ரோசனையை விவாஹம் செய்துகொண்டான். அந்த கல்யாணத்தில் சூதாட்டம் நடந்தது. ஜயித்த பலராமனை அந்த ருக்மி தோற்றதாகச் சொன்னான். அதனால் கோபங் கொண்ட தாங்கள் பலராமனைக் கொண்டு அந்த ருக்மியை வதம் செய்தீராமே.

## உஷையின் ஸ்வப்னம்

बाणस्य सा बलिसुतस्य सहस्रबाहो-
मर्हेश्वरस्य महिता दुहिता किलोषा ।
त्वत्पौत्रमेनमनिरुद्धमदृष्टपूर्वं
स्वप्नेऽनुभूय भगवन् विरहातुराऽभूत् ॥ 2 ॥

பாணஸ்ய ஸா பலிஸுதஸ்ய ஸஹஸ்ரபாஹோ—
ர்மாஹேச்வரஸ்ய மஹிதா துஹிதா கிலோஷா |
த்வத்பௌத்ரமேநமநிருத்தமத்ருஷ்டபூர்வம்
ஸ்வப்நேऽநுபூய பகவந் விரஹாதுராऽபூத் ||

ஹே குருவாயூரப்பா, மஹாபலி என்ற அசுரனுக்கு பாணசுரன் என்ற புத்திரன் இருந்தான் அவன் சிறந்த சிவ பக்தன். அவனுக்கு ஆயிரம் கைகள் உண்டு. அவனுக்கு உஷை என்ற ஒரு பெண் இருந்தாள். அவள் தங்கள் புத்திரனை அநிருத்தனை முன்பும் நேரில் கண்டதில்லை. ஆயினும் அவனை ஸ்வப்பனத்தில் கண்டு அனுபவித்தாள். விழித்துக்கொண்டதும் காணுமல் பிரிவினுல் துன்பத்தையும் அடைந்தாளாமே.

## உஷையின் கோரிக்கை

योगिन्यतीव कुशला खलु चित्रलेखा
तस्याः सखी विलिखती तरुणानशेषान् ।
तत्रानिरुद्धमुषया विधितं निशाया-
मानेष्ट योगबलतो भवतो निकेतात् ॥ 3 ॥

யோகிந்யதீவ குசலா கலு சித்ரலேகா
தஸ்யா: ஸகீ விலிகதீ தருணாநசேஷாந் |
தத்ராநிருத்தமுஷயா விதிதம் நிசாயா-
மாநேஷ்ட யோகபலதோ பவதோ நிகேதாத் ||

ஹே குருவாயூரப்பா யோகியும் மிகுந்த சாமர்த்திய சாலியுமான, அந்த உஷையின் தோழியான சித்ரலேகை என்றவள், பல யுவர்களை சித்திரத்தில் எழுதி அந்த உஷையிடம் காண்பித்தாள். அது சமயம் அநிருத்தனை சித்திரத்தில் எழுதியதும், அதைப் பார்த்த உஷை இவர்தான் ஸ்வப்னத்தில் காணப்பட்டார் என்றும் அவரை அழைத்து வரவேண்டுமென்றும் கூறினாள். அவ்விதம் அன்றிரவே தங்கள் க்ருஹத்திலிருந்து தன் யோக பலத்தால் அந்த அநிருத்தனை அழைத்துச் சென்றாளாமே.

## அநிருத்தன் கட்டுண்டதையறிந்த பகவான் பாணாசுரனை தகைவது

कन्यापुरे दयितया सुखमारमन्तं
चैनं कथञ्चन बबन्धुषि शर्वबन्धौ ।
श्रीनारदोक्ततदुदन्तदुरन्तरोषैस्त्वम्
तस्य शोणितपुरं यदुभिर्न्यरुन्धाः ॥ 4 ॥

கன்யாபுரே தயிதயா ஸுகமாரமந்தம்
சைநம் கதம்ஞ்சந பபந்துஷி சர்வபந்தௌ |
ஸ்ரீ நாரதோக்ததது தந்ததுரந்த ரோஷை-
ஸ்த்வம் தஸ்ய சோணிதபுரம் யதுபிர்ந்யருந்தா: ||

ஹே குருவாயூரப்பா, அந்தப்புரத்தில் உஷையோடு சுகமாய் ரமித்துக்கொண்டிருக்கும் அநிருத்தனை மிகுந்த சிரமத்துடன் சிவபக்தனான பாணாசுரன் கயிற்றால் கட்டினான்.

ஸ்ரீ நாரதர் மூலம் அநிருத்தன் கட்டுண்டதையறிந்து எல்லையற்ற கோபமடைந்த தாங்கள் அந்த பாணாசுரனுடைய சோணிதபுரத்தை யாதவர்களோடு தகைத்தீராமே.

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் பரமேச்வரருடன் யுத்தம் செய்வது

पुरीपालः शैलप्रियदुहितृनाथोस्य भगवान्
समं भूतव्रातैर्यदुबलमशङ्कं निरुरुधे ।
महाप्राणो बाणो झटिति युयुधानेन युयुधे
गुहः प्रद्युम्नेन त्वमपि पुरहन्त्रा जघटिषे ॥ 5 ॥

புரீபால: சைலப்ரிய துஹித்ருநாதோऽஸ்ய பகவாந்
ஸமம் பூதவ்ராதைர்யதுபலமசங்கம் நிருருதே |
மஹாப்ராணோ பாணோ ஜடிதி யுயுதானேன யுயுதே
குஹ: ப்ரத்யும்னேந த்வமபி புரஹந்த்ரா ஜகடிஷே ||

ஹே குருவாயூரப்பா, பக்தனை பாணாசுரனின் பட்டணத்தை பார்வதீ காந்தனை பரமேச்வரன் அவனிடத்தில் அன்பு கொண்டு காத்து வந்தார். அந்த பகவான் பூத கணங்களோடு யுத்தத்தில் யாதவஸேனைகளை நிர்பயமாய் தகைத்தார் மிகுந்த பலமுள்ள பாணாசுரன் ஸாத்யகியோடும், ஸ்கந்தன் ப்ரத்யும்னனோடும் தாங்கள் த்ரிபுரத்தை எரித்த பரமேச்வரனோடும் வேகமாய் யுத்தம் செய்தீராமே.

## யுத்தத்தில் தோல்வியுற்றது

निरुद्धाशेषास्त्रे मुमुहुषि तवास्त्रेण गिरिशे
द्रुता भूता भीताः प्रमथकुलवीराः प्रमथिताः ।
परास्कन्दत्स्कन्दः कुसुमशरबाणैश्च सचिवः
स कुम्भाण्डो भाण्डं नवमिव बलेनाशु बिभिदे ॥ 6 ॥

நிருத்தாசேஷாஸ்த்ரே முமுஹுஷி தவாஸ்த்ரேண கிரிசே
த்ருதா பூதா பீதா : ப்ரமதகுலவீரா : ப்ரமதிதா : ।
பராஸ்கந்தத் ஸ்கந்த : குஸுமசரபாணைச்ச ஸசிவ :
ஸ கும்பாண்டோ பாண்டம் நவமிவ பலேநாசு பிபிதே ॥

ஹே குருவாயூரப்பா, பரமேச்வரனின் எல்லா அஸ்திரங்களையும் தாங்கள் எடுத்து மோஹனாஸ்திரத்தையும் போட்டீர். அதனால் அவர் பயந்து மோஹத்தையடைந்தார். இதைக் கண்டு பூதகணங்கள் ஓடி விட்டன. பூதகணங்களின் தலைவர்களான வீரர்கள் மிகவும் துன்புற்றார்கள். ஸ்கந்தனும் மன்மதனின் அவதாரமான ப்ரத்யும்னனால் தோல்வியுற்று திரும்பி ஓடினார். பாணாசுரனின் மந்திரியான கும்பாண்டன் என்றவனை புதிய பானையை உடைப்பது போல் சீக்கிரம் பலராமன் மூலம் அடித்துக் கொன்றீராமே.

## ஜ்வரத்தை போக்கும் சரிதம்

चापानां पञ्चशत्या प्रसभमुपगते छिन्नचापेऽथ बाणे
ऽव्यर्थे याते समेतो ज्वरपतिरशनैरज्वरि त्वज्ज्वरेण ।
ज्ञानी स्तुत्वाऽथ दत्त्वा तव चरितजुषां विज्वरं स ज्वरोऽगात्
प्रायोऽन्तर्ज्ञानवन्तोऽपि च बहुतमसा रौद्रचेष्टा हि रौद्राः ॥

சாபாநாம் பஞ்சசத்யா ப்ரஸபமுபகதே சிந்நசாபே஽த பாணே
வ்யர்தே யாதே ஸமேதோ ஜ்வரபதிரசனைரஜ்வரி த்வஜ்ஜ்வரேண
க்ஞானீ ஸ்துத்வா஽த தத்வா தவ சரிதஜுஷாம் விஜ்வரம் ஸ ஜ்வரோ஽காத்
ப்ராயோ஽ந்தர்க்ஞானவந்தோ஽பி ச பஹுதமஸா ரௌத்ரசேஷ்டா ஹி ரௌத்ரா : ॥

ஹே குருவாயூரப்பா, தனக்கு உதவிக்கு வந்த பரமேச்வரன் முதலியவர்கள் தோல்வியுற்றதை யறிந்து பாணாசுரன் ஐநூறு வில்களை தனது ஆயிரம் கைகளிலும் எடுத்துக் கொண்டு பலாத்காரமாய் தங்களை எதிர்த்தான். தாங்கள் அவனுடைய வில்களையும் ரதத்தையும் முறித்தீர், அதனால் பாணாசுரன் திரும்பிச் சென்றான் அது தங்களுடைய (வைஷ்ணவ) ஜ்வரமும் ஜ்வரபதியான மஹேச்வரஜ்வரமும் யுத்தம் செய்தது. தங்கள் ஜ்வரத்தால் மாஹேச்வர ஜ்வரம் மிக தாபமடைந்தது. அந்த ஜ்வரமானது தங்களுடய மஹிமையை அறிந்து பிறகு தங்களை ஸ்தோத்திரம் செய்தது இவ்விதமான தங்கள் சரித்திரத்தை படிப்பவர்களுக்கோ கேட்பவர்களுக்கோ ஜ்வர பீடை நீங்க வேண்டும் என்றும் வேண்டிச் சென்றதாமே. ருத்ரனைச் சேர்ந்தவர்கள் உள்ளூரக்ஞானம் நிறைந்தவைகள் ஆயினும் மிகுந்ததமோ குணத்தால் க்ரூரமான செய்கைகளையுடையவர்கள்.

## அநிருத்தனையும் உஷையையும் அழைத்துச் செல்வது

बाणं नानायुधोग्रं पुनरभिपतितं दर्पदोषाद्वितन्वन्
निर्लूनाशेषदोषं सपदि बुबुधुषा शङ्करेणोपगीतः
तद्वाचा शिष्टबाहुद्वितयमुभयतो निर्भयं तत्प्रियं तं
मुक्त्वा तद्दत्तमानो निजपुरमगमः सानिरुद्धः सहोषः ॥८॥

பாணம் நாநாயுதோக்ரம் புனரபிபதிதம் தர்பதோஷாத்விதந்வன்
நிர்லூநாசேஷதோஷம் ஸபதி புபுதுஷா சங்கரேணோபகீத: |
தத்வாசா சிஷ்டபாஹுத்விதயமுபயதோ நிர்பயம் தத்ப்ரியம் தம்
முக்த்வா தத்தத்தமானோ நிஜபுரமகம: ஸாநிருத்த: ஸஹோஷ: ||

ஹே குருவாயூரப்பா, கொழுப்பின் தோஷத்தால் மீண்டும் பலவித ஆயுதங்களை தரித்து உக்ரமாய் தங்களை எதிர்த்து வந்த அந்த பாணாசுரனை உடன் எல்லா கைகளையும் அறுத்து எறிந்தீர், பிறகு தங்களை (விஷ்ணுவை)யும் தன்னையும் ஒன்று என்றறிந்த பரமேச்வரன் தங்களை ஸ்தோத்திரம் செய்தார். அந்த பரமேச்வரனின் கோரிக்கையின் பேரில் அந்த பாணாசுரனுக்கு இருபக்கத்திலும் இரண்டு இரண்டு கைகளை பாக்கியாக வைத்து சிவ பக்தனை அவனை நிர்பயமாய் இருக்கும்படி விடுவித்தீர். அவன் அன்பு கொண்டு கொடுத்த பொருள்களையும் உஷையுடன் அநிருத்தனையும் துவாரகைக்கு அழைத்துச் சென்றீராமே.

## ஸ்ரீ பகவான் யாவரையும் ஜயித்த பெருமை

मुहुस्तावच्छक्रं वरुणमजयो नन्दहरणे
यमं बालानीतौ दवदहनपानेऽनिलसखम् ।
विधिं वत्सस्तेये गिरिशमिह बाणस्य समरे
विभो विश्वोत्कर्षी तदयमवतारो जयति ते ॥ 9 ॥

முஹுஃஸ்தாவச்சக்ரம் வருணமஜயோ நந்தஹரணே
யமம் பாலாநீதௌ தவதஹநபாநேऽநிலஸகம் ।
விதிம் வத்ஸஸ்தேயே கிரிசமிஹ பாணஸ்ய ஸமரே
விபோ விச்வோத்கர்ஷீ ததயமவதாரோ ஜயதி தே ॥

ஹே குருவாயூரப்பா, இந்திரனின் பூஜையைத் தடுத்து கோவர்த்தன மலையைத் தூக்கியது, பாரிஜாத வ்ருக்ஷத்தை எடுத்து வந்தது முதலிய பல சமயங்களில், இந்திரனை ஜயித்தீர். நந்தகோபரை அபஹரித்துச் சென்ற சமயத்தில் வருணனை ஜயித்தீர். குருபுத்திரனை மீட்டு அழைத்து வந்த சமயம் யமனை ஜயித்தீர். காட்டுத் தீ பரவிய சமயத்தில் அதை பானம் செய்து வாயுவுக்குத் தோழனான அக்னியை ஜயித்தீர். கன்றுகளை அபஹரித்த சமயத்தில் ப்ரும்ம

தேவனை ஜயித்தீர். பாணசுர யுத்தத்தில் பரமேச்வரனை ஜயித்தீர். ஹே ப்ரபோ தங்களுடைய இந்த அவதார மானது எல்லா தேவர்களைக் காட்டிலும் சிறந்ததாக விளங்கு கிறது.

### ந்ருக மோக்ஷம்

द्विजरुषा कृकलासवपुर्धरं नृगनृपं त्रिदिवालयमापयन् ।
निजजने द्विजभक्तिमनुत्तमामुपदिशन् पवनेश्वर पाहिमाम् ॥

த்விஜருஷா க்ருகலாஸவபுர்தரம்
ந்ருகந்ருபம் த்ரிதிவாலயமாபயந் |
நிஜஜனே த்விஜ பக்தி மநுத்தமா-
முபதிசந் பவனேச்வர பாஹி மாம் ||

ஹே குருவாயூரப்பா, பிராம்மண கோபத்தினால் 'காட்டு ஓணான் உருவமடைந்த' ந்ருகன் என்ற அரசனை (சாபத்தை நீக்கி) ஸ்வர்க்க லோகத்திற்கு அனுப்பினீர். தன் குடும்பத் தைச் சேர்ந்த குழந்தைகளிடத்தில் (சிறந்ததான) பிராம்ம ணர்களிடத்தில் வைக்க வேண்டிய பக்தியை உபதேசம் செய்த தாங்கள் என்னைக் காக்கவேண்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் ஆம், என தலையை ஆட்டி அங்கீ கரித்தார்.

—o—

### 83-வது தசகம்

## ஸ்ரீ குருவாயூரப்பனின் மஹிமை

ஓர் பிரபல ஆங்கில வைத்தியருக்கு மூத்திர வியாதி வந்துவிட்டது. அதற்கு பல மருந்துகளையும் உபயோகித் தார் அதனால் பயன் ஏற்படவில்லை. அவர் தினந்தோறும்

காலையிலிருந்து இரவு படுக்கும்வரை ஸ்ரீ நாராயணீயம் 1034 ஸ்லோகத்தையும் படித்து வந்தார். அவருக்கு ஆறு மாத காலத்தில் இந்த வியாதி நீங்கிவிட்டது. அவருக்கு பிறகு அந்த வியாதியின் தொந்தரவே இல்லை.

—o—

## பௌண்ட்ரக வாஸுதேவன் பகவானுக்குத் தூதனை அனுப்புவது

रामेऽथ गोकुलगते प्रमदाप्रसक्ते
हूतानुपेतयमुनादमने मदान्धे ।
स्वैरं समारमति सेवकवादमूढो
दूतं न्ययुङ्क्त तव पौण्ड्रकवासुदेवः ॥ 1 ॥

ராமேऽத கோகுலகதே ப்ரமதாப்ரஸக்தே
ஹூதாநுபேதயமுநாதமநே மதாந்தே ।
ஸ்வைரம் ஸமாரமதி ஸேவகவாதமூடோ
தூதம் ந்யயுங்க்த தவ பௌண்ட்ரகவாஸுதேவ: ॥

ஹே குருவாயூரப்பா, பலராமன் கோகுலத்திற்குச் சென்று, ஸ்திரீகளுடன், விளையாட்டில் ஈடுபட்டவராய் (ஜலக்ரீடைக்கு) தான் அழைத்து வராத யமுனையை அடக்கி மத்ய பானத்தால் மதிமயங்கியவராய் இஷ்டப்படி ரமித்துக் கொண்டிருந்தார். அதுசமயம் தன்னை அண்டினவர்கள் நீங்கள் வாஸுதேவன் என்று உத்ஸாஹப் படுத்தியதால், தன்னையே பகவானான வாஸுதேவன் என்று நினைத்திருந்த பௌண்ட்ரக வாஸுதேவன் என்றவன் தங்களுக்கு ஓர் தூதனை அனுப்பினானே.

## தூதன் கூறிய செய்தி

नारायणोऽहमवतीर्ण इहास्मि भूमौ
धत्से किल त्वमपि मामकलक्षणानि ।
उत्सृज्य तानि शरणं व्रज मामिति त्वां
दूतो जगाद सकलैर्हसितः सभायाम् ॥ 2 ॥

நாராயணோऽஹமவதீர்ண இஹாஸ்மி பூமௌ
தத்ஸே கில த்வமபி மாமகலக்ஷணாநி ।
உத்ஸ்ருஜ்ய தாநி சரணம் வ்ரஜ மாமிதி த்வாம்
தூதோ ஜகாத ஸகலைர்ஹஸித: ஸபாயாம் ॥

ஹே குருவாயூரப்பா, அது சமயம், நான் தான் (நாராயணன், மஹாவிஷ்ணு) இங்கு பூமியில் அவதாரம் செய்து இருக்கிறேன். நீ என் லக்ஷணமான சங்கம், சக்ரம், முதலியவைகளை தரித்துக்கொண்டிருக்கிறாய். அவைகளை விட்டுவிட்டு என்னை சரணமாக வந்து அடைவாய் என்று பௌண்ட்ரக வாஸுதேவன் கூறியனுப்பியதை அவன் தூதன் தங்களிடம் கூறினான். இதைக் கேட்ட தங்கள் சபையில் உள்ள உக்ரஸேனன் முதலிய யாவரும் அவனை சிரித்தார்களாமே.

## பகவான் பௌண்ட்ரகனைக் காண்பது

दूतेऽथ यातवति यादवसैनिकैस्त्वं
यातो ददर्शिथ वपुः किल पौण्ड्रकीयम् ।
तापेन वक्षसि कृताङ्कमनल्पमूल्यश्री-
कौस्तुभं मकरकुण्डलपीतचेलम् ॥ 3 ॥

தூதேऽத யாதவபதி யாதவஸைநிகைஸ்த்வம்
யாதோ ததர்சித வபு: கில பௌண்ட்ரகீயம் |
தாபேந வக்ஷஸி க்ருதாங்க மநல்பமூல்ய—
ஸ்ரீ கௌஸ்துபம் மகரகுண்டலபீதசேலம் ||

ஹே குருவாயூரப்பா, தூதன் திரும்பிச் சென்றதும் தாங்கள் யாதவ ஸேனைகளுடன், அவன் இருக்கும் இடம் சென்றீர். அங்கு பௌண்ட்ரக வாஸுதேவன் தன் மார்பில் ஸ்ரீவத்ஸமென்ற மச்சத்திற்காக, சூடு போட்டுக் கொண்டும் மிக்க விலை உயர்ந்த கௌஸ்துபம் என்ற மணியையும் மகர குண்டலங்களையும் பீதாம்பரத்தையும் தரித்துக் கொண்டிருப்பதாய்க் கண்டீராமே.

### பௌண்ட்ரக வாஸுதேவனின் வதம்

कालायसं निजसुदर्शनमस्यतोऽस्य
कालानलोत्करकिरेण सुदर्शनेन ।
शीर्षं चकर्तिथ ममर्दिथ चास्य सेनां
तन्मित्रकाशिपशिरोऽपि चकर्थ काश्याम् ॥ 4 ॥

காலாயஸம் நிஜ ஸுதர்ச்ன மஸ்யதோऽஸ்ய
காலாநலோத்கரகிரேண ஸுதர்சனேன |
சீர்ஷம் சகர்தித மமர்தித சாஸ்ய ஸேநாம்
தந்மித்ரகாசிபசிரோऽபி சகர்த காச்யாம் ||

ஹே குருவாயூரப்பா, அந்த பௌண்ட்ரக வாஸுதேவன், கருத்த இரும்பால் செய்த தன் ஸுதர்சன சக்ரத்தை தங்கள்மேல் போட்டான் உடன் தாங்கள் ப்ரலயகாந்திய அக்னிகளை கக்குகிற (தங்களுடைய திவ்யமான) ஸுதர்சன சக்ரத்தால் அந்த பௌண்ட்ரக வாஸுதேவனுடைய தலையை அறுத்தீர். அவனுடைய சேனையையும் நாசம்

செய்தீர். அவனுடைய ஸ்னேகிதனை காசி தேசத்தரச னின் தலையையும் அறுத்து அதை காசியில் விழும்படி செய்தீராமே.

## பௌண்ட்ரகன் ஸாயுஜ்ய மடைவது

जाड्येन बालकगिराऽपि किलाहमेव
श्रीवासुदेव इति रूढमतिश्चिरं सः ।
सायुज्यमेव भवदैक्यधिया गतोऽभूत्
को नाम कस्य सुकृतं कथमित्यवेयात् ॥ 5 ॥

ஜாட்யேந பாலககிராபி கிலாஹமேவ
ஸ்ரீ வாஸுதேவ இதி ரூடமதிச்சிரம் ஸ: |
ஸாயுஜ்யமேவ பததைக்யதியா கதோऽபூத்
கோ நாம கஸ்ய ஸுக்ருதம் கதமித்யவேயாத் ||

ஹே குருவாயூரப்பா, மூடத் தன்மையாலும் சிறுவர் களின் பேச்சாலும், தானே ஸ்ரீ வாஸுதேவன் என்று வெகுநாளாய் எண்ணங்கொண்டிருந்த அந்த பௌண்ட்ரக வாஸுதேவன் தங்கள் ஒருவரிடத்திலேயே எப்பொழுதும் புத்தியை செலுத்தியதால் ஸாயுஜ்யத்தை (மோக்ஷத்தை) யடைந்தான். யாருடைய புண்யத்தை எவ்விதமென்று யாரால்தான் அறிய முடியும்.

## ஸுதக்ஷிணன் பகவானுக்கு ஆபிசாரம் செய்வது

काशीश्वरस्य तनयोऽथ सुदक्षिणाख्यः
शर्वं प्रपूज्य भवते विहिताभिचारः ।
कृत्यानलं कमपि बाणरणातिभीतैर्भूतैः
कथञ्चन वृतैः सममभ्यमुञ्चत् ॥ 6 ॥

காசீச்வரஸ்ய தநயோऽத ஸுதக்ஷிணுக்ய:
சர்வம் ப்ரபூஜ்ய பவதே விஹிதாபிசார: |
க்ருத்யாநலம் கமபி பாணரணுதிபீதை—
ர்பூதை: கதஞ்சந வ்ருதை: ஸமமப்யமுஞ்சத் ||

ஹே குருவாயூரப்பா, அது சமயம் காசி தேசத்தரச னின் குமாரனுன ஸுதக்ஷிணன் என்றவன் பரமேச்வரனே நன்கு பூஜித்து அந்த பலத்தினுல் தங்களைக் குறித்து ஆபி சாரம் செய்தான். அதாவது, முன்பு பாணுசுரன் யுத்தத்தில் பயந்த (பரமேச்வரனின்) பூதகணங்களை மிகவும் நிர்பந்தம் செய்து அழைத்து வந்து அவைகளுடன் கூறமுடியாத ஆபி சார அக்னியை தங்களிடம் ஏவினுனுமே.

### பகவான் காலசக்ரத்தை அனுப்புவது

तालप्रमाणचरणामखिलं दहन्तीं
कृत्यां विलोक्य चकितैः कथितोऽपि पौरैः ।
द्यूतोत्सवे किमपि नो चलितो विभो त्वं
पार्श्वस्थमाशु विससर्जिथ कालचक्रम् ॥ 7 ॥

தாலப்ரமாண சரணுமகிலம் தஹந்தீம்
க்ருத்யாம் விலோக்ய சகிதை: கதிதோபி பௌரை:
த்யூதோத்ஸவே கிமபி நோ சலிதோ விபோ த்வம்
பார்ச்வஸ்தமாசு விஸஸர்ஜித காலசக்ரம் ||

ஹே குருவாயூரப்பா, பனைமர உயர முள்ள காலையுடை தும் எங்கும் எரிக்கிறதுமான அந்த ஆபிசார அக்னியி லிருந்து கிளம்பிய பிசாசைக் கண்டு மிக்க பயங் கொண்ட பட்டணத்து ஜனங்கள் தங்களிடம் கூறினுர்கள். ஆயினும் ஹே ப்ரபோ சூதாட்டத்தின் உற்சாகத்திலிருந்து சிறிதும் கலங்காமல் தாங்கள், பக்கத்திலிருந்த கால சக்ரத்தை ஏவினீராமே.

### ஏவியவனையே ஆபிசார தேவதை எரித்தல்

अभ्यापतत्यमितधाम्नि भवन्महास्त्रे
हा हेति विद्रुतवती खलु घोरकृत्या ।
रोषात्सुदक्षिणमदक्षिणचेष्टितं तं
पुप्लोष चक्रमपि काशिपुरीमदाक्षीत् ॥ 8 ॥

*அப்யாபதத்யமிததாம்நி பவந்மஹாஸ்த்ரே*
*ஹா ஹேதி வித்ருதவதீ கலு கோரக்ருத்யா |*
*ரோஷாத் ஸுதக்ஷிணமதக்ஷிண சேஷ்டிதம் தம்*
*புப்லோஷ சக்ரமபி காசிபுரீமதாக்ஷீத்*

ஹே குருவாயூரப்பா, மிக்க தேஜஸ்வாய்ந்த தங்கள் பெரிய ஸுதர்சனஸ்திரம் எதிர்த்ததும் அந்த ஆபிசார தேவதையானது ஹா! ஹா! என்று சப்தித்துக் கொண்டே வேகமாய் ஓடி தன்னை ஏவிய சாமர்த்திய மற்ற செய்கையுள்ள அந்த சுதக்ஷிணனை எதிர்த்தது, தங்கள் சக்ரம் காசி நகரத்தையும் எரித்ததாமே.

### விவிதனைக் கொன்றது

स खलु विविदो रक्षोघाते कृतोपकृतिः पुरा
तव तु कलया मृत्युं प्राप्तुं तदा खलतां गतः ।
नरकसचिवो देशक्लेशं सृजन्नगरान्तिके
झटिति हलिना युध्यन्नद्धा पपात तलाहतः ॥ 9 ॥

*ஸ கலு விவிதோ ரக்ஷோகாதே க்ருதோபக்ருதி: புரா*
*தவ து கலயா ம்ருத்யும் ப்ராப்தும் ததா கலதாம் கத: |*
*நரகஸசிவோ தேசக்லேசம் ஸ்ருஜந் நகராந்திகே*
*ஜடிதி ஹலிநா யுத்யந்நத்தா பபாத தலாஹத: ||*

ஹே குருவாயூரப்பா, முன்பு த்ரேதா யுகத்தில் ராமா வதார சமயம் ராவண வதத்தின் பொழுது உபகாரம் செய்த த்விவிதன் என்றவன் தங்கள் கிருஷ்ணுவதாரம் செய்த பொழுது அவன் கெட்ட புத்தியை யடைந்தான். அதாவது நரகாசுரனுக்கு மந்திரியாக இருந்து தங்கள் தேசத்திற்கு தீங்கு செய்து கொண்டிருந்தான். துவா ரகைக்குப் பக்கத்தில் தங்கள் அண்ணுவான பலராமன் அவனேடு யுத்தம் செய்து, சீக்கிரம் சிரமமின்றி கையினுல் அடித்தார். அவனும் கீழே விழுந்தானுமே.

## நம்பூதிரியின் பிரார்த்தனை

साम्बं कौरव्यपुत्रीहरणनियमितं सान्त्वनार्थी कुरूणां
यातस्तद्वाक्यरोषोद्धृतकरिनगरो मोचयामास रामः ।
ते घात्याः पाण्डवेयैरिति यदुपृतनां नामुचस्त्वं तदानीं
तं त्वां दुर्बोधलीलं पवनपुरपते तापशान्त्यै निषेवे ॥10॥

ஸாம்பம் கௌரவ்ய புத்ரீஹரண நியமிதம் ஸாந்த்வ-
நார்தீ குருணும்
யாதஸ்தத்வாக்ய ரோஷோத் த்ருதகரிநகரோ
மோசயமாஸ ராம: |
தே காத்யா: பாண்டவேயைரிதி யதுப்ருதநாம்
நாமுசஸ்த்வம் ததாநீம்
தம் த்வாம் துர்போதலீலம் பவனபுரபதே தாப
சாந்த்யை நிஷேவே ||

ஹே குருவாயூரப்பா, துரியோதனனுடைய பெண்ணை லக்ஷ்மணையை அபஹரித்ததற்காக ஸாம்பன், அவர்களால் கட்டுண்டதை யறிந்து பலராமன் ஸமாதானத்தை விரும்பி அங்கு சென்ருர் அனல் அவர்களின் பேச்சால் கோப மடைந்து அந்நகரையே கலப்பையால் கிளப்பி அந்த ஸாம்பனை விடுவித்தார். அது சமயம் கௌரவர்களை,

பாண்டவர்கள் தான் கொல்ல வேண்டும் என்று எண்ணங் கொண்டு, தாங்கள் யாதவ ஸேனையை அங்கு அனுப்ப வில்லை. அறிய முடியாத லீலைகளை உடைய தங்களை தர்பம் நீங்குவதற்காக ஸேவிக்கிறேன் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் ஆம், என தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ குருவாயூரப்பனின் மஹிமை

போலீஸ் இலாகாவில் பெரிய உத்யோகத்தில் இருந்த ஒருவருக்கு வண்டுகடியினால் இரண்டு கால்களிலும் (எக்ஸீமா) என்ற வியாதி எற்பட்டு விட்டது. அதற்கு அவர் சென்னையில் பல பல வைத்தியர்களிடம் சிகிச்சை செய்து கொண்டும் வியாதி தீரவில்லை. அவருக்கு ஸ்ரீ நாராயணீ யத்தைப் படித்தால் அவ்வியாதி தீருமென்று ஓர் பெரியவர் சொன்னார். அதிலிருந்து நாராயணீயத்தை தினமும் விடாமல் ஒரு மாத காலம் படித்து வந்தார். ஒரே மாதத்தில் அவருடைய காலில் இருந்த வியாதி நீங்கி நாஸ்திகர்களும் ஆச்சர்யபடும்படி ஆகிவிட்டது. இது நாராயணீயத்தை பாராயணம் செய்ததின் மஹிமையாகும்.

—o—

### 84-வது தசகம்

### ஸூர்ய கிரஹணத்தன்று புண்ய தீர்த்தம் செல்வது

क्वचिदथ तपनोपरागकाले पुरि
निदधत्कृतवर्मकामसूनू ।
यदुकुलमहिलावृत: सुतीर्थं
समुपगतोऽसि समन्तपञ्चकाख्यम् ॥ 1 ॥

க்வசித த தபநோபராககாலே
புரி நிதத க்ருதவர்ம காமஸூநூ |
யதுகுல மஹிலாவ்ருத: ஸுதீர்தம்
ஸமுபகதோஸி ஸமந்தபஞ்சகாக்யம் ||

ஹே குருவாயூரப்பா, பிறகு ஒரு சமயம் சூர்ய கிரஹணத் தன்று, க்ருதவர்மாவையும் அநிருத்தனையும் துவாரகையில் வைத்து விட்டு தாங்கள் கோபிகைகளோடு ஸமந்தபஞ்சகம் என்னும் புண்ய தீர்த்தத்திற்குச் சென்றீராமே.

**பகவான் க்ரஹணத்தில் ஸ்நானம் தானம் செய்வது**

बहुतरजनताहिताय तत्र त्वमपि
पुनन् विनिमज्ज्य तीर्थतोयम् ।
द्विजगणपरिमुक्तवित्तराशिः
सममिलथाः कुरुपाण्डवादिमित्रैः ॥ 2 ॥

பஹுதரஜனதாஹிதாய தத்ர த்வமபி
புநந் விநிமஜ்ஜ்ய தீர்த்தோயம் |
த்விஜகண பரிமுக்த வித்தராசி: ஸமமிலதா:
குருபாண்டவாதிமித்ரை: ||

ஹே குருவாயூரப்பா, தாங்கள் பல ஜனங்களுக்கு நன்மை உண்டு பண்ணுவதற்காக ஸ்நானம் செய்து அப் புண்ய தீர்த்தத்தை பாவனமாகச் செய்தீர். மேலும் பல பிராமணர்களுக்கு நிறைய பொருள்களை தானம் செய்து குருவம்சத்தில் பிறந்தவர்கள், பாண்டவர்கள் முதலிய ஸ்னேகிதர்களோடு சேர்ந்தீராமே.

## த்ரௌபதி பகவான் மணந்து கொண்டதைக் கேட்டு மகிழ்வது

तव खलु दयिता जनैः समेता
द्रुपदसुता त्वयि गाढभक्तिभारा ।
तदुदितभवताहृतिप्रकारैरतिमुमुदे
सममन्यभामिनीभिः ॥ 3 ॥

தவ கலு தயிதாஜனை: ஸமேதா
த்ருபதஸுதா த்வயி காட பக்தி பாரா |
ததுதித பவதாஹ்ருதி ப்ரகாரைரதிமுமுதே
ஸமமந்ய பாமிநீபி : ||

ஹே குருவாயூரப்பா, அது சமயம் தங்களிடத்தில் திருட மான பக்தியைக்கொண்ட திரௌபதி தங்கள் பிரியைகளான பத்னிகளோடு சேர்ந்து பேசினாள். மேலும் ருக்மினி, சத்ய பாமா பத்னிகளை ஒவ்வொருவரையும் தாங்கள் மணந்து கொண்ட முறைகளை அவர்கள் மூலம் கேட்டு மற்றப் பெண் களுடன் கூறி மிக்க சந்தோஷமடைந்தாளாமே.

## பகவான் கோபர்களையும் கோபிகைகளையும் வெகுமதித்தது

तदनु च भगवन्निरीक्ष्य गोपानति-
कुतुकादुपगम्य मानयित्वा ।
चिरतरविरहातुराङ्गरेखाः
पशुपवधूः सरसं त्वमन्वयासीः ॥ 4 ॥

ததநு ச பகவந்நிரீக்ஷ்ய கோபாந்
அதிகுதுகாதுபகம்ய மாநயித்வா ।
சிரதரவிரஹாதுராங்கரேகா: பசுபவதூ :
ஸரஸம் த்வமந்வயாஸீ : ॥

ஹே குருவாயூரப்பா, பிறகு நந்தன் முதலிய கோபர்களைப் பார்த்து சந்தோஷத்துடன் பக்கத்தில் சென்று அவர்களை வெகு காலம் பிரிவினால் வருந்தி இளைத்தவர்களான கோபிகைகளை அன்புடன் பின் தொடர்ந்து சென்றீராமே.

## பகவான் கோபிகைகளோடு ஆனந்தமனுபவித்தல்

सपदि च भवदीक्षणोत्सवेन
प्रमुषितमानहृदां नितम्बिनीनाम् ।
अतिरसपरिमुक्तकञ्चुलीके
परिचयहृद्यतरे कुचेन्यलैषीः ॥ 5 ॥

ஸபதி ச பவதீக்ஷணோத்ஸவேந
ப்ரமுஷிதமாநஹ்ருதாம் நிதம்பிநீநாம் ।
அதிரஸ பரிமுக்த கஞ்சுலீகே
பரிசயஹ்ருத்யதரே குசே ந்யலைஷீ : ॥

ஹே குருவாயூரப்பா, உடன் தங்களைப் பார்த்த சந்தோஷத்தினால் கோபிகைகளுடைய மனதில் உள்ள அஹங்காரம் நீங்கி விட்டது. அதிக அன்பினால் அவிழ்ந்த ரவிக்கைகளை உடையதும் முன் பரிசயத்தால் மிகவும் மனதைக் கவர்கிறதுமான அவர்களின் குசத்தில் தாங்கள் லயித்தீராமே.

## ராதை பகவானிடம் லயித்தல்

रिपुजनकलहैः पुनः पुनर्मे
समुगतैरियती विलम्भनाभूत् ।
इति कृतपरिरंभणे त्वयि द्रागति-
विवशा खलु राधिका निलिल्ये ॥ 6 ॥

*ரிபுஜனகலஹை: புந: புநர்மே*
*ஸமுபகதைரியதீ விலம்பநாऽபூத் |*
*இதி க்ருதபரிரம்பணே த்வயி*
*த்ராகதிவிவசா கலு ராதிகா நிலில்யே ॥*

ஹே குருவாயூரப்பா, (கோபிகைகளோடு பகவான் ரமிப்பதாக நினைத்து ராதை வருந்த கூடும், என நினைத்து) அடிக்கடி வந்த சத்ருக்களோடு போரிட நேர்ந்ததால் இவ்வளவு தாமதம் ஏற்பட்டது என்று தாங்கள் கூறிக்கொண்டே அந்த ராதையை ஆலிங்கனம் செய்துகொண்டீர். இதைக் கேட்டு மிக்க பரவசையாக ஆன அந்த ராதை தங்களிடத்திலேயே லயித்து விட்டாளாமே.

## பகவான் ஞானோபதேசம்

अपगतविरहव्यथास्तदा ता
रहसि विधाय ददाथ तत्त्वबोधम् ।
परमसुखचिदात्मकोऽहमात्मे-
त्युदयतु वः स्फुटमेव चेतसीति ॥ 7 ॥

*அபகத விரஹவ்யதாஸ்ததா தா*
*ரஹஸி விதாய ததாத தத்வபோதம் |*
*பரமஸுகசிதாத்மகோऽஹமாத்மே—*
*ஸ்யுதயது வ: ஸ்புடமேவ சேதஸீதி ॥*

ஹே குருவாயூரப்பா ஏகாந்தத்தில் அந்த கோபிகை களின் விரஹ தாபத்தைப் போக்கினீர் பிறகு நான் பரமா னந்த ரூபியும் சித்ஸ்வரூபமாயுமுள்ள பரமாத்மா, என்றது உங்கள் மனதில் ஸ்பஷ்டமாக தோன்றட்டும் என்று அக் கோபிகளுக்கு தாங்கள் தத்வக் ஞானத்தை அளித்தீராமே.

**கோபிகைகளின் ப்ரும்மானந்த சுகம்**

सुखरसपरिमिश्रितो वियोगः
किमपि पुराऽभवदुद्धवोपदेशैः ।
समभवदमुतः परन्तु तासां
परमसुखैक्यमयी भवद्विचिन्ता ॥ 8 ॥

*சுகரஸபரி மிச்ரிதோ வியோக : கிமபி*
*புராऽபவதுத்தவோபதேசை : ।*
*ஸமபவதமுத : பரந்து தாஸாம்*
*பரமஸுகைக்யமயீ பவத்விசிந்தா ॥*

ஹே குருவாயூரப்பா, அக்கோபிகைகளுடைய விரஹ துக்கம் முன்பு உத்தவர் உபதேசத்தால் கொஞ்சம் ஆனந்த ரஸம் கலந்ததாக ஆயிற்று. அந்த விரஹ துக்கம் பொறுக்க கூடியதாக ஆயிற்று. இந்த தங்கள் உபதேசத்திற்குப் பிறகு அவர்களுடைய, தங்களைப்பற்றிய நினைவு, ப்ரும்மானந்த சுகமயமாகவே ஆனதாமே.

**வஸுதேவர் பாபம் விலக யாகம் செய்வது**

मुनिवरनिवहैस्तवाथ पित्रा
दुरितशमाय शुभानि पृच्छ्यमानैः ।
त्वयि सति किमिदं शुभान्तरैरित्यु-
रुहसितैरपि याजितस्तदाऽसौ ॥ 9 ॥

முனிவர நிவஹைஸ்தவாத பித்ரா
துரிதசமாய சுபாநி ப்ருச்சயமாநை: |
த்வயி ஸதி கிமிதம் சுபாந்தரைரி—
த்யுருஹஸிதைரபி யாஜிதஸ்ததா஽ஸௌ ||

ஹே குருவாயூரப்பா, அது சமயம் தங்கள் தந்தையான வஸுதேவர் பாபம் விலக என்ன நற்கார்யங்கள் செய்ய வேண்டும் என்று வ்யாஸர், நாரதர், முதலியவர்களைக் கேட்டார். இதைக் கேட்ட மஹரிஷிகள் ஸ்ரீ பகவானை தாங்கள் சமீபத்தில் இருக்கும் போது வேறு சுபகர்மங்களால் என்ன பிரயோஜனம் என்று மிக்க சிரித்தார்கள், ஆனாலும் வஸுதேவரின் கோரிக்கைக்காக யாகம் செய்து வைத்தார்களாமே.

## யாகத்தில் கோபர்களை ஆனந்திக்கச் செய்வது

सुमहति यजने वितायमाने
प्रमुदित मित्रजने सहैव गोपाः ।
यदुजनमहिता स्त्रिमासमात्रं
भवघनुषङ्गरसं पुरेव भेजुः ॥ 10 ॥

ஸுமஹதி யஜநே விதாயமாநே
ப்ரமுதிதமித்ரஜனே ஸஹைவ கோபா: |
யது ஜன மஹிதாஸ் த்ரிமாஸ மாத்ரம்
பவதநுஷங்கரஸம் புரேவ பேஜு: ||

ஹே குருவாயூரப்பா, அப்பெரிய யக்ஞமும் ஆரம்பித்து நடந்து கொண்டிருந்தது. சந்தோஷத்துடன் பல ஸ்னேகிதர் வந்திருந்தார்கள் கோபர்களும் யாதவர்களால் வெகு மதிக்கப் பட்டார்கள், இவ்விதம் அவர்கள் மூன்று மாத காலம் தங்கள் சேர்க்கையால் உண்டான சுகத்தை முன் போலவே அடைந்தார்களாமே.

## பகவான் துவாரகை திரும்புவது

व्यपगमसमये समेत्य राधां
दृढमुपगृह्य नीरीक्ष्य वीतखेदाम् ।
प्रमुदितहृदयः पुरं प्रयातः
पवनपुरेश्वर पाहि मां गदेभ्यः ॥ 11 ॥

வ்யபகமஸமயே ஸமேத்ய ராதாம்
த்ருடமுபக்ருஹ்ய நிரீக்ஷ்ய வீதகேதாம் |
ப்ரமுதிதஹ்ருதய: புரம் ப்ரயாத:
பவநபுரேச்வர பாஹி மாம் கதேப்ய : ||

பிறகு யாகம் முடிந்ததும் திரும்பும்பொழுது ராதையிடம் சென்று அவளை திருடமாய் ஆலிங்கனம் செய்துகொண்டீர் அதனால் அந்த ராதையும் துக்கமற்று இருப்பதைக் கண்டு மிகுந்த சந்தோஷங்கொண்டு துவாரகை திரும்பிய ஹே குருவாயூரப்பா. வியாதிகளிலிருந்து என்னைக் காக்க வேண்டும், என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் ஆம் என தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ அப்பனின் மஹிமை

இங்கு பெங்களூரில் ஆஸ்திக குடும்பத்தைச் சேர்ந்த ஓர் அம்மாள் தனது குழந்தையை மெடிகல் காலேஜில் சேர வேண்டுவதற்காக மனுச் செய்திருந்தாள். ஆனால் இவர்களது குழந்தையை சேரும்படிக்கு மனு வரவில்லை. உடனே ஸ்ரீ குருவாயூரப்பனின் படத்திற்கு நமஸ்கரித்து வேண்டிக் கொண்டு என்னிடமும் வந்து கவலையை தெரிவித்தாள். ஸ்ரீ அப்பனை வேண்டிக் கொள்ளுங்கள் நிச்சயம் கிடைக்கும் என்று நானும் சொன்னேன்.

அது போல் வேண்டிக் கொண்டு சில தினங்களிலேயே சிரமமில்லாமல் இடம் கிடைத்து விட்டது. அந்த அம்மாள் நித்யம் ஸ்ரீ அப்பனின் படத்திற்கு பூஜை செய்து ஸ்ரீ நாராயணீயத்தை பாராயணம் செய்து வந்ததே இதற்குக் காரணமாகும். தெய்வத்தின் அருளால் எந்தக் காரியத்தைத்தான் சாதிக்க முடியாது.

—o—

## 85-வது தசகம்

### ஜராஸந்தனால் சிறையிலிடப்பட்ட அரசர்கள் பகவானுக்கு தூது அனுப்புதல்

ततो मगदभूभृता चिरनिरोधसंक्लेशितं
शताष्टकयुतायुतद्वितयमीशभूमिभृताम् ।
अनाथशरणाय ते कमपि पूरुषं प्राहिणो-
दयाचत स मागधक्षपणमेव किं भूयसा ॥ 1 ॥

*ததோ மகதபூப்ருதா சிரநிரோதஸம்க்லேசிதம்*
*சதாஷ்டகயுதாயுதத்விதயமீச பூமிப்ருதாம் |*
*அநாதசரணாய தே கமபி பூருஷம் ப்ராஹிணோ —*
*தயாசத ஸ மாகதக்ஷபணமேவ கிம் பூயஸா ||*

ஈசனான ஹே குருவாயூரப்பா, பிறகு மகத தேசத்தரசனான ஜராஸந்தன் இருபதினாயிரத்து எண்ணூறு (20800) அரசர்களை சிறையில் வெகுகாலமாய் அடைத்திருந்தான். அதனால் அவர்கள் வருத்தமுற்று அநாத ரக்ஷகனான தங்களுக்கு யாரோ ஒரு புருஷனை தூதாக அனுப்பினார்கள்.

அதிகம் கூறுவதால் என்ன பிரயோஜனம் அந்த தூதன் மகத தேசத்தரசனை வதம் செய்ய வேண்டினானே.

## பகவான் இந்திரப்ரஸ்தம் செல்வது

यियासुरभिमागधं तदनु नारदोदीरिता-
युधिष्ठिरमखोद्यमादुभयकार्यपर्याकुलः ।
विरुद्धजयिनोऽध्वरादुभयसिद्धिरित्युद्धवे
शशंसुषि निजैः समं पुरमियेथ यौधिष्ठिरीम् ॥ 2 ॥

*யியாஸுரபிமாகதம் ததநு நாரதோதீரிதா—*
*த்யுதிஷ்டிரமகோத்யமாதுபயகார்ய பர்யாகுல: |*
*விருத்தஜயிநோऽத்வராதுபயஸித்திரித்யுத்தவே*
*சசம்ஸுஷி நிஜை: ஸமம் புரமியேத யௌதிஷ்டிரீம் ||*

ஹே குருவாயூரப்பா, தாங்கள் ஜராஸந்தனுடன் யுத்தம் செய்ய மகத தேசத்திற்கு புறப்பட விரும்பிய பொழுது நாரதர். யுதிஷ்டிரர் யாகம் செய்ய முயர்சிக்கிறார் என்று கூறினார். இவ்விரண்டையும் கேட்ட தாங்கள் (எங்கு முதலில் செல்வது என்ற எண்ணத்தினால்) கலங்கினீர். அது சமயம் உத்தவர், விரோதிகளை ஜயித்து இந்த யாகம் செய்ய வேண்டு மாதலால், இவ்விரண்டுமே ஒரே சமயம் கைகூடிவிடும் என்று கூறினார். உடன் யாதவர்களோடு தாங்கள் பாண்டவர்கள் வஸிக்கும் இந்திரபிரஸ்தம் சென்றீரானமே.

## தர்மபுத்திரர் பகவானை ஜராஸந்தனிடம் அனுப்புவது

अशेषदयितायुते त्वयि समागते धर्मजो
विजित्य सहजैर्महीं भवदपाङ्गसंवर्धितैः ।
श्रियं निरुपमां वहन्नहह भक्तदासायितं
भवन्तमयि मागधे प्रहितवान् सभीमार्जुनम् ॥ 3 ॥

அசேஷதயிதாயுதே த்வயி ஸமாகதே தர்மஜோ
விஜித்ய ஸஹஜைர்மஹீம் பவதபாங்கஸம்வர்திதை:
ச்ரியம் நிருபமாம் வஹந்நஹஹ பக்ததாஸாயிதம்
பவந்தமயி மாகதே ப்ரஹிதவாந் ஸபீமார்ஜுநம் ||

ஹே குருவாயூரப்பா, எல்லா மனைவிகளையும் அழைத்துக் கொண்டு தாங்கள் இந்திரப்ரஸ்தம் சென்றீர். உடன் தர்மபுத்திரர் தங்கள் கடாக்ஷத்தினால் பலம் பெற்ற சகோதரர்களைக் கொண்டு பூமி முழுவதையும் ஜயித்தார். அதனால் நிகரற்ற பொருள்களையும் பெற்றார். பிறகு பக்தர்களுக்கு தாஸனாய் இருக்கும் தங்களை பீமனுடனும் அர்ஜுனனுடனும், ஜராஸந்தனிடம் அனுப்பினாராமே.

**ஜராஸந்தனோடு பீமனை யுத்தம் செய்யச் செய்வது**

गिरिव्रजपुरं गतास्तदनु देव यूयं त्रयो
यया च समरोत्सवं द्विजमिषेण तं मागधम् ।
अपूर्णसुकृतं त्वमुं पवनजेन सङ्ग्रामयन्
निरीक्ष्य सह जिष्णुना त्वमपि राजयुध्वा स्थितः ॥ 4 ॥

கிரிவ்ரஜபுரம் கதாஸ்ததநு தேவ யூயம் த்ரயோ
யயாச ஸமரோத்ஸவம் த்விஜமிஷேண தம் மாகதம் |
அபூர்ணஸுக்ருதம் த்வமும் பவநஜேந ஸங்க்ராமயந்
நிரீக்ஷ்ய ஸஹ ஜிஷ்ணுநா த்வமபி ராஜயுத்வாஸ்தித: ||

தேவனே ஹே குருவாயூரப்பா, தாங்கள் பீமன், அர்ஜுனன் மூவரும் கிரிவ்ரஜம் என்ற நகரத்திற்குச் சென்று பிராமண வேஷத்துடன் ஜராஸந்தனிடம் யுத்தோத்ஸவத்தை யாசித்தீர்கள். பிறகு புண்யம் நிரம்ப இல்லாத அந்த ஜராஸந்தனை பீமனோடு யுத்தம் செய்யும்படி செய்தீர். அரசர்களை யுத்தம் செய்யும்படி செய்து கொண்டு அந்த அர்ஜுனனுடன் பார்த்துக் கொண்டே இருந்தீராமே.

## ஜராஸந்தனை வதம் செய்து அரசர்களுக்கு ராஜ்யமளித்தது

अशान्तसमरोद्धतं विटपपाटनासंज्ञया
निपात्य जरसः सुतं पवनजेन निष्पाटितम् ।
विमुच्य नृपतीन्मुदा समनुगृह्य भक्तिं परां
दिदेशिथ गतस्पृहानपि च धर्मगुप्त्यै भुवः ॥ 5 ॥

அசாந்தஸமரோத்ததம் விடபபாடநாஸம்க்ஞயா
நிபாத்ய ஜரஸ: ஸுதம் பவநஜேந நிஷ்பாடிதம் |
விமுச்ய ந்ருபதீந்முதா ஸமநுக்ருஹ்ய பக்திம்பராம்
திதேசித கதஸ்ப்ருஹாநபி ச தர்மகுப்த்யை புவ: ||

ஹே குருவாயூரப்பா, முடிவடையாத அந்த யுத்தத்தால் கொழுப்படைந்த ஜராஸந்தனை மரக்கிளையை முறிப்பதாக ஸமிக்ஞை செய்து பீமனைக் கொண்டு முறித்து (இரண்டாகக் கிழித்து) கீழே விழச் செய்தீர். பிறகு சந்தோஷத்துடன் அரசர்களை விடுவித்தீர். மேலும் அவர்களுக்கு சிறந்த பக்தியையும் கொடுத்து அதனால் ஒன்றிலும் ஆசையற்றிருந்த அவர்களை பூமியை தர்மத்துடன் ஆளும்படி ஆக்ஞாபித்தீராமே.

## ராஜஸூயத்தில் பகவான் வேதமறிந்தவர்களின் பாதத்தை அலம்புவது

प्रचक्रुषि युधिष्ठिरे तदनु राजसूयाध्वरं
प्रसन्नभृतकीभवत्सकलराजकव्याकुलम् ।
त्वमप्ययि जगत्पते द्विजपदावनेजादिकम्
चकर्थ किमु कथ्यते नृपवरस्य भाग्योन्नतिः ॥ 6 ॥

ப்ரசக்ருஷி யுதிஷ்டிரே ததநு ராஜஸூயாத்வரம்
ப்ரஸந்நப்ருதகீபவத்ஸகலராஜகவ்யாகுலம் |
த்வமப்யயி ஜகத்பதே த்விஜபதாவநே ஜாதிகம்
சகர்த கிமு கத்யதே ந்ருபவரஸ்ய பாக்யோந்நதி: ||

ஹே குருவாயூரப்பா, பிறகு தர்மபுத்திரர் ராஜஸூயம் என்றும் யாகத்தைச் செய்யத் தொடங்கினர். அதற்கு தர்ம புத்திரருக்கு வசமான எல்லா அரசர்களும் சந்தோஷத் துடன் வந்திருந்தார்கள். ஹே உலகத்திற்கெல்லாம் நாய கனே தாங்கள் அந்த யாகத்திற்கு வரும் பிராமணர்களுக்கு பாதத்தை அலம்புவது, தன் பட்டு வஸ்திரத்தால் துடைப் பது முதலிய பணிவிடைகளைச் செய்தீராமே.

## ராஜஸூயத்தில் ஸ்ரீ பகவானை பூஜித்தல்

ततः सवनकर्मणि प्रवरमग्र्यपूजाविधिं
विचार्य सहदेववागनुगतः स धर्मात्मजः ।
व्यधत्त भवते मुदा सदसि विश्वभूतात्मने
तदा ससुरमानुषं भुवनमेव तृप्तिं दधौ ॥ 7 ॥

தத: ஸவநகர்மணி ப்ரவரமக்ர்ய பூஜாவிதிம்
விசார்ய ஸஹதேவவாகநுகத: ஸ தர்மாத்மஜ :
வ்யதத்த பவதே முதா ஸதஸி விச்வபூதாத்மநே
ததா ஸஸுரமாநுஷம் புவநமேவ த்ருப்திம் ததௌ ||

ஹே குருவாயூரப்பா, அந்த ராஜஸூய யாகத்தில் வந்த வர்களில் சிறந்தவரான ஒருவரை முதலில் பூஜிப்பது ஒரு முக்கிய அம்சமாகும். அவ்விதம் தர்மபுத்திரர் யாரை முதலில் பூஜை செய்வது என்று சற்று யோசித்தார். அது சமயம்

ஸகதேவன் எழுந்து "நம் குல தெய்வமான ஸ்ரீ கிருஷ்ணனையே பூஜை செய்யுங்கள்." எனக் கூறினுன். இதைக் கேட்டு தர்மபுத்திரரும் சந்தோஷத்துடன் உலக மக்களின் அந்தர்யாமியாக இருக்கும் தங்களை அந்த சபையில் பூஜித்தாராமே. அவ்வமயம், தேவர்கள், மனிதர்கள், உலகம் முழுவதும் மிக்க ஆனந்தமடைந்ததாமே.

### பகவானை சிசுபாலன் நிந்தித்தது

ततः सपदि चेदिपो मुनिनृपेषु तिष्ठत्स्वहो
सभाजयदि को जडः पशुपदुर्दुरूटं वटुम् ।
इति त्वयि स दुर्वचोवितति मुद्वमन्नासना-
दुदापतदुदायुधः समपतन्नमुं पाण्डवाः ॥ 8 ॥

தத: ஸபதி சேதிபோ முனிந்ருபேஷு திஷ்டத்ஸ்வஹோ
ஸபாஜயதி கோ ஜட: பசுபதுர்துருடம் வடும் |
இதி த்வயி ஸ துர்வசோவிததிமுத்வமந்நாஸநா
துதாபததுதாயுத: ஸமபதந்நமும் பாண்டவா: ||

ஹே குருவாயூரப்பா, பிறகு எல்லா அரசர்களும் அங்கு கூடியிருந்தார்கள். அது சமயம் சேதி தேசத்தரசனுன சிசுபாலன் எந்த முட்டாள் இடையர்களுக்குள் மட்டமானவனும் சிறியவனுமான கிருஷ்ணனை மதிக்கிறுன் என்று சொன்னுன். மேலும் இவ்விதம் தங்களை வரிசை வரிசையாய் கெட்ட வார்த்தைகளை கக்கிகொண்டும் ஆயுதத்தைக் தாங்கிக் கொண்டும் ஆசனத்திலிருந்து எழுந்து வந்தான், உடன் அந்த சிசுபாலனை பாண்டவர்கள் எதிர்த்தார்களாமே.

निवार्य निजपक्षगानभिमुखस्य विद्वेषिण-
स्त्वमेव जहृषे शिरो दनुजदारिणा स्वारिणा ।
जनुस्त्रितयलब्धया सततचिन्तया शुद्धधी-
स्त्वया स परमेकतामधृत योगिनां दुर्लभाम् ॥ 9 ॥

நிவார்ய நிஜபக்ஷகானபிமுகஸ்ய வித்வேஷிண —
ஸ்த்வமேவ ஜஹ்ருஷே சிரோ தநுஜதாரிணா
ஸ்வாரிணா ।
ஜநுஸ்ரிதயலப்தயா ஸததசிந்தயா சுத்ததீ
ஸ்த்வயா ஸ பரமேகதாமத்ருத யோகினாம் துர்லபாம் ॥

ஹே குருவாயூரப்பா, தன் பக்கத்திய சைந்யங்களை தடுத்து, எதிர்த்து வரும் சத்ருவான சிசுபாலனுடைய தலையை தானவர்களை பிளக்கும் தன் ஸுதர்சன சக்கரத்தால் தாங்களே அறுத்தீர். மூன்று ஜன்மாவிலும் தங்களையே எப்பொழுதும் நினைத்து வந்ததால் சுத்த மனமுள்ளவனுமான சிசுபாலன், யோகிகளுக்கும் கிடைக்காத ஒன்றாய் கலந்தானுமே.

## துரியோதனன் கெட்ட எண்ணத்தின் பயன்

ततः सुमहिते त्वया क्रतुवरे निरूढे जनो
ययौ जयति धर्मजो जयति कृष्ण इत्यालपन् ।
खलः स तु सुयोधनो धुतमनाः सपत्नश्रिया
मयार्पितसभामुखे स्थलजलभ्रमादभ्रमीत् ॥ 10 ॥

ததः ஸமாப்தே த்வயா க்ருதுவரே நிரூடே ஜனை:
யயெள ஜயதி தர்மஜோ ஜயதி க்ருஷ்ண இத்யாலபந் ।
கலஸ்ஸ து ஸுயோதநோ துதமநா: ஸபத்னச்ரியா
மயார்பிதஸபாமுகே ஸ்தலஜலப்ரமாதப்ரமீத் ॥

ஹே குருவாயூரப்பா, தங்களால் வெகுமதிக்கப்பட்ட அந்த ராஜஸூய யாகம் முடிவடைந்தது. எல்லா ஜனங்களும், தர்மபுத்திரர் ஸர்வோத்க்ருஷ்டமாய் விளங்குகிறார் என்று கூறிக்கொண்டே சென்றார்கள். பிறகு துஷ்டனான அந்த துர்யோதனன் தன் சத்ருவான பாண்டவர்கள் மிக்க பெருமையால் இருப்பதைக்கண்டு மனம் நொந்து மயனைக் கொண்டு நிர்மாணம் செய்யப்பட்ட சபைக்கு வந்தான். ஸபையின் முன் பாகத்தில் ஜலம் தரை போலவும், தரை ஜலம் போலவும் மயன் நிர்மாணம் செய்திருந்தான். அதை கண்டு துர்யோதனன் கோபத்தை யடைந்தானே.

## பகவான் பூபாரத்தைப் போக்க விதை விதைத்தது

तदा हसितमुत्थितं द्रुपदनन्दनाभीमयो-
रपाङ्गकलया विभो किमपि तावदुज्जृम्भयन् ।
धराभरनिराकृतौ सपदि नाम बीजं वपन्
जनार्दन मरुत्पुरीनिलय पाहि मामामयात् ॥ 11 ॥

ததா ஹஸிதமுத்திதம் த்ருபதநந்தநாபீமயோ—
ரபாங்ககலயா விபோ கிமபி தாவதுஜ்ஜ்ரும்பயந்
தராபரநிராக்ருதௌ ஸபதி நாம பீஜம் வபந்
ஜனார்தந மருத்புரீநிலய பாஹி மாமாமயாத் ॥

ஹே ப்ரபுவே, அப்பொழுது (துரியோதனன் அறியாமையால் சறுக்கி விழும்பொழுது) திரௌபதியும், பீமஸேனனும், சிரித்தார்கள். உடன் தாங்கள் கடைக்கண் பார்வையால் அவர்களை அதிகமாய் சிரிக்கும்படி செய்தீர். தாங்கள் அவ்விதம் செய்தது பூபாரத்தை போக்க விதை விதைத்ததாக ஆயிற்று. துஷ்ட ஜனங்களுக்கு துன்பத்தை விளைவிக்கும், ஏ குருவாயூரப்பா, வியாதியிலிருந்து என்னைக் காற்க வேண்டும்.

—o—

## ஸ்ரீ குருவாயூரப்பனின் மஹிமை

பெங்களூரில் ஓர் பிரபல வியாபாரியிடம் கார்டிரைவராக ஓர் நாயர் இருந்து வருகிறார். அவருக்கு ஸ்ரீ அப்பனிடம் அளவு கடந்த பக்தி. நித்யம் ஸ்ரீ நாராயணீயத்தை பாராயணம் செய்து வருகிறார், மல்லேஸ்வரத்திலிருந்து என்னை நித்யம் பரம பக்தரான ஸ்ரீ கிருஷ்ண பாகவதர் ஸ்ரீராமமந்திரத்துக்கு இந்த டிரைவர் அழைத்துப் போவது வழக்கம். ஒரு தினம் சீக்கிரமாக கார் ஓட்டி வரும் போது ஓர் சின்னப் பையன் தீடீரென எதிர்த்து ஓடிவந்து விட்டான். அப்போது மூன்று இஞ்சு தூரம் தான் பையனுக்கும் காருக்கும் இடையில் உள்ளது. அப்போது டிரைவருக்கு கார்வேகமாக வந்ததால், பிரேக் போட முடியாமல் கை கால்கள் எல்லாம் உதரல் கண்டு ஓ குருவாயூரப்பா! என்று சப்தமிட்டார். கார் அப்படியே நின்று விட்டது. அந்தப் பையனும் யாரோ பிடித்து நிறுத்தினது போல் நின்று விட்டான். இது ஸ்ரீ குருவாயூரப்பனின் அனுக்ரஹமாக யாவரும் ஆச்சர்யப்பட்டார்கள். இதற்குக் காரணம் டிரைவர் ஸ்ரீ நாரயணீயத்தை நித்யம் பாராயணம் செய்து வந்ததேயாகும், இதனால் வீட்டில் உள்ள பெரியோர்களும் சிறியோர்களும், நித்யம் ஸ்ரீ நாரயாணீயத்தை பக்தியுடன் படித்து ஸ்ரீ அப்பனின் அனுக்ரஹத்தை அடைய வேண்டும்.

—o—

## ஸால்வன் துவாரகையைத் தகைவது

साल्वो भैष्मीविवाहे यदुबलविजितश्चन्द्रचूडाद्विमानं
विन्दन् सौभं स मायी त्वयि वसति कुरूंस्त्वत्पुरीमभ्यभाङ्क्षीत् ।
प्रद्युम्नस्तं निरुन्धन्निखिलयदुभटैर्न्यग्रहीदुग्रवीर्यं
तस्यामात्यं द्युमन्तं व्यजनि च समरः सप्तविंशत्यहान्तम् ॥ 1 ॥

ஸால்வோ பைஷ்மீவிவாஹே யதுபலவிஜிதச்சந்த்ர
 சூடாத்விமாநம்
விந்தந் ஸௌபம் ஸ மாயீ த்வயி வஸதி குரும்ஸ்த்வத்புரீ
 மப்யபாங்க்ஷீத் |
ப்ரத்யும்நஸ்தம் நிருந்தந்நிகில யதுபடைர்ந்யக்ரஹீது-
 க்ரவீர்யம்
தஸ்யாமாத்யம் த்யுமந்தம் வ்யஜநி ச ஸமர:
 ஸப்தவிம்சத்யஹாந்தம் ||

ஹே குருவாயூரப்பா, முன்பு ருக்மிணீ கல்யாண சமயத்தில் தங்களுடைய யாதவஸேனைகளால் ஸால்வன் தோல்வியடைந்திருந்தான். அவன் ஸ்ரீ பரமேச்வரனை ஆராதனம் செய்து அவரிடமிருந்து ஸௌபம் என்ற திவ்ய விமானத்தைப் பெற்றான். தாங்கள் (ராஜஸூயத்திற்காக) குருதேசம் சென்ற சமயம் மாயாவியான அச்சால்வன் தங்கள் பட்டணமான துவாரகையை தகைத்தான். உடன் ப்ரத்யும்னன் அவனை எதிர்த்தான். மேலும் உக்ரமான வீர்யமுள்ள அவனுடைய மந்திரியான த்யுமான் என்றவனை வதம் செய்தான். இவ்விதம் இருபத்து ஏழுதினம் யுத்தம் நடந்ததாமே.

## மாய வஸுதேவ வதம்

तावत्त्वं रामशाली त्वरितमुपगतः खण्डितप्रायसैन्यं

सौभेशं तं न्यरुन्धाः स च किल गदया शार्ङ्गमभ्रंशयत्ते ।

मायातातं व्यहिंसीदपि तव पुरतस्तत्त्वयापि क्षणार्धं

नाज्ञायीत्याहुरेके तदिदमवमतं व्यास एव न्यषेधीत् ॥ 2 ॥

தாவத்வம் ராமசாலீ த்வரிதமுபகத: கண்டிதப்ராய
ஸைந்யம்

ஸௌபேசம் தம் ந்யருந்தா: ஸ ச கில கதயா சார்ங்கம
ப்ரம்சயத்தே

மாயாதாதம் வ்யஹிம்ஸீதபி தவ புரதஸ்தத்தவயாऽபி
க்ஷணார்தம்

நாக்ஞாயீத்யாஹுரேகே ததிதமவமதம் வ்யாஸ
ஏவ ந்யஷேதீத் ॥

ஹே குருவாயூரப்பா, அதற்குள் தாங்கள் பலராமனுடன் வேகமாய் அங்கு வந்து அவனுடைய எல்லா ஸேனைகளையும் நாசம் செய்து அந்த சால்வனையும் தடுத்தீர். அவனும் கதையால் தங்களுடைய வில்லை கீழே தள்ளினன், தங்கள் எதிரில் மாயையால் தங்களுடைய தந்தையான வஸுதேவர் போல் செய்து அதை வதம் செய்தான், அம்மாயையை தாங்களும் சிறிது நேரம் அறியவில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். அவ்விதமான அவமானமான சொல்லை வ்யாஸரே தடுத்து இல்லை என சொல்லியிருக்கிறார்.

## ஸால்வவதமும் தந்தவக்த்ரனின் மோக்ஷமும்

क्षिप्त्वा सौभं गदाचूर्णितमुदकनिधौ मङ्क्षु साल्वेऽपि चक्रे-

णोत्कृत्ते दन्तवक्त्रः प्रसभमभिपतन्नभ्यमुञ्चद्गदां ते ।

कौमोदक्या हतोऽसावपि सुकृतनिधिश्चैद्यवत् प्रापदैक्यं

सर्वेषामेष पूर्वं त्वयि धृतमनसां मोक्षणार्थोऽवतारः ॥ 3 ॥

க்ஷிப்த்வா ஸௌபம் கதா 'நூர்ணிதமுதகநிதௌ மங்க்ஷு ஸால்வேऽபி
சக்ரேணோத்க்ருத்தே தந்தவக்த்ர: ப்ரஸபமபி—
பதந்நப்யமுஞ்சத்கதாம் தே |
கௌமோதக்யா ஹதோऽஸாவபி ஸுக்ருதநிதிச்சை—
த்யவத்ப்ராபதைக்யம்
ஸர்வேஷாமேஷ பூர்வம் த்வயி த்ருதமனஸாம்
மோக்ஷணார்தோऽவதார: ||

ஹே குருவாயூரப்பா, அந்த சால்வனுடைய ஸௌபம் என்ற விமானத்தை கதையால் நொறுக்கி சமுத்திரத்தில் எறிந்தீர்; சக்ராயுதத்தால் சால்வனுடைய தலையை அறுத்தீர். அதனால் எதிர்த்து வந்த தந்தவக்த்ரன் தங்கள் மேல் கதையை எறிந்தானுமே. தாங்கள் கௌமோதகீ என்ற கதையால் அந்த தந்தவக்த்ரனை கொன்றீர். புண்யத்திற்கு இருப்பிடமான அவன் சிசுபாலன் போல் தங்களோடு ஒன்றாய் கலந்தானுமே. முன் பிறவியில் தங்களிடத்திலேயே மனம் செலுத்திய யாவருக்கும் மோக்ஷமளிப்பதற்கே இந்த அவதாரம் செய்திருக்கிறீர்.

## *திரௌபதீ மானஸம்ரக்ஷணம், துர்வாஸபிக்ஷை*

त्वय्यायातेऽथ जाते किल कुरुसदसि द्यूतके संयतायाः

क्रन्दन्त्या याज्ञसेन्याः सकरुणमकृथाश्चेलमालामनन्ताम् ।

अन्नान्तप्राप्तशर्वांशजमुनिचकितद्रौपदीचिन्तितोऽथ

प्राप्तः शाकान्नमश्नन् मुनिगणमकृथास्तृप्तिमन्तं वनान्ते ॥ 4 ॥

த்வய்யாயாதேऽத ஜாதே கில குருஸதஸி த்யூதகே
ஸம்யதாயா:
க்ரந்தந்த்யா யாக்ஞஸேந்யா: ஸகருணமக்ருதாச்—
சேலமாலாமனந்தாம் |
அன்னாந்த ப்ராப்தசர்வாம்சஜமுனிசகித த்ரௌபதீ—
சிந்திதோऽத
ப்ராப்த: சாகான்னமச்நந் முனிகணமக்ருதாஸ்—
த்ருப்திமந்தம் வனாந்தே ||

ஹே குருவாயூரப்பா, தாங்கள் துவாரகை சென்றதும் துரியோதனன் முதலியவர்களும் பாண்டவர்களும், கௌர வர்களின் ஸதஸ்ஸில் சூதாட்டம் ஆடத் துவங்கினுர்கள். (பந்தயமாக வைக்கப்பட்ட பாண்டவர்களுடைய எல்லா பொருளையும் சகுனியைக் கொண்டு கபடமாய் ஜயித்தான். மேலும் தன் சகோதர்களையும் தன்னையும் வைத்து கடைசி யாய் திரௌபதியையும் தர்மபுத்திரர் பந்தயமாக வைத்து ஆடினுர். உடன் சகுனியானவன் அவளையும் ஜயித்தான்.) ஜயிக்கப்பட்ட அவளை துச்சாசனன் ஸபையில் இழுத்து வந்து அவள் இடுப்பு வஸ்திரங்களை அவிழ்த்தான். அது சமயம் அவ்விதம் கஷ்டமடைந்த திரௌபதி துக்கத்துடன் ஏ கிருஷ்ணு என்று கதறும் பொழுது தாங்கள் (அவ ளிடமிருந்து) கணக்கிலடங்காத வஸ்திரங்களை வரிசை வரிசையாக வரும்படி செய்தீராமே.

(பாண்டவர்கள் காட்டில் வசிக்கும்போழுது ஒரு நாள் ஸ்ரீ பரமேச்வர அம்சமான துர்வாஸ ரிஷி, இவர்கள் இருக் குமிடத்திற்கு எல்லோரும் சாப்பிட்ட பின்பே வந்தார். தர்மபுத்திரர் அவருக்கு பூஜை செய்து அவரை சாப்பிட வேண்டும்படியும் வேண்டினுர், ரிஷியும் அவ்விதமே செய்வ தாகக் கூறி ஸ்னனம் செய்யச் சென்றதும் சாப்பாடு முடியும் சமயம் துர்வாஸ ரிஷி வந்ததை யறிந்து திரௌபதி பயந் தாள் (அதாவது ஸூர்யன் அளித்த அக்ஷய பாத்திரத்தினுல் ஒரு முறை சாப்பாடு அளித்து சுத்தமாய் அலம்பிய பிறகு அன்னம் அளிக்க சக்தியில்லாமையை யறிந்து எனக்கருத்து) பிறகு பகவானுன தங்களை ஸ்தோத்திரம் செய்தாள். உடன் தாங்கள் அங்கு சென்று தங்கள் நிர்பந்தத்தின் பேரில் கொண்டு வந்த அக்ஷய பாத்திரத்தில் சிறிதளவு மிஞ்சிய கீரையை சாப்பிட்டு அந்த துர்வாஸர் முதலிய ரிஷிகளை போஜனத்தால் உண்டாகும் திருப்தியடைந்தவர்களாய்ச் செய்தீராமே.

## க்ருஷ்ணன் தூது

युद्धोद्योगेऽथ मन्त्रे मिलति सति वृतः फल्गुनेन त्वमेकः
कौरव्ये दत्तसैन्यः करिपुरमगमो दौत्यकृत् पाण्डवार्थम् ।
भीष्मद्रोणादिमान्ये तव खलु वचने धिक्कृते कौरवेण
व्यावृण्वन् विश्वरूपं मुनिसदसि पुरीं क्षोभयित्वाऽऽगतोऽभूः ॥

யுத்தோத்யோகேऽத மந்த்ரே மிலதி ஸதி வ்ருத:
பல்குநேந த்வமேக:
கௌரவ்யே தத்தஸைன்ய: கரிபுரமகமோ தௌத்ய
க்ருத் பாண்டவார்த்தம்,
பீஷ்மத்ரோணாதி மாந்யே தவ கலு வசநே திக்க்ருதே
கௌரவேண
வ்யாவ்ருண்வந் விச்வரூபம் முனிஸதஸி புரீம் க்ஷோப-
யித்வாऽऽகதோऽபூ:

ஹே குருவாயூரப்பா, பிறகு யுத்தம் செய்வதாய் நிச்சயித்தவுடன், அர்ஜுனன், தங்களை தன் பக்கத்திற்கு வரும்படி வேண்டினான். துர்யோதனன் தங்களுடைய ஸைன்யத்தையே விரும்பினான் அவ்விதமே அவர்களுக்கு அளித்துவிட்டு பாண்டவர்களின் கோரிக்கையின் பேரில் ஸமாதானம் செய்ய தூதாக ஹஸ்தினபுரம் சென்றீரானமே. அங்கு முனிவர்கள் கூடியிருந்த ஸபையில் தங்கள் வார்த்தைக் கேட்ட பீஷ்மர், துரோணர் முதலியவர்கள் கொண்டாடினார்கள், ஆனால் துரியோதனன் நிராகரித்தான். உடன் அந்த சபையில் தாங்கள் விச்வரூபத்தைக் காட்டி அவர்களை கலங்கும்படி செய்து விட்டு பாண்டவர்களிடம் திரும்பிச் சென்றீரானமே.

## அர்ஜுனனுக்கு பகவான் கீதோபதேசம் செய்வது

जिष्णोस्त्वं कृष्ण सूत खलु समरमुखे बन्धुघाते दयालुं
खिन्नं तं वीक्ष्य वीरं किमिदमयि सखे नित्य एकोऽयमात्मा ।
को वध्यः कोऽत्र हन्ता तदिह वधभियं प्रोज्झ्य मय्यर्पितात्मा
धर्म्यं युद्धं चरेति प्रकृतिमनयथा दर्शयन् विश्वरूपम् ॥ 6 ॥

*ஜிஷ்ணோஸ்த்வம் க்ருஷ்ண ஸூத: கலு ஸமரமுகே பந்துகாதே தயாலும்*
*கிந்நம் தம் வீக்ஷ்ய வீரம் கிமிதமயி ஸகே நித்ய ஏகோऽயமாத்மா,*
*கோ வத்ய: கோऽத்ர ஹந்தா ததிஹ வதபியம் ப்ரோஜ்ஜ்ய மய்யர்பிதாத்மா*
*தர்ம்யம் யுத்தம் சரேதி ப்ரக்ருதிமநயதா தர்சயந் விச்வரூபம் ||*

ஹே குருவாயூரப்பா, யுத்தத்தின் போது தாங்கள் அர்ஜுனனுடைய ரதத்தை ஓட்டிக் கொண்டு ஸாரதியாய் வந்தீர். யுத்தத்தின் ஆரம்பத்தில் தனக்கு எதிரில் பந்துக்கள் கூடி வந்திருப்பதைக் கண்டு அவர்களை வதம் செய்ய மனமில்லாமல் தயையுள்ளவனும், வருந்தியவனும் வீரனுமான அந்த அர்ஜுனனைப் பார்த்தீர். அவனை ஏ தோழனே ஏன் இவ்விதம் வருந்துகிறாய் ஆத்மா நித்யனும், ஏகனும் உள்ளவன் யார் கொல்லப் படுகிறவன் (அதாவது எல்லோருடைய உள்ளிலும் இருக்கும் ஆத்மா அழிவில்லாதது என கருத்து) அதனால் இந்த வதத்தைக் குறித்து இருக்கும் பயத்தை விடு என்னிடத்தில் மனதை அர்பணம் செய்து க்ஷத்திரியனுக்கு ஸ்வதர்மமான யுத்தத்தை செய் என்று கூறியும் விச்வரூபத்தைக் காட்டியும் அவனுடைய மோஹத்தைப் போக்கி தன் நிலமையை யடைச் செய்தீராமே.

## பக்தனின் ப்ரதிக்ஞையைக் காக்க தன் ப்ரதிக்ஞையை பகவான் விடுவது

भक्तोत्तंसेऽथ भीष्मे तव धरणिभरक्षेपकृत्यैकसक्ते
नित्यं नित्यं विभिन्दत्यवनिभृदयुतं प्राप्तसादे च पार्थे ।
निश्शस्त्रत्वप्रतिज्ञां विजहदरिवरं धारयन् क्रोधशाली-
धाधावन् प्राञ्जलिं तं नतशिरसमथो वीक्ष्य मोदादपागाः ॥ 7 ॥

பக்த்தோத்தம்ஸேऽத பீஷ்மே தவ தரணிபரக்ஷே-பக்ருத்யைகஸக்தே
நித்யம் நித்யம் விபிந்தத்யவநிப்ருதயுதம் ப்ராப்தஸாதே ச பார்தே |
நிச்சஸ்த்ரத்வப்ரதிக்ஞாம் விஜஹதரிவரம் தாரயந் க்ரோதசாலீ
வாதாவந் ப்ராஞ்சலிம் தம் நதசிரஸமதோ வீக்ஷ்ய மோதாதபாகா: ||

ஹே குருவாயூரப்பா, பக்தர்களுக்குள் சிறந்தவரான பீஷ்மர், தங்களுடையதான பூபாரத்தை போக்கும் கார்யத்தில் ஈடுபட்டவராய் ஒவ்வொரு தினமும் பதினாயிரம் அரசர்களை நாசம் செய்து வந்தார். அவ்விதம் பீஷ்மரின் பாணங்களால் அர்ஜுனன் மிக்க சோர்வுற்றிருந்தான். உடன் அர்ஜுனனைப் பார்த்த தாங்கள் யுத்தத்தில் ஆயுதம் எடுப்பதில்லை என்று கூறிய ப்ரதிஞையை விட்டு விட்டு சிறந்ததான ஸுதர்சன மென்னும் சக்ராயுதத்தை எடுத்துக் கொண்டு கோபமடைந்தவர் போல் பீஷ்மரை நோக்கி ஓடினீர். தாங்கள் வருவதைக் கண்டு பீஷ்மர் தலை வணங்கி அஞ்சலி செய்து கொண்டிருந்ததைப் பார்த்து சந்தோஷத்துடன் திரும்பினீராமே.

## பகவான் யுத்தத்தில் ரக்ஷித்ததைக் கூறுதல்

युद्धे द्रोणस्य हस्तिस्थिररणभगदत्तेरितं वैष्णवास्त्रं
वक्षस्याधत्त चक्रस्थगितरविमहाः प्रार्दयत्सिन्धुराजम् ।
नागास्त्रे कर्णमुक्ते क्षितिमवनमयन् केवलं कृत्तमौलिं
तत्रे तत्रापि पार्थं किमिव न हि भवान् पाण्डवानामकार्षीत् ॥

யுத்தே த்ரோணஸ்ய ஹஸ்திஸ்திரரணபகதத்தேரிதம் வைஷ்ணவாஸ்தரம்
வக்ஷஸ்யாதத்த சக்ரஸ்தகிதரவிமஹா: ப்ரார்தயத் ஸிந்துராஜம் |
நாகாஸ்த்ரே கர்ணமுக்தே க்ஷிதிமவநமயந் கேவலம் க்ருத்த மௌலிம்
தத்ரே தத்ராபி பார்தம் கிமிவ நஹி பவாந் பாண்டவா-நாமகார்ஷீத் ||

ஹே குருவாயூரப்பா, துரோணரோடு யுத்தம் செய்து கொண்டிருந்த சமயம், நான்கு தந்தமுள்ள யானை மீது ஏறி யுத்தம் செய்து நரகாஸுரனின் பிள்ளையான பகதத்தன் வைஷ்ணவாஸ்திரத்தை ஏவினான். அதை அர்ஜுனன் மீது விழாமல் தாங்கள் மார்பில் தாங்கிக் கொண்டீர். சக்ராயுதத்தால் சூர்யனுடைய ஒளியை மறைத்து அர்ஜுனனைக் கொண்டு ஜயத்ரதனை வதம் செய்தீர். கர்ணன் நாகாஸ்திரத்தை ஏவினான். அது அர்ஜுனனிடம் வரும் பொழுது தாங்கள் பூமியை கீழே போகும்படி செய்து காலால் அமுக்கி அர்ஜுனனின் கிரீடத்தை மட்டும் அறுக்கும்படி செய்து அர்ஜுனனை ரக்ஷித்தீர்களாமே! பாண்டவர்களுக்கு எதைத்தான் தாங்கள் செய்யவில்லை.

## பலராமன் தீர்த்த யாத்திரை சென்று திரும்பியது

युद्धादौ तीर्थगामी स खलु हलधरो नैमिशक्षेत्रमृच्छ-
न्नप्रत्युत्थायिसूतक्षयकृदथ सुतं तत्पदे कल्पयित्वा ।
यज्ञघ्नं वल्वलं पर्वणि परिदलयन् स्नाततीर्थो रणान्ते
संप्राप्तो भीमदुर्योधनरणमशमं वीक्ष्य यातः पुरीं ते ॥ 9 ॥

*யுத்தாதௌ தீர்த்தகாமீ ஸ கலு ஹலதரோ நைமிச க்ஷேத்ரம்ருச்ச-*
*ந்நப்ரத்யுத்தாயிஸூத க்ஷயக்ருதத ஸுதம் தத்பதே கல்பயித்வா |*
*யக்ஞக்நம் வல்வலம் பர்வணி பரிதலயந் ஸ்நாத-தீர்த்தோ ரணாந்தே*
*ஸம்ப்ராப்தோ பீமதுர்யோதனரணமசமம் வீக்ஷ்ய யாதஃ புரீம் தே ||*

ஹே குருவாயூரப்பா! யுத்தம் ஆரம்பித்த பொழுது பலராமன் தீர்த்த யாத்திரை சென்றார் அவ்விதம் செல்லும் பொழுது நைமிசாரண்யம் போனார். இவர் வருவதை அறிந்தும் அங்கிருந்த ஸூதபுராணிகர் எழுந்து மரியாதை செய்யாததால் அவரை வதம் செய்தார். அந்த ஸ்தானத்தில் (புராணம் சொல்வதில்) ஸூதபுராணிகருடைய புத்திரனை நியமித்தார், பர்வ காலங்களில் யாகங்களை கெடுத்துவந்த பல்வலன் என்றவனை வதம் செய்தார். பிறகு தீர்த்த யாத்திரையை முடித்துக் கொண்டு யுத்தத்தின் முடிவில் துரியோதனனும், பீமனும் பயங்கரமான கதாயுத்தம் செய்துக் கொண்டிருந்த ஸமயம் பலராமன் திரும்பி வந்தார் அதை பார்த்துவிட்டு துவாரகைக்கு சென்றாரமே!

संसुप्तद्रौपदेयक्षपणहततधियं द्रौणिमेत्य त्वदुक्त्या
तन्मुक्तं ब्राह्ममस्त्रं समहृत विजयो मौलिरत्नं च जह्रे ।
उच्छित्त्यै पाण्डवानां पुनरपि च विशत्युत्तरागर्भमस्त्रे
रक्षन्नङ्गुष्ठमात्रः किल जठरमगाश्चक्रपाणिर्विभो त्वम् ॥ 10 ॥

ஸம்ஸுப்தத்ரௌபதேயக்ஷபணஹததியம் த்ரௌணி
மேத்ய த்வதுக்த்யா
தந்முக்தம் ப்ராம்ஹமஸ்த்ரம் ஸமஹ்ருத விஜயோ
மௌலிரத்நம் ச ஜஹ்ரே |
உச்சித்த்யை பாண்டவாநாம் புநரபி ச விசத்யுத்த
ராகர்பமஸ்த்ரே
ரக்ஷந்நங்குஷ்ட்ட மாத்ர: கில ஜடரமகாச்சக்ரபாணிர்
விபோ த்வம் ||

பிரபுவான ஹே குருவாயூரப்பா! தூங்கிக் கொண்டிருந்த திரௌபதியின் பிள்ளைகளான உப பாண்டவர்களை அச்வத்தாமா வதம் செய்தான் அந்த பாசத்தால் புத்தியும் கலங்கியது அதனால் உபஸம்ஹாரம் தெரியாத பிரம்மாஸ்திரத்தை பிரயோகம் செய்தான். தாங்கள் அந்த அஸ்திரத்தை அர்ஜுனனையே உபஸம்ஹாரம் செய்யச் சொன்னீர். அவனுடைய சிரோரத்னத்தையும் க்ரஹிக்கும் படி கூறினீர். அவ்விதமே அர்ஜுனனும் செய்தான். பிறகு அச்வத்தாமா பாண்டவ வம்சத்தை அடியோடு நாசம் செய்ய வேண்டி மீண்டும் ப்ரும்மாஸ்த்திரத்தை ஏவினான். அந்த அஸ்திரமானது அபிமன்யுவின் பத்தினியான உத்திரையின் கர்பத்திலுள்ள சிசுவை எறிக்கத் தொடங்கியது. தாபமடைந்த உத்தரையின் ப்ரார்த்தனைக் கிணங்கி, கட்ட விரலளவுள்ள உருவமாய் ஆகி கையில் சக்ரத்துடன் உத்தரையின் கர்பத்தில் பிரவேசித்து சிசுவையும் உத்தரையையும் தாங்கள் காத்தீராமே!

## பீஷ்ம உபதேசமும் மோக்ஷமும்

धर्मौघं धर्मसूनोरभिदधदखिलं छन्दमृत्युः स भीष्म-
स्त्वां पश्यन् भक्तिभूम्नैव हि सपदि ययौ निष्कलब्रह्मभूयम् ।
संयाज्याथाश्वमेधैस्त्रिभिरतिमहितैर्धर्मजं पूर्णकामं
संप्राप्तो द्वारकां त्वं पवनपुरपते पाहि मां सर्वरोगात् ॥ 11 ॥

தர்மௌகம் தர்மஸூநோரபிததகிலம் ச்சந்த
ம்ருத்யுஸ்ஸ பீஷ்ம-
ஸ்த்வாம் பச்யந் பக்திபூம்நைவ ஹி ஸபதி யயௌ
நிஷ்கல ப்ரம்ஹ பூயம்
ஸம்யாஜ்யாதாச்வமேதைஸ்த்ரிபிரதிமஹிதைதர்மஜம்
பூர்ணகாமம்
ஸம்ப்ராப்தோ த்வாரகாம் த்வம் பவநபுரபதே பாஹி
மாம் ஸர்வரோகாத் ||

பிறகு யுத்தத்தில் பாண்டவர்களால் விழ்த்தப்பட்டவரும் மரணத்தை தன் வசமாக்கி கொண்டவருமான பீஷ்மர் தர்ம புத்திரருக்கு எல்லா தர்மங்களையும் உபதேசம் செய்தார். உடன் பக்தியின் அதிகத்தால் தங்களையே பார்த்துக் கொண்டு நிஷ்கலமான ப்ரும்மமாகவே ஆனார் (அதாவது பகவத்ஸாயுஜ்யத்தை மோக்ஷத்தை யடைந்தார்) பிறகு தர்மபுத்திரருக்கு மூன்று அச்வமேதங்களை மிகச்சிறப்பாக செய்வித்து, அவர் இஷ்டம் முழுவதையும் பூர்த்தி செய்வித்தீர் பிறகு துவாரகை சென்ற ஹே குருவாயூரப்பா! தாங்கள் எல்லா வியாதிகளிலிருந்தும் என்னைக் காக்க வேண்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் ஆம் என தலையை ஆட்டி ஆங்கீகரித்தார்.

—o—

## கலியில் கண்ட ஸ்ரீ அப்பனின் மஹிமை

போனவாரம் ஸ்ரீமான் சொக்கலிங்கம் பிள்ளை என்ற ஒரு பக்தர் சொன்னார். அவர் சில வருஷங்களாய் சென்னையில் உபன்யாஸம் நடக்கும் இடங்களெல்லாம் வந்து ஸ்ரீ நாராயணீயம் கேட்டு ஆனந்தம் அடைந்து வந்தார். அவர் குருவாயூர் சென்றார். அந்த ஊர் இவருக்கு புதிதாகையால் நல்ல தேஜஸ்வியான ஒரு வாலிபரை குளம், கோயில் எங்கிருக்கிறது என கேட்டார். ஆங்கிலத்தில் இருக்குமிடத்தை அந்த வாலிபர் கூறினார் தாங்கள் யார் என கேட்டதற்கு நான்தான் நம்பூதிரி என்று சொன்னார்'' இவருக்கு அவரை நாராயணீயம் எழுதின நம்பூதிரி எனவே என்று தோன்றி அவர் இருக்குமிடம் எங்கே என கேட்டார். நான் இருக்குமிடத்தை சொன்னால் தங்களுக்கு தெரியாது என சொல்லி உடனே மறைந்து விட்டாராம். இதை ஸ்ரீமான் சொக்கலிங்கம் என்னிடம் சொல்லி ஆனந்த கண்ணீரை பெருக விட்டார். இப்படி கலியில் ஸ்ரீ அப்பன் காட்சி அளித்து பலருக்கு அனுக்கிரஹம் செய்து வருகிறார். ஸ்ரீபிள்ளை அவர்களுக்குக் நாராயணீயம் எழுதிய நம்பூதிரியை தர்சனம் செய்ய வேண்டும் என்ற ஆவல் இருந்ததே காரணம்.

—o—

## 87-வது தசகம்

### குசேலரின் பக்தி, குசேலோபாக்கியானம்

कुचेलनामा भवतः सतीर्थ्यतां
गतः स सान्दीपनिमन्दिरे द्विजः ।
त्वदेकरागेण धनादिनिःस्पृहो
दिनानि निन्ये प्रशमी गृहाश्रमी ॥ 1 ॥

குசேல நாம பவத: ஸதீர்த்யதாம்
கத: ஸ ஸாந்தீபனி மந்திரே த்விஜ: |
த்வதேகராகேண தனுதிநி:ஸ்ப்ருஹோ
தினனி நிந்யே ப்ரசமீ க்ருஹாச்ரமீ ||

ஹே குருவாயூரப்பா! ஸாந்தீபனி என்ற முனிவரின் வீட்டில் தங்களுடன் சேர்ந்து படித்த குசேலர் என்ற பெயர் உள்ள ப்ராமணர் ஒருவர் இருந்தார். க்ருஹஸ்தரான அவர் தங்கள் ஒருவரிடத்திலேயே மிக அன்பு (பக்தி) வைத்திருந்ததால் பொருள் முதலியவற்றில் ஆசையற்றவராய் இந்திரியங்களை யடக்கி பல தினங்களை கழித்தாராமே.

### குசேலருடைய மனைவியின் கோரிக்கை

समानशीलाऽपि तदीयवल्लभा
तथैव नो चित्तजयं समेयुषी ।
कदाचिदूचे बत वृत्तिलब्धये
रमापतिः किं न सखा निषेव्यते ॥ 2 ॥

ஸமானசீலா஽பி ததீயவல்லபா
ததைவ நோ சித்தஜயம் ஸமேயுஷீ |
கதாசிதூசே பத வ்ருத்திலப்தயே
ரமாபதி: கிம் ந ஸகா நிஷேவ்யதே ||

ஹே குருவாயூரப்பா! அந்த குசேலருடைய மனைவியும் அவருக்கு ஸமமான ஸ்வபாவமுள்ளவளாய் இருந்தாள். ஆனால் அவரைப்போல் மனதைமட்டும் அடக்கவில்லை. ஒரு தினம் குசேலரை, லக்ஷ்மீபதியான க்ருஷ்ணன் தங்கள் ஸ்நேகிதனல்லவா, தாங்கள் குடும்பம் நடத்த தோழனை அவரை ஏன் ஸேவிக்கக் கூடாது? என அவர் மனைவி கூறினாளாமே!

### குசேலர் பகவானை காணச்செல்வது

इतीरितोऽयं प्रियया क्षुधाऽऽर्तया
जुगुप्समानोऽपि धने मदावहे ।
तदात्वदालोकनकौतुकाद्ययौ
वहन् पटान्ते पृथुकानुपायनम् ॥ 3 ॥

இதீரிதோऽயம் ப்ரியயா க்ஷுதாऽऽர்தயா
ஜுகுப்ஸமா நோऽபிதனே மதாவஹே |
ததா த்வதாலோகன கௌதுகாத்யயௌ
வஹன் படான்தே ப்ருதுகானுபாயனம் ||

ஹே குருவாயூரப்பா! அந்த குசேலருடைய மனைவி பசியால் துன்பமடைந்ததாலேயே தங்களிடம் செல்லும்படி குசேலரிடம் கூறினாள். அவரும் பொருள் மதத்தை விளைவிக்கும் என அதில் அவருக்கு வெறுப்பு இருந்தபோதிலும் அது சமயம் தங்களை பார்க்கவே ஆவல் கொண்டவராய் வஸ்திரத்தின் தலைப்பில் அவலை கொடுக்க வேண்டிய பொருளாய் எடுத்து சென்றாராமே!

### ஸ்ரீ பகவான் குசேலரை பூஜித்தது

गतोयमाश्चर्यमयीं भवत्पुरीं
गृहेषु शैब्याभवनं समेयिवान् ।
प्रविश्य वैकुण्ठमिवाप निर्वृतिं
तवातिसंभावनया तु किं पुनः ॥ 4 ॥

கதோऽயமாஶ்சர்யமயீம் பவத்புரீம்
க்ருஹேஷு ஶைப்யா பவனம் ஸமேயிவான் |
ப்ரவிச்ய வைகுண்டமிவாப நிர்வ்ருதிம்
தவாதிஸம்பாவனயா து கிம் புன: ||

ஹே குருவாயூரப்பா! இந்த குசேலர் மிக்க ஆச்சரிய கரமாய் இருந்த தங்கள் பட்டணத்திற்கு சென்ருர். அவர் தங்கள் வீட்டில் நுழைந்ததும் வைகுண்டத்தில் போல் மிக்க ஆனந்த மடைந்தார். தங்களுடைய சிறந்த பூஜையினுல் அவர் அடைந்த ஆனந்தத்தை கூறவும் முடியுமோ!

**பகவான் குசேலரிடம் குருகுலவாஸத்தை கூறுவது**

प्रपूजितं तं प्रियया च वीजितं
करे गृहीत्वाऽकथयः पुराकृतम् ।
यदिन्धनार्थं गुरुदारचोदितै-
रपर्तुवर्षे तदमर्षि कानने ॥ 5 ॥

ப்ரபூஜிதம் தம் ப்ரியயா ச வீஜிதம்
கரே க்ருஹீத்வா஽கதய : புராக்ருதம் ।
யதின்தனார்த்தம் குருதாரசோதிதை
ரபர்து வர்ஷம் ததமர்ஷி கானனே ॥

ஹே குருவாயூரப்பா! அந்த குசேலருக்கு தங்கள் பத்னியை விசிறும்படி செய்து தாங்களும் நன்கு பூஜித்தீர். தாங்கள் குசேலரின் கையை பிடித்துக்கொண்டு ஓ குசேலா முன்பு குருகுலவாஸம் செய்யும் பொழுது குருவின் மனைவி நம்மை விறகு வெட்டி வரும்படி கூறினுள். நாமும் அவ்விதம் காட்டுக்குச் சென்ற சமயம் அகாலத்தில் மழை பெய்தது அதையும் பொறுத்துக் கொண்டோம் அல்லவா? என்று கூறினீராமே.

## பகவான் அவல் சாப்பிடுவது

अपाजुषोऽस्मात्पृथुकं बलादथ
प्रगृह्य मुष्टौ सकृदाशिते त्वया ।
कृतं कृतं नन्वियतेति संभ्रमाद्रमा
किलोपेत्य करं रुरोध ते ॥ 6 ॥

த்ரபாஜுஷோஸ்மாத் ப்ருதுகம் பலாதத
ப்ரக்ருஹ்ய முஷ்டௌ ஸக்ருதாசிதே த்வயா ।
க்ருதம் க்ருதம் நந்வியதேதி ஸம்ப்ரமாத்ரமா
கிலோபேத்ய கரம் ருரோத தே ॥

ஹே குருவாயூரப்பா! தங்கள் வார்த்தையைக் கேட்டு லஜ்ஜை அடைந்த அந்த குசேலரிடமிருந்து பலாத்காரமாய் அவலை க்ரஹித்து ஒரு பிடி வாயில் போட்டுக் கொண்டீர் இரண்டாவது பிடி எடுத்ததும் இவ்வளவு சாப்பிடாதே, அவர்களுக்கு கொடுக்க வேண்டிய பொருளுக்கு போதும் (அதாவது இதற்கு மேல் சாப்பிட்டால் அவர்களுக்கு கொடுப்பதற்கு பொருள் இல்லை) என்று பரபரப்பாய் ஸ்ரீ லக்ஷ்மிதேவி தங்களிடம் வந்து தங்கள் கையை பிடித்து தடுத்தாளாமே!

## குசேலர் பெற்ற சுகம்

भक्तेषु भक्तेन स मानितस्त्वया
पुरीं वसन्नेकनिशां महासुखम् ।
बतापरेद्युर्द्रविणं विना ययौ
विचित्ररूपस्तव खल्वनुग्रहः ॥ 7 ॥

பக்தேஷு பக்தேன ஸ மானிதஸ்த்வயா
புரீம் வஸன்னேக நிசாம் மஹாஸுகம் |
பதாபரேத்யுர்த்ரவிணம் வினா யயௌ
விசித்ரரூபஸ்தவ கல்வனுக்ரஹ: ||

ஹே குருவாயூரப்பா! பக்தர்களிடத்தில் ப்ரியமுள்ளவரான தாங்கள் அந்த குசேலரை பூஜித்தீர், அன்று இரவு தங்களுடனிருந்து மிகவும் ஆனந்தமடைந்தார். ஆச்சர்யம்! மறுதினம் பொருள் இல்லாமல் தன் ஊருக்கு குசேலர் திரும்பினாராமே! தங்களுடைய அனுக்ரஹம் மிக ஆச்சரியமானதல்லவா.

## குசேலர் தனது வீட்டைக் கண்டது

यदि ह्ययाचिष्यमदास्यदच्युतो
वदामि भार्यां किमिति व्रजन्नसौ ।
त्वदुक्तिलीलास्मितमग्नधीः पुनः
क्रमादपश्यन्मणिदीप्रमालयम् ॥ ४ ॥

யதி ஹ்யாசிஷ்யமதாஸ்யதச்யுதோ
வதாமி பார்யாம் கிமிதி வ்ரஜன்னஸௌ |
த்வதுக்திலீலாஸ்மிதமக்னதீ: புன:
க்ரமாதபச்யன் மணி தீப்ரமாலயம் |

ஹே குருவாயூரப்பா, அவ்விதம் வரும் பொழுது நான் பகவானை யாசித்திருந்தால், அவரும் அளித்திருப்பார் (நானும் யாசிக்கவில்லை அதனால் அவரும் அளிக்கவில்லை என கருத்து) எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மனைவியிடம் என்ன சொல்வேன், என்று நினைத்துக்கொண்டே வந்தார்.

மீண்டும் தங்கள் சொற்களிலும் விளையாட்டுச் சிரிப்பிலுமே மூழ்கிய மனமுள்ளவராய் க்ரமமாய் ரத்னங்களால் விளங்கும் தன் வீட்டை பார்த்தாராமே.

## குசேலர் பகவானின் கருணையை அறிவது

किं मार्गविभ्रंश इति भ्रमन् क्षणं
गृहं प्रविष्टः स ददर्श वल्लभाम् ।
सखीपरीतां मणिहेमभूषितां
बुबोध च त्वत्करुणां महाद्भुताम् ॥ 9 ॥

கிம் மார்கவிப்ரம்ச இதி ப்ரமன் க்ஷணம்
க்ருஹம் ப்ரவிஷ்ட: ஸ ததர்ச வல்லபாம் |
ஸகீபரீதாம் மணிஹேமபூஷிதாம்
புபோத ச த்வத்கருணாம் மஹாத்புதாம் ||

ஹே குருவாயூரப்பா! குசேலர் வழிதவறி வந்து விட்டோமா, என க்ஷணகாலம் ப்ரமித்து பிறகு வீட்டிற்குள் நுழைந்தார். அங்கு தன் மனைவியை ரத்னங்களாலும் ஸ்வர்ணத்தாலும் அலங்கரித்திருப்பதையும் தோழிகள் சூழ்ந்திருப்பதையும் பார்த்தார். உடன் தங்கள் கருணை மிக்க ஆச்சர்யகரமாய் இருப்பதையும் அறிந்தாராமே.

## குசேலருக்கு மோக்ஷமும் நம்பூதிரி வேண்டுதலும்

स रत्नशालासु वसन्नपि स्वयं
समुन्नमद्भक्तिभरोऽमृतं ययौ ।
त्वमेवमापूरितभक्तवाञ्छितो
मरुत्पुराधीश हरस्व मे गदान् ॥ 10 ॥

ஸ ரத்னசாலாஸு வஸன்னபி ஸ்வயம்-
ஸமுன்னமத்பக்திபரோऽம்ருதம் யயௌ |
த்வமேவமாபூரிதபக்தவாஞ்சிதோ
மருத்புராதீச ஹரஸ்வ மே கதான் ||

அந்த குசேலர், ரத்னமயமான வீட்டில் வசித்திருந்தும் அவருக்கு தங்களிடத்தில் மிக்க பக்தி வளர்ந்தது. அதனல் வெகு தினங்களுக்குப் பிறகு மோக்ஷத்தையும் அடைந்தாராமே! பக்தனை குசேலருடைய இஷ்டத்தை பூர்த்தி செய்த ஹே குருவாயூரப்பா, தாங்கள் என் வ்யாதிகளை போக்க வேண்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ குருவாயூரப்பனின் மஹிமை

அந்தண வகுப்பைச் சேர்ந்த ஒருவர் பம்பாயில் வஸித்து வந்தார். அவர் ஸ்ரீ குருவாயூரப்பனிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர். அவர் பெரிய உத்தியோகத்திலிருந்தார். அதிலிருந்து ஓய்வு பெற்ருர். அவர் குடும்பம் நடத்துவதற்கு வேறுஸம்பாத்யம் இல்லாததால் கொஞ்சம் சிரமப்பட்டார். ஆயினும் தினந்தோறும் ஸ்ரீ நாராயணீயம் பாராயணம் செய்து வந்தார். இவ்விதம் கவலையுடனேயே படுத்து ஸ்ரீ அப்பனையே நினைத்துத் தூங்கினுர். ஸ்வப்னததில் ஸ்ரீ அப்பன் நேரில் வந்து 'உனக்கு ஒரு கம்பெனியில் வேலை தருகிறேன் வா' என்றழைத்தார். உடன் விழித்தார் அங்கு யாரையும் காணவில்லை. பிறகுதான் ஸ்வப்னம் என்று அறிந்தார். காலையில் எழுந்து அன்று செய்ய வேண்டிய எல்லாவற்றையும் செய்து முடித்தார். பிறகு ஒரு கம்பேனியிலிருந்து மேலும் அவரை வேலையில் வந்து சேரும்படி ஆர்டர் வந்தது. உடன் அவர் அவ்வேலையில் போய்ச் சேர்ந்தார்.

அதிலிருந்து அவர் ஸ்ரீ அப்பனே ஸ்வப்னத்தில் வந்து அழைத்தார் என்பதையும் சம்பாதிப்பதற்கும் ஒரு உத்யோகம் அளித்தார் என்றும் மிக்க சந்தோஷமடைந்து எல்லோரிடமும், நேரில் என்னிடமும் கூறினார். இவ்விதமான ஸ்ரீ அப்பனின் மஹிமையை பல நேரில் காண்கிறோம்.

—o—

88-வது தசகம்

**தாயான தேவகிக்கு இறந்த குழந்தைகளை பகவான் காண்பித்தது**

प्रागेवाचार्यपुत्राहृतिनिशमनया स्वीयषट्सूनुवीक्षां
काङ्क्षन्त्या मातुरुक्त्या सुतलभुवि बलिं प्राप्य तेनार्चितस्त्वम् ।
धातुः शापाद्धिरण्यान्वितकशिपुभवान् शौरिजान् कंसभग्ना-
नानीयैनान् प्रदर्श्य स्वपदमनयथाः पूर्वपुत्रान् मरीचेः ॥ 1 ॥

*ப்ராகேவாசார்ய புத்ராஹ்ருதி நிசமனயா ஸ்வீயஷட்-ஸூனுவீக்ஷாம்*
*காங்க்ஷன்த்யா மாதுருக்தயா ஸுதலபுவி பலிம் ப்ராப்ய தேனார்சிதஸ்த்வம் |*
*தாது : சாபாத்திரண்யான்விதகசிபுவான் சௌரிஜான் கம்ஸபக்னா*
*நானீயைநான் ப்ரதர்ச்ய ஸ்வபதமனயதா : பூர்வபுத்ரான் மரீசே : ||*

ஹே குருவாயூரப்பா! முன்பு ஆசார்யரான ஸாந்தீபனியின் இறந்த பிள்ளையை உயிருடன் குருதக்ஷிணையாக திருப்பிக் கொண்டு வந்து கொடுத்ததைக் கேட்ட தேவகீ தன்னுடைய இறந்த ஆறு பிள்ளைகளையும் பார்க்க விரும்பு

வதாய் தங்களிடம் கூறினுள், தாங்களும் சுதலம் என்னும் உலகத்திற்குச் சென்றீர். அங்கு மஹாபலி தங்களை பூஜித்தான். பிரும்ம தேவனின் சாபத்தால் மரிசி முனிவரின் பிள்ளைகள் ஹிரண்யகசிபுவின் புத்திரர்களாக ஆனுர்கள். அவர்களே வஸுதேவருடைய பிள்ளைகளாக வந்த பொழுது கம்ஸன் அவர்களை கொன்றுன். அப்பிள்ளைகளை ஸுதலத்திலிருந்து அழைத்து வந்து தாயான தேவகியிடம் தாங்கள் காண்பித்து மீண்டும் அவர்களை தேவலோகத்திற்கு அனுப்பினீராமே!

## ச்ருததேவன் பஹுலாச்வன் இவர்களுக்கும் ஒரே சமயத்தில் அனுக்ரஹம் செய்தது

श्रुतदेव इति श्रुतं द्विजेन्द्रं
वहुलाश्वं नृपतिं च भक्तिपूर्णम् ।
युगपत्त्वमनुगृहीतुकामो
मिथिलां प्रापिथ तापसैः समेतः ॥ 2 ॥

ஸ்ருததேவ இதி ச்ருதம் த்விஜேந்த்ரம்
பஹுலாச்வம் ந்ருபதிம் ச பக்திபூர்ணம் |
யுகபத்வமனுக்ரஹீதுகாமோ
மிதிலாம் ப்ராபித தாபஸை: ஸமேத: ||

ஹே! குருவாயூரப்பா! மிதிலா நகரத்தில் வஸித்து வந்த ச்ருததேவன் என்று பிரஸித்தரான சிறந்த பிராமணரையும், பஹுலாச்வன் என்ற அரசனையும், அவர்களின் பூர்ணமான பக்திக்கிணங்கி ஒரே சமயத்தில் அனுக்ரஹம் செய்ய விரும்பினீர், அதற்காக, முனிவர்களோடுகூட தாங்கள் ஒரே சமயத்தில் மிதிலா நகரத்திற்குச் சென்றீராமே.

## ச்ருததேவன், பஹுலாச்வன் இவர்களுக்கு மோக்ஷமளித்தல்

गच्छन्द्विमूर्तिरुभयोर्युगपन्निकेत-
मेकेन भूरिविभवैर्विहितोपचारः ।
अन्येन तद्दिनभृतैश्च फलौदनाद्यै-
स्तुल्यं प्रसेदिथ ददाथ च मुक्तिमाभ्याम् ॥ 3 ॥

கச்சந்த்விமூர்த்திருபயோர்யுகபன்னிகேத-
மேகேன பூரிவிபவைர்விஹிதோபசார: |
அன்யேன தத்தினப்ருதைச்ச பலௌதனாத்யைஸ்-
துல்யம் ப்ரஸேதித ததாத ச முக்திமாப்யாம் ||

ஹே! குருவாயூரப்பா! இரண்டு உருவம் எடுத்துக் கொண்டு (அதாவது இரண்டு கிருஷ்ணராக ஆகி) அந்த இருவர்களுடைய வீட்டிற்கும் ஒரே சமயத்தில் சென்றீர். அரசன் பூர்ணமான ஸ்வர்ணம் முதலிய பொருள்களாலும் பக்ஷ்யம் முதலியவற்றாலும் பூஜித்தான். ச்ருததேவனும் அந்ததினத்தில் ஸம்பாதித்த பழங்கள், அன்னம் முதலியவற்றால் ஆராதித்தான். ஆயினும் சமமாய் தோன்றி அவ்விருவர்களுக்கு மோக்ஷத்தையும் அளித்தீராமே.

## பகவான் விதியைத் தடுக்க முடியாது எனக்கூறல்

भूयोऽथ द्वारवत्यां द्विजतनयमृतिं तत्प्रलापानपि त्वं
को वा दैवं निरुन्ध्यादिति किल कथयन् विश्ववोढाऽप्यसोढाः ।
जिष्णोर्गर्वं विनेतुं त्वयि मनुजधिया कुण्ठितां चास्य बुद्धिं
तत्त्वारूढां विधातुं परमतमपदप्रेक्षणेनेति मन्ये ॥ 4 ॥

பூயோऽத த்வாரவத்யாம் த்விஜதனய ம்ருதிம் தத்ப்ர
லாபானபி த்வம்
கோ வா தைவம் நிருத்யாதிதி கில கதயன் விச்வ
வோடாऽப்யஸோடா: |
ஜிஷ்ணோர்கர்வம் வினேதும் த்வயி மனுஜதியா
குண்டிதாம் சாஸ்ய புத்திம்
தத்வாரூடாம் விதாதும் பரமதமபதப்ரேக்ஷணேநேதி
மன்யே ||

ஹே! குருவாயூரப்பா! மேலும் துவாரகையில் ஒரு பிராமணன் வீட்டில் குழந்தை இறந்தது. அவர்கள் மிக்க புலம்பினார்கள். அதைக் கேட்டும், யார்தான் விதியைத் தடுக்க முடியும் எனக்கூறிக் கொண்டு உலகத்தையே வஹிக்கும் தாங்கள் பொறுத்தீராமே, அர்ஜுனனுடைய கர்வத்தையும், தங்களை மனிதன் என்ற விவேகமற்ற எண்ணத்தையும் போக்கி, சிறந்த உலகமான வைகுண்டத்தையும் காட்டி, அர்ஜுனனுக்குத் தாங்கள் பரமாத்மஸ்வரூபம் என்ற எண்ணத்தை அளிக்கவே இவ்விதம் செய்தீர் என நினைக்கிறேன்.

## அர்ஜுனனின் பிரதிக்ஞை

नष्टा अष्टास्य पुत्राः पुनरपि तव तूपेक्षया कष्टवादः
स्पष्टो जातो जनानामथ तदवसरे द्वारकामार पार्थः।
मैत्र्या तत्रोषितोऽसौ नवमसुतमृतौ विप्रवर्यप्ररोदं
श्रुत्वा चक्रे प्रतिज्ञामनुपहृतसुतः संनिवेक्ष्ये कृशानुम् ॥ 5 ॥

நஷ்டா அஷ்டாஸ்ய புத்ரா: புனரபி தவ தூபேக்ஷயா
கஷ்டவாத:
ஸ்பஷ்டோ ஜாதோ ஜனானாமத ததவஸரே த்வாரகா
மார பார்த்த: |
மைத்ர்யா தத்ரோஷிதோऽஸௌ நவமஸுதம்ருதௌ
விப்ரவர்யப்ரரோதம்
ச்ருத்வா சக்ரே ப்ரதிஜ்ஞாமனுபஹ்ருதஸுத:
ஸம்நிவேக்ஷ்யே க்ருசானும் ||

ஹே ! குருவாயூரப்பா ! இவ்விதம் அப்பிராமணருக்கு எட்டுக்குழந்தைகள் இறந்தன. ஜனங்கள் முழுவதும் தாங்கள் உதாசீனமாய் இருப்பதால் இவ்வித கஷ்டம் ஏற்படுகிறது எனப் பேசினார்கள். அது ஸமயம் அர்ஜுனன் த்வாரகைக்கு வந்தான். ஸ்நேஹத்தால் தங்களுடன் அவன் வஸித்து வரும் பொழுது ஒரு தினம் அப்பிராமணன் வீட்டில் ஒன்பதாவது குழந்தையும் பிறந்து இறந்தது. அப்பிராமணன் மீண்டும் வந்து மிக்க அழுதான். அதைக் கேட்ட அர்ஜுனன், இறந்த குழந்தைகளை மீட்டுக் கொண்டு வருகிறேன். அப்படிக் கொண்டு வராவிடில் அக்னியில் விழுகிறேன் என பிரதிக்ஞை செய்தானுமே.

## தீயில் விழும் அர்ஜுனனை பகவான் தடுத்தது

मानी स त्वामपृष्ट्वा द्विजनिलयगतो बाणजालैर्महास्त्रैः
रुन्धानः सूतिगेहं पुनरपि सहसा दृष्टनष्टे कुमारे ।
याम्यामैन्द्रीं तथाऽन्याः सुरवरनगरीर्विद्ययाऽऽसाद्य सद्यो
मोघोद्योगः पतिष्यन् हुतभुजि भवता सस्मितं वारितोऽभूत् ॥

மானீ ஸ த்வாமப்ருஷ்ட்வா த்விஜ நிலயகதோ
பாண ஜாலைர்மஹாஸ்த்ரை :
ருந்தான : ஸூதிகேஹம் புனரபி ஸஹஸா த்ருஷ்ட
நஷ்டே குமாரே |
யாம்யாமைந்த்ரீம் ததாऽன்யா : ஸுரவரநகரீர் வித்யா
ऽऽஸாத்ய ஸத்யோ
மோகோத்யோக : பதிஷ்யன் ஹுதபுஜி பவதா
ஸஸ்மிதம் வாரிதோபூத் ||

ஹே ! குருவாயூரப்பா ! தன்னை அண்டினவர்களைக் காக்கிறவன் என்று கர்வம் கொண்ட அர்ஜுனன் தங்களைக் கேட்காமலே அப்பிராமணன் வீட்டிற்குச் சென்று பெரிய அஸ்திரங்களாலும், பாணக் கூட்டங்களாலும் பிரஸவ அறையை (யாரும் உள் செல்ல முடியால்) தடுத்திருந்தான்.

ஆனால் குழந்தை பிறந்து மீண்டும் காணுமல் போகவே, யமனுடையவும், இந்திரனுடையவும், மற்ற எல்லா தேவர்களின் உலகிற்கும் தன் யோகவித்தையால் சென்று அர்ஜுனன் தேடினன். அவனுடைய முயற்சி வீணுக ஆயிற்று. உடன் தீயில் விழ (பிரதிக்ஞையை நிறைவேற்ற) முற்பட்ட பொழுது தாங்கள் சிரித்துக் கொண்டே அவனைத் தடுத்தீராமே.

## பகவான் அர்ஜுனனுக்கு வைகுண்டம் காட்டியது

सार्धं तेन प्रतीचीं दिशमतिजविना स्यन्धनेनाभियातो
लोकालोकं व्यतीतस्तिमिरभयमथो चक्रधाम्ना निरुन्धन् ।
चक्रांशुक्लिष्टदृष्टिं स्थितमथ विजयं पश्य पश्येति वारां
पारे त्वं प्राददर्शः किमपि हि तमसां दूरदूरं पदं ते ॥ 7 ॥

ஸார்தம் தேன ப்ரதீசிம் திசமதி ஜவினு ஸ்யந்த
நேனுபியாதோ
லோகாலோகம் வ்யதீதஸ்திமிரபயமதோ சக்ரதாம்னு
நிருந்தன் ।
சக்ராம்சுக்லிஷ்டத்ருஷ்டிம் ஸ்திதமத விஜயம் பச்ய
பச்யேதி வாராம்
பாரே த்வம் ப்ராததர்ச: கிமபி ஹி தமஸாம் தூர தூரம்
பதம் தே ॥

ஹே! குருவாயூரப்பா! தாங்கள் இரதத்தின் மேல் ஏறிக்கொண்டு மிக்க வேகமாய் அர்ஜுனனுடன் மேற்கு திசையை நோக்கிச் சென்றீர். அங்கு லோகா லோகம் மலையைத் தாண்டி ஓரே இருள் நிறைந்திருந்தது. அதை சக்ராயுதத்தின் தேஜஸ்ஸால் தாங்கள் போக்கினீர் பிறகு சக்கரத்தின் ஒளியால் பார்க்க முடியாமல் இருந்த அர்ஜுனனை காரண ஜலத்திற்கப்பால், கூறமுடியாதது மான தங்கள் ஸ்தானமான வைகுண்டத்தைப் "பார் பார்" எனக்கூறி காண்பித்தீராமே.

**வைகுண்டத்தில் பகவானைப் பார்த்தது**

तत्रासीनं भुजङ्गाधिपशयनतले दिव्यभूषायुधाद्यै-
रावीतं पीतचेलं प्रतिनवजलदश्यामलं श्रीमदङ्गम् ।
मूर्तीनामीशितारं परमिह तिसृणामेकमर्थं श्रुतीनां
त्वामेव त्वं परात्मन् प्रियसखसहितो नेमिथ क्षेमरूपम् ॥

தத்ராஸீனம் புஜங்காதிபசயனதலே திவ்யபூஷாயு
தாத்யை-
ராவீதம் பீதசேலம் ப்ரதிநவஜலதச்யாமலம்
ஸ்ரீமதங்கம் |
மூர்த்தீநாமீசிதாரம் பரமிஹ திஸ்ருணாமேகமர்த்தம்
ச்ருதீனாம்
த்வாமேவ த்வம் பராத்மன் ப்ரியஸகஸஹிதோ நேமித
க்ஷேமரூபம்

ஹே! குருவாயூரப்பா! ஆதிசேஷன் மேல் வீற்றிருப்பவரும், திவ்யமான ஆபரணங்களாலும், ஆயுதங்களாலும் அலங்கரிக்கப்பட்டவரும், பீதாம்பரம் அணிந்தவராயும், புதிய மேகம் போன்ற காந்தியுள்ளவராயும் (மார்பில்) மஹாலக்ஷ்மியுடன் விளங்குபவரும், மூன்று மூர்த்திகளுக்கும் ஈசனும், மிகச்சிறந்தவராயும், வேதங்களின் முக்யப் பொருளாயும் பரம புருஷஸ்வரூபமாயும் இருப்பதாய் தங்களையே, அங்கு இருப்பதைப் பார்த்துப் பிரிய தோழனை அர்ஜுனனுடன் தாங்கள் நமஸ்காரம் செய்தீராமே.

**வைகுண்டத்திலுள்ள பகவான் கூறியது**

युवां मामेव द्वावधिकविवृतान्तर्हिततया
विभिन्नौ सन्द्रष्टुं स्वयमहमहार्षं द्विजसुतान् ।
नयेतं द्रागेतानिति खलु वितीर्णान् पुनरमून्
द्विजायादायादाः प्रणुतमहिमा पाण्डुजनुषा ॥ 9 ॥

யுவாம் மாமேவ த்வாவதிகவிவ்ருதா ந்தர்ஹிததயா
விபின்னௌ ஸன்த்ரஷ்டும் ஸ்வய மஹ மஹார்ஷம்
த்விஜஸூதான் |
நயேதம் த்ராகேதா நிதி கலு விதீர்ணன் புனரமூன்
த்விஜாயாதாயாதா : ப்ரணுதமஹிமா பாண்டு
ஜனுஷா ||

ஹே! குருவாயூரப்பா! பெருமை அதிகமாய் இருப்பதாலும் பெருமை மங்கியிருப்பதாலும் இரண்டாகப் பிரித்து (ஜீவாத்மாவாகவும், பரமாத்மாவாகவும்) இருப்பவர்களான உங்கள் இருவரையும் (ஜீவபாவம் இல்லாத பகவானை தங்களையும், ஜீவ பாவமுள்ள அர்ஜுனனையும்) பார்க்க வேண்டி பிராமணக் குழந்தைகளை நானே அபஹரித்தேன் குழந்தைகளை எடுத்துச் செல்லுங்கள் என அங்கு காணப்பட்ட பகவான் கூறினர். உடன் தங்களை அர்ஜுனன் ஸ்தோத்திரம் செய்தான். தாங்கள் அவனுடன் அக்குழந்தைகளை எடுத்து வந்து பிராமணரிடம் கொடுத்தீராமே.

### பகவானின் செய்கையைக் கூறுதல்

एवं नानाविहारैर्जगदभिरमयन् वृष्णिवंशं प्रपुष्ण-
न्नीजानो यज्ञभेदैरतुलविहृतिभिः प्रीणयन्नेणनेत्राः ।
भूभारक्षेपदंभात् पदकमलजुषां मोक्षणायावतीर्णः
पूर्णं ब्रह्मैव साक्षाद्यदुषु मनुजतारूषितस्त्वं व्यलासीः ॥10॥

ஏவம் நானாவிஹாரைர்ஜகதபிரமயன் வ்ருஷ்ணிவம்
சம் ப்ரபுஷ்ண-
ந்னீஜானோ யக்ஞபேதைரதுலவிஹ்ருதிபி:
ப்ரீணயன்னேணநேத்ரா |
பூபாரக்ஷேபதம்பாத் பதகமலஜுஷாம் மோக்ஷ
ணாயாவதீர்ண:
பூர்ணம் ப்ரம்ஹைவ ஸாக்ஷாத்யதுஷு மனுஜதா
ருஷிதஸ்த்வம் வ்யலாஸீ: ||

ஹே! குருவாயூரப்பா! இவ்விதம் பலவித லீலைகளால் உலகம் முழுவதையும் ரமிக்கச் செய்தும், வ்ருஷ்ணி வம்சங்களை போஷித்தும், பலவித யக்ஞங்களைச் செய்து கொண்டும், நிகரற்ற விளையாட்டுகளால் பெண்களை ஆனந்திக்கச் செய்துகொண்டும் இருந்தீர். பூமியின் பாரத்தைப் போக்கும் வ்யாஜத்தில் தங்களுடைய பத்மம் போன்ற சரணத்தை அடைந்தவர்களை ஸம்ஸாரஸாகரத்தி லிருந்து கறையேற்றவே அவதாரம் செய்தீர். உண்மை யான பூர்ணப்ரம்மமான தாங்கள் யாதவ குலத்தில் பிறந்து மானிட உருவத்தால், தங்கள் ஸ்வயரூபத்தை மறைத்துக் கொண்டு விளங்குகிறீர்.

## வஸுதேவரும் உத்தவரும் ஞானஉபதேசம் அடைதல்

प्रायेण द्वारवत्यामवृतदयि तदा नारदस्त्वद्रसार्द्र-
स्तस्माल्लेभे कदाचित्खलु सुकृतनिधिस्त्वत्पिता तत्वबोधम् ।
भक्तानामग्रयायी स च खलु मतिमानुद्धवस्त्वत्त एव
प्राप्तो विज्ञानसारं स किल जनहिताया धुनाऽऽस्ते बदर्याम् ॥

ப்ராயேண த்வாரவத்யாமவ்ருததயி ததா நார
தஸ்த்வத்ரஸார்த்ர
ஸ்தஸ்மால்லேபே கதாசித்கலு ஸுக்ருதநிதிஸ்த்வத்
பிதா தத்வபோதம் |
பக்தாநாமக்ரயாயீ ஸ ச கலு மதிமானுத்தவஸ்த்வத்த
ஏவ
ப்ராப்தோ விஞ்ஞான ஸாரம் ஸ கில ஜனஹிதா
யாதுனாऽऽஸ்தே பதர்யாம் ||

ஹே! குருவாயூரப்பா! அப்பொழுது தங்களிடத்தில் பக்தி கொண்டு நாரதர் பெரும்பாலும் துவாரகையிலேயே வஸித்து வந்தார். அதுசமயம் புண்யத்திற்கு இருப்பிட மான வஸுதேவன் நாரதரிடமிருந்து, தத்வக் ஞானத்தை

அறிந்தார். மேலும் பக்தர்களுக்குள் முதன்மையானவரும், சிறந்த புத்திமானுமான உத்தவர் தங்களிடமிருந்து தத்வக் ஞானத்தை அடைந்து, ஜனங்களுடைய நன்மைக்காக இப்பொழுதும் பதரியில் வஸிக்கிறாரமே,

## கிருஷ்ணவதாரத்தின் உயர்வைக் கூறுவது

सोऽयं कृष्णावतारो जयति तव विभो यत्र सौहार्दभीति-
स्नेहद्वेषानुरागप्रभृतिभिरतुलैरश्रमैर्योगभेदैः ।
आर्तिं तीर्त्वा समस्ताममृतपदमगुः सर्वतः सर्वलोकाः
स त्वं विश्वार्तिशान्त्यै पवनपुरपते भक्तिपूर्त्यै च भूयाः ॥

ஸோऽயம் க்ருஷ்ணவதாரோ ஜயதி தவ விபோ யத்ர ஸௌஹார்தபீதி
ஸ்நேஹத்வேஷானுராகப்ரப்ருதிபிரதுலைரச்ரமைர் யோகபேதை: |
ஆர்த்திம் தீர்த்வா ஸமஸ்தாமம்ருதபதமகு: ஸர்வத: ஸர்வலோகா:
ஸ த்வம் விச்வார்த்திசாந்த்யை பவனபுரபதே பக்திபூர்த்யை ச பூயா: ||

ஏ, ப்ரபோ! அப்பேர்ப்பட்ட இந்த கிருஷ்ணவதாரம், மிக்க சிறப்பாய் விளங்குகிறது. ஏனென்றால், பாண்டவர்கள் ப்ரியத்திலும், கம்ஸன் பயத்திலும், நந்தன், வஸுதேவன் அன்பிலும், சிசுபாலன் முதலியோர்கள் த்வேஷத்திலும், கோபிகைகள் காமத்தாலும், இவ்விதம் சிரமமின்றி நிகரற்ற பலவித யோகங்களால் (உபாயங்களால்) எல்லா ஜனங்களும், எல்லா துக்கங்களையும் போக்கிக்கொண்டு மோக்ஷத்தையும் அடைந்தார்கள்.

ஏ, குருவாயூரப்பா! உலகங்களின் துக்கம் நீங்குவதற்காகவும், பக்தியின் பூர்த்தியை அடையும் தாங்கள் விளங்க வேண்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ குருவாயூரப்பனின் மஹிமை

பம்பாயில் பெரிய உத்யோகத்தில் ஒருவர் இருந்தார். அவருக்கு சில வாரங்களாக ஆபீஸ் சென்றதும் ஒரே மனக் கலக்கமாய் இருக்கும். ஏதோ ப்ரமை பிடித்தவர்போல் இருப்பார். பலவிதமான முறையில் சிகிச்சை செய்தும் ஒன்றும் பயனளிக்கவில்லை. வீட்டில் எல்லோரும் துன்பமடைந்தார்கள். ஆபீஸில் அவரை வேலையிலிருந்து விலக்கும் நிலை வந்துவிட்டது. அக்குடும்பம் முழுவதும் இவர் சம்பாதிப்பதைக் கொண்டே வாழ்ந்து வந்ததால் மிக்க கஷ்டத்தை யடைந்தார்கள் பிறகு அவர் நேரில் கவலையுடன் வந்து என்னைக் கேட்டார். அதற்கு ஸ்ரீ நாராயணீயத்தை பாராயணம் செய்ய வேண்டும் என்றும் ஸ்ரீ அப்பனின் அருளால்தான் நிவிருத்தி ஆக வேண்டும் என்றும் அவரும் அதை ஸத்யமெனக் கருதி அவர் தன் குடும்பத்துடன் குருவாயூர் சென்று சில தினங்கள் அங்கு தங்கி தினந்தோறும் ஸ்ரீ அப்பனை தர்சனம் செய்தும் ஸ்தோத்திரம் பாராயணம் செய்தும், வந்தார். பிறகு நன்கு குணமாகி பம்பாய் திரும்பினர். உடன் முன்பு இருந்த வேலையே கிடைத்தது. குடும்பத்தினர்களும் மிக்க ஆச்சர்யமும் சந்தோஷமும் அடைந்தார்கள்.

ஸ்ரீ அப்பனின் அருளால் மீண்டும் முன்போலவே எல்லோரும் சுகமாய் வாழ்ந்து வருகிறார்கள்.

—o—

## பகவான் ஐச்வர்யத்தை அளிப்பது

रमाजाने जाने यदिह तव भक्तेषु विभवो
न सद्यः सम्पद्यस्तदिह मदकृत्त्वादशमिनाम् ।
प्रशान्तिं कृत्वैव प्रदिशसि ततः काममखिलं
प्रशान्तेषु क्षिप्रं न खलु भवदीये च्युतिकथा ॥ 1 ॥

ரமாஜானே ஜானே யதிஹ தவ பக்தேஷு விபவோ
ந ஸத்ய: ஸம்பத்யஸ்ததிஹ மதக்ருத்வாதசமிநாம் |
ப்ரசாந்திம் க்ருத்வைவ ப்ரதிசஸி தத: காமமகிலம்
ப்ரசாந்தேஷு க்ஷிப்ரம் ந கலு பவதீயே ச்யுதிகதா ||

லக்ஷ்மீபதியான ஹே, குருவாயூரப்பா! இவ்வுலகத்தில் தங்களிடத்தில் பக்தி செய்கிறவர்களிடத்தில் ஐச்வர்யத்தை சீக்கிரம் அளிப்பதில்லை ஏனென்றால், இவ்வைச்வர்யத்தால், மதம் ஏற்படுகிறது என்றெண்ணியே அவ்விதம் செய்கிறீர், என நினைக்கிறேன். இந்திரியங்களை அடக்காதவர்களுக்கு முன்பு சாந்தியை (அடக்கத்தை) அளித்து உடன் அவர்களுடைய இஷ்டம் முழுவதையும் அளிக்கிறீர் தங்களுடைய பக்தர்களுக்கு நழுவுதல் (குறைவு) என்ற பேச்சும் ஏற்படுவதில்லை.

## ஸ்ரீ கிருஷ்ணோபாஸனையின் மேன்மையைக் கூறுவது

सद्यः प्रसादरुषितान् विधिशङ्करादीन्
केचिद्विभो निजगुणानुगुणं भजन्तः ।
भ्रष्टा भवन्ति बत कष्टमदीर्घदृष्ट्या
स्पष्टं वृकासुर उदाहरणं किलास्मिन् ॥ 2 ॥

ஸத்ய: ப்ரஸாதருஷிதான் விதிசங்கராதீன்
கேசித்விபோ நிஜகுணானுகுணம் பஜந்த: |
ப்ரஷ்டா பவந்தி பத கஷ்டமதீர்க்கத்ருஷ்ட்யா
ஸ்பஷ்டம் வ்ருகாஸுர உதாஹரணம் கிலாஸ்மின் ||

ப்ரபுவான ஹே குருவாயூரப்பா! சிலர் சீக்கிரம் சந்தோஷத்தையும், கோபத்தையும் அடைகிறவர்களான பிரம்மா, பரமேச்வரன் முதலிய தேவர்களை தன் குணத்திற்குத் தக்கவாறு ஸேவிக்கிறார்கள். நீண்ட நோக்க மில்லாததால் அவர் அந்த தேவதைகளின் கோபத்தால் நழுவி விடுகிறார்கள். கஷ்டம், இவ்விதமான வேறு தேவர்களின் உபாஸகர்கள் நழுவுவதில் வ்ருகாஸுரனே தெளிவாய் உதாரணமாவான்.

## நாரதர் உபதேசத்தின் நோக்கம்

शकुनिजः स तु नारदमेकदा
त्वरिततोषमपृच्छदधीश्वरम् ।
स च दिदेश गिरिशमुपासितुं
न तु भवन्तमबन्धुमसाधुषु ॥ 3 ॥

சகுநிஜ: ஸ து நாரதமேகதா
த்வரிததோஷ மப்ருச்சததீச்வரம் |
ஸ ச திதேச கிரீசமுபாஸிதும்
ந து பவந்தம பந்துமஸாதுஷு ||

ஹே, குருவாயூரப்பா! சகுனியின் பிள்ளையான வ்ருகாஸுரன் ஒரு சமயம் நாரதரைப் பார்த்து, 'சீக்கிரம் ப்ரஸன்னமாகும் தெய்வம் எது?' எனக் கேட்டான். நாரதரும் பரமேச்வரனை உபாஸிக்கும்படி உபதேசம் செய்தார். அஸத் ஜனங்களிடத்தில் பிரியமில்லாதவரான தங்களை (அஸத்ஜனமான) அவனிடம், உபாஸனை செய்யும்படி கூற வில்லை.

### வ்ருகாசுரனின் தவம்

तपस्तप्त्वा घोरं स खलु कुपितः सप्तमदिने
शिरश्छित्त्वा सद्यः पुरहरमुपस्थाप्य पुरतः ।
अतिक्षुद्रं रौद्रं शिरसि करदानेन निधनं
जगन्नाथाद्वव्रे भवति विमुखानां क्व शुभधीः ॥ 4 ॥

தபஸ்தப்த்வா கோரம் ஸ கலு குபித: ஸப்தமதினே
சிரச்சித்வா ஸத்ய: புரஹரமுபஸ்தாப்ய புரத: |
அதிக்ஷுத்ரம் ரௌத்ரம் சிரஸிகரதானேன நிதநம்
ஜகந்நாதாத்வவ்ரே பவதி விமுகாணும் க்வ சுபதீ: ||

ஹே, குருவாயூரப்பா! அந்த வ்ருகாஸுரன் கோரமான தவம் செய்து, ஏழாவது தினம் மிக்க கோபத்துடன் தன் தலையை அறுத்துக் கொண்டான். உடன் ஸ்ரீ பரமேச்வரன், அவனுக்கெதிரில் தோன்றினர். அசுரனும், நான் யாருடைய தலையில் கை வைக்கிறேனே, அவன் உடன் இறக்க வேண்டும்: என்று மிக்க துச்சமானதும், பயங்கரமான வரத்தை உலகிற்கே ஈசனை ஸ்ரீ பரமேச்வரனிடமிருந்து வேண்டினன். தங்களிடத்தில் பக்தியில்லாதவர்களுக்கு எவ்விதம் நல்ல புத்தி உண்டாகும்?

### ஸ்ரீ பகவான் காக்க வந்தது

मोक्तारं बन्धमुक्तो हरिणपतिरिव प्राद्रवत्सोऽथ रुद्रं
दैत्याद्भीत्या स देवो दिशि दिशि वलते पृष्ठतो दत्तदृष्टिः ।
तूष्णीके सर्वलोके तव पदमधिरोक्ष्यन्तमुद्वीक्ष्य शर्वं
दूरादेवाग्रतस्त्वं पटुवटुवपुषा तस्थिषे दानवाय ॥ 5 ॥

மோக்தாரம் பந்தமுக்தோ ஹரிணபதிரிவ ப்ராத்ரவத்
ஸோऽதருத்ரம்
தைத்யாத்பீத்யா ஸ்ம தேவோ திசிதிசிவலதே
ப்ருஷ்டதோ தத்தத்ருஷ்டி: |
தூஷ்ணீகே ஸர்வலோகே தவ பதமதிரோக்ஷ்யந்த
முத்விக்ஷ்ய சர்வம்
தூராதேவாக்ரதஸ்த்வம் படுவடுவபுஷா தஸ்திஷே
தானவாய ||

ஹே, குருவாயூரப்பா! அந்த வ்ருகாஸுரன், கட்டி லிருந்து விடுதலை அடைத்த சிங்கம் விடுவித்தவனைத் துரத்துவது போல், வரமளித்த பரமேச்வரனை விரட்டினன். (அதாவது பரமேச்வரனின் தலையில் கைவைத்து அவரை நாசம் செய்ய நினைத்தான் என்பதாகும்) தேவனுன ஶ்ரீ பரமேச்வரன், அசுரனிடத்தில் பயத்தால் திரும்பிப் பார்த்துக் கொண்டே எல்லாதிக்குகளிலும் ஓடினுர். எல்லா உலகமும் பேசாமல் இருந்து விடவே தங்களுடைய ஸ்தான மான வைகுண்டத்திற்குச் செல்ல முனைந்தார். அதை யறிந்து தாங்கள் உடன் துரத்திக் கொண்டுவரும் அசுரன் வெகு தூரத்தில் வரும் போதே அவனுக்காக ஸமர்தனுன ஒரு பிரம்மசாரி வேஷம் கொண்டு நின்றீராமே.

### அசுரவதம்

भद्रं ते शाकुनेय भ्रमसि किमधुना त्वं पिशाचस्य वाचा
सन्देहश्चेन्मदुक्तौ तव किमु न करोष्यङ्गुलीमङ्ग मौलौ ।
इत्थं त्वद्वाक्यमूढः शिरसि कृतकरः सोऽपतच्छिन्नपातं
भ्रंशो ह्येवं परोपासितुरपि च गतिः शूलिनोऽपि त्वमेव ॥6॥

பத்ரம் தே சாகுநேய ப்ரமஸி கிமதுநா த்வம் பிசாசஸ்ய
வாசா
ஸந்தேஹச் சேந்மதுக்தௌ தவ கிமு ந கரோஷ்யங்குலீ
மங்க மௌலௌ |
இத்தம் த்வத்வாக்யமூட: சிரஸி க்ருதகர: ஸோऽபதச்
சிந்ந பாதம்
ப்ரம்சோ ஹ்யேவம் பரோபாஸிதுரபி ச கதி:
சூலிநோऽபி த்வமேவ ||

ஹே குருவாயூரப்பா! அந்த வ்ருகாசுரன் தங்களிடம் வந்ததும், தாங்கள், 'ஏ வ்ருகாசுரனே! உனக்கு மங்களம் உண்டாகட்டும். நீ அந்த பிசாசின் பேச்சைக் கேட்டுக் கொண்டு ஏன் இப்போழுது இங்குமங்கும் ஓடுகிறாய். என் வார்த்தையில் உனக்கு சந்தேஹம் இருந்தால், நீ உன் தலையில் கையை ஏன் கொண்டு பார்க்கவில்லை?' இவ்விதம் தங்கள் வார்த்தையைக் கேட்டு மதிமயங்கிய வ்ருகாசுரன் தன் தலையில் கையை வைத்துக் கொண்டான். உடன் அந்த வ்ருகாசுரன் வேரு அறுபட்ட மரம்போல் கீழே விழுந்தான். இப்படி (தங்களைத்தவிர) வேறு தேவதையை உபாஸிப்பவர்களுக்கு நழுவுதல் உண்டு. அந்த பரமேச்வரனுக்கும் தாங்களல்லவா காக்கிறவர்.

### ப்ருகு ப்ரம்மாவையும், சிவனையும் பரீக்ஷித்தது

भृगुं किल सरस्वतीनिकटवासिनस्तापसा-
स्त्रिमूर्तिषु समादिशन्नधिकसत्त्वतां वेदितुम् ।
अयं पुनरनादरादुदितरुद्धरोषे विधौ
हरेऽपि च जिहिंसिषौ गिरिजया धृते त्वामगात् ॥ 7 ॥

ப்ருகும் கில ஸரஸ்வதீநிகடவாஸிநஸ்தாபஸா
ஸ்த்ரிமூர்திஷு ஸமாதிசந்நதிகஸத்வதாம் வேதிதும் |
அயம் புநரநாதராதுதிதருத்தரோஷே விதௌ
ஹரேऽபி ச ஜிஹிம்ஸிஷௌகிரிஜயா த்ருதே
த்வாமகாத் ||

ஹே, குருவாயூரப்பா! ஸரஸ்வதீ நதிக்கரையில் வஸித்து வந்த முனிவர்கள் ஒரு சமயம் ப்ரம்மா, விஷ்ணு, சிவன் இம்மூவர்களிடத்தில், யாரிடம் ஸத்வகுணம் இருக்கிறது என்றறிய ப்ருகு என்ற ரிஷியை அனுப்பினார்கள். அவரும் அவ்விதம் ப்ரம்மலோகம் சென்றார்; நமஸ்காரம் செய்யாமல் இருக்கும் ப்ருகுவைக் கண்ட ப்ரம்மா கோபமடைந்து பிறகு அக்கோபத்தை அடக்கிக் கொண்டார். அதனால் ப்ருகு கைலாசம் சென்று பரமேச்வரனிடம் சென்றார். ப்ருகுவைக் கண்டதும் ஸ்ரீ பரமேச்வரன் அவரை ஆலிங்கனம் செய்து கொள்ள ஸமீபம் வந்தார். அது சமயம் ப்ருகு, பரமேச்வரரை, "உங்களுடைய ஆசாரங்கள் மங்கள மற்றவைகள்" என நிராகரித்தார். அதனால் பரமசிவன் கோபமடைந்ததும், பார்வதிதேவி வந்து தடுத்தாள். பிறகு தங்களிடமே ப்ருகு வந்தாராமே.

## காலால் உதைத்த ப்ருகு முனிவரை பகவான் வேண்டுதல்

सुप्तं रमाङ्कभुवि पङ्कजलोचनं त्वां
विप्रे विनिघ्नति पदेन मुदोत्थितस्त्वम् ।
सर्वं क्षमस्व मुनिवर्य भवेत्सदा मे
त्वत्पादचिह्नमिह भूषणमित्यवादीः ॥ 8 ॥

*ஸுப்தம் ரமாங்க புவி பங்கஜலோசநம் த்வாம் விப்ரே*
*விநிக்நதி பதேநமுதோத்திதஸ்த்வம்,*
*ஸர்வம் க்ஷமஸ்வ முனிவர்ய பவேத்ஸதா மே*
*த்வத்பாதசிஹ்நமிஹ பூஷணமித்யவாதீ:*

ஹே, குருவாயூரப்பா! தாமரைக் கண்ணனை தாங்கள் மஹாலக்ஷ்மியின் மடியில் படுத்து தூங்கிக் கொண்டிருந்தீர். அப்பொழுது ப்ருகு தங்களிடம் வந்து காலால்

உதைத்தார். உடனே தாங்கள் சந்தோஷத்துடன் விழித்து எழுந்து 'ஹே, முனிச்ரேஷ்டரே! எல்லாவற்றையும் பொறுக்க வேண்டும். தங்களுடைய பாதம் பட்ட இந்த அடையாளமானது என் மார்பில் எப்பொழுதும் இருக்க வேண்டும். இதுவே எனக்கு ஆபரணம் எனக் கூறினீராமே.

## முனிவர்கள் நிச்சயித்த பகவான்

निश्चित्य ते च सुदृढं त्वयि बद्धभावाः
सारस्वता मुनिवरा दधिरे विमोक्षम् ।
त्वामेवमच्युत पुनश्च्युतिदोषहीनं
सत्त्वोच्चयैकतनुमेव वयं भजामः ॥ 9 ॥

*நிச்சித்ய தே ச ஸுத்ருடம் த்வயி பத்தபாவா:*
*ஸாரஸ்வதா முனிவரா ததிரே விமோக்ஷம்*
*த்வாமேவமச்யுத புநச்ச்யுதி தோஷஹீநம்*
*ஸத்வோச்சயைகதநுமேவ வயம் பஜாம:*

ஹே, குருவாயூரப்பா! ப்ருகு முனிவர் மூலம் இதைக் கேட்ட, ஸரஸ்வதீ நதிக்கரையில் உள்ள முனிவர்கள், 'தாங்கள் ஒருவரே ஸத்வகுணம் நிறைந்த மூர்த்தி' என நிச்சயித்து தங்களிடத்திலேயே திடமான பக்தி கொண்டார்கள். வெகு தினங்களுக்குப் பிறகு மோக்ஷத்தையும் அடைந்தார்கள். ஹே, அச்சுத! மீண்டும் நழுவுதல் என்ற தோஷமே இல்லாததும், பூர்ண ஸத்வ குணத்தினால் மட்டும் விளங்குகிறதுமான தங்கள் ஸ்வரூபத்தை நாங்கள் ஸேவிக்கிறோம்.

## நம்பூதிரியின் பிரார்த்தனை

जगत्सृष्ट्यादौ त्वां निगमनिवहैर्वन्दिभिरिव
स्तुतं विष्णो सच्चित्परमरसनिर्द्वैतवपुषम् ।
परात्मानं भूमन् पशुपवनिताभाग्यनिवहं
परीतापश्रान्त्यै पवनपुरवासिन् परिभजे ॥ 10 ॥

ஜகத்ஸ்ருஷ்ட்யாதௌ த்வாம் நிகமநிவஹைர்வந்திபிரிவ
ஸ்துதம் விஷ்ணோ ஸச்சித்பரமரஸநிர்த்வைதவபுஷம்
பராத்மாநம் பூமந் பசுபவநிதாபாக்யநிவஹம்
பரீதாபச்ராந்த்யை பவநபுரவாஸிந் பரிபஜே ॥

"உலகங்களை உண்டுபண்ண ஆரம்பித்த பொழுது, வந்திகள்போல், உபனிஷத்துக் கூட்டங்கள் தங்களை ஸ்தோத்திரம் செய்தது. தாங்களோ சத்சித் ஆனந்த ரூபமாகவும், அத்வைத ரூபமாயும், பரமாத்மாவாயும் இருப்பவர். பெருமை வாய்ந்த விஷ்ணுவான ஹே, குருவாயூரப்பா! கோபிகைகளுடைய பாக்கியத்தின் குவியலான தங்களை எல்லா துக்கங்களைப் போக்க வேண்டி ஸேவிக்கிறேன்". என நம்பூதிரி கூற, ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## 90-வது தசகம்

### ப்ரும்மம் ஒன்றுதான்

वृकभृगुमुनिमोहिन्यम्बरीषादिवृत्ते-
ष्वयि तव हि महत्त्वं सर्वशर्वादिजैत्रम् ।
स्थितमिह परमात्मन् निष्कलार्वागभिन्नं
किमपि तदवभातं तद्धि रूपं तवैव ॥ 1 ॥

வ்ருக ப்ருகுமுனிமோஹிந்யம்பரீஷாதி வ்ருத்தே—
ஷ்வயி தவ ஹி மஹத்வம் ஸர்வசர்வாதிஜைத்ரம்
ஸ்திதமிஹ பரமாத்மந் நிஷ்கலார்வாகபிந்நம்
கிமபி ததவபாதம் தத்தி ரூபம் தவைவ ‖

ஓ, குருவாயூரப்பா! வ்ருகாசுரன், ப்ருகு முனிவர், மோஹினி, அம்பரீஷன் முதலியவர்களுடைய சரித்திரத்தின் மூலம் தங்களுடைய மஹிமை பரமேச்வரன் முதலிய எல்லா தேவர்களையும் ஜயிக்கக் கூடியது என்று இவ்வுலகில் நன்கு விளங்குகிறது, ஹே, பரமாத்மாவே! நிஷ்களப் ப்ரும்மத்திற்கு மாருன பிரும்மா, விஷ்ணு, சிவன் இவர்களிடத்தில் பேத மின்றியும், யாதொரு ஸ்வரூபம் விளங்குகிறதோ அதுவே தங்களுடைய ஸ்வரூபமாக ஆகும்

### ஸ்ரீ சதாசிவமும் ஸ்ரீக்ருஷ்ணனே

मूर्तित्रयेश्वरसदाशिवपञ्चकं यत् प्राहु:
परात्मवपुरेव सदाशिवोस्मिन् ।
तत्रेश्वरस्तु स विकुण्ठपदस्त्वमेव
त्रित्वं पुनर्भजसि सत्यपदे त्रिभागे ॥ 2 ॥

மூர்த்தித்ரயேச்வர ஸதாசிவ பஞ்சகம் யத்
ப்ராஹு: பராத்மவபுரேவ ஸதாசிவோऽஸ்மிந் ।
தத்ரேச்வரஸ்து ஸ விகுண்டபதஸ்த்வமேவ
த்ரித்வம் புநர்பஜஸி ஸத்யபதே த்ரிபாகே ॥

ஓ, குருவாயூரப்பா! ப்ரம்மா, விஷ்ணு, சிவன், ஈச்வரன் சதாசிவம் இவ்வைந்து மூர்த்திகளை பக்தர்கள் கூறுகிருர்கள். அந்த சதாசிவமும் பரமாத்ம ஸ்வரூபமான தாங்களே யாகும். அங்கு கூறும் ஈச்வரனும், வைகுண்டத்தில் வஸிக்கும் தாங்களேயாகும். மூன்ருய் இருக்கும் ஸத்ய ஸ்தானமான

ப்ரம்ம லோகம், வைகுண்டம், சிவலோகம் இவைகளில் தாங்களே ப்ரம்மாவாகவும், சிவனாகவும் மூன்றாய் இருந்து விளங்குகிறீர்.

### ஒரே மூர்த்திக்குக் குணங்களால் பலபெயர்கள்

तत्रापि सात्त्विकतनुं तव विष्णुमाहु-
धाता तु सत्त्वविरलो रजसैव पूर्णः ।
सत्त्वोत्कटत्वमपि चास्ति तमोविकार-
चेष्टादिकं च तव शङ्करनाम्नि मूर्तौ ॥ 3 ॥

தத்ராபி ஸாத்விகதநும் தவ விஷ்ணுமாஹுர்
தாதா து ஸத்வவிரலோ ரஜஸைவ பூர்ண:
ஸத்த்வோத்கடத்வமபி சாஸ்தி தமோ விகார
சேஷ்டாதிகம் ச தவ சங்கர நாம்நி மூர்தௌ ||

ஓ, குருவாயூரப்பா! அந்த மூன்று மூர்த்திகளில் ஸாத்விக குணம் நிறைந்த தங்களையே விஷ்ணுவென்றும், ஸத்வ குணம் குறைந்து ரஜோ குணங்கள் நிறைந்திருப்பவரை பிரம்மா வென்றும், ஸத்வ குணம் அதிகமாய் இருந்தும், தமோ குணங்களுடைய செய்கைகள் சங்கரன் என்ற பெயருள்ள தங்களுடைய வேறு மூர்த்தியில் இருக்கிற தாகவும் கூறுகிறார்கள்.

### பரமார்த்த ரூபத்தை விளக்குதல்

तं च त्रिमूर्त्यतिगतं परपूरुषं त्वां
शर्वात्मनापि खलु सर्वमयत्वहेतोः ।
शंसन्त्युपासनविधौ तदपि स्वतस्तु
त्वद्रूपमित्यतिदृढं बहु नः प्रमाणम् ॥ 4 ॥

தஞ்ச த்ரிமூர்த்யதிகதம் பரபூருஷம் த்வாம்
சர்வாத்மனோऽபி கலு ஸர்வமயத்வ ஹேதோ: |
சம்ஸன்த்யுபாஸனவிதௌ ததபி ஸ்வதஸ்து
த்வத்ரூபமித்யதித்ருடம் பஹு ந: ப்ரமாணம் ||

ஓ, குருவாயூரப்பா! இம்மூவர்களைக் காட்டிலும் மேலாய் இருக்கும் பரம புருஷனை (பிரம்மாண்டத்திற்கு அப்பாலும், உள்ளும் இருப்பவரான) தங்களை, யாவராகவும் தாங்கள் இருப்பதால், சைவர்கள் உபாஸிக்கும் விஷயத்தில் பரமேச்வரனாகவும் கூறுகிறார்கள். அதுவும் பரமார்த்தமான தங்களுடைய ஸ்வரூபம் என்று மறுக்க முடியாத பல ப்ரமாணங்கள் எங்களுக்கு இருக்கின்றன.

### ஸ்ரீ சங்கராசார்யார் பக்ஷபாதி அல்ல

श्रीशङ्करोऽपि भगवान् सकलेषु तावत्
त्वामेव मानयति यो न हि पक्षपाती ।
त्वन्निष्ठमेव स हि नामसहस्रकादि
व्याख्यद्भवत्स्तुतिपरश्च गतिं गतोऽन्ते ॥ 5 ॥

ஸ்ரீசங்கரோபி பகவான் சகலேஷு தாவத்
த்வாமேவ மானயதி யோ ந ஹி பக்ஷபாதீ |
த்வன்னிஷ்டமேவ ஸ ஹி நாமஸஹஸ்ரகாதி
வ்யாக்யத் பவத்ஸ்துதி பரச்ச கதிம் கதோऽந்தே ||

ஓ, குருவாயூரப்பா! பகவானை ஸ்ரீ ஆதி சங்கராசார்யார் (தான் பரமசிவனுடைய அவதாரமாக இருந்த போதிலும்) எல்லா தேவர்களிலும் தங்களையே வெகுமதிக்கிறார். அவர் பக்ஷபாதி இல்லை. (அதாவது, ஒரு சார்பாக பேசுபவர் இல்லை) அவர் ஸஹஸ்ரநாமம், கீதை முதலிய

வற்றை தங்களைக் குறிப்பதாக வ்யாக்யானம் செய்திருக்கிறார். தங்களைப் பற்றிய ஸ்தோத்திரங்களையும் செய்திருக்கிறார். முடிவில் மோக்ஷத்தையும் அடைந்தாராமே.

## ஸ்ரீ விஷ்ணுவே பரம் பொருள் என சங்கரர் கூறியது

मूर्तित्रयातिगमुवाच च मन्त्रशास्त्र-
स्यादौ कलायसुषुमं सकलेश्वरं त्वाम् ।
ध्यानं च निष्कलमसौ प्रणवे खलूक्त्वा
त्वामेव तत्र सकलं निजगाद नान्यम् ॥ 6 ॥

*மூர்த்தித்ரயாதிகமுவாச ச மந்த்ரசாஸ்த்ர—*
*ஸ்யாதௌ கலாயஸுஷுமம் ஸகலேச்வரம் த்வாம் |*
*த்யானம் ச நிஷ்களமஸௌ ப்ரணவே கலூக்த்வா*
*த்வாமேவ தத்ர ஸகலம் நிஜகாத நான்யம் ||*

ஓ, குருவாயூரப்பா! மந்திர சாஸ்த்திரத்தின் ஆரம்பத்தில் ஸ்ரீ பகவத் பாதாள் கலாயபுஷ்பம் (காசாம் பூ) போல் காந்தியுள்ளவரும், எல்லாவற்றிற்கும் ஈச்வரனுயும் உள்ள தங்களை ப்ரம்மா, விஷ்ணு, சிவன் இம்மூர்த்திகளுக்கும் மேலாக இருப்பதாகக் கூறியுள்ளார். மேலும் இவர் ப்ரணவத்தில், நிஷ்களமான (நிர்க்குணமான) ப்ரம்மத்தின் தியானத்தைக் கூறி, அதற்கு ஸாதனமாக ஸகுணமான (கல்யாண குணங்களுடன் கூடி) விஷ்ணுவான தங்களையே கூறினர். வேறு ஒரு தெய்வத்தையும் கூறவில்லை.

## புராண ஸங்க்ரஹத்தில் கூறிய ஸ்ரீ பகவானின் மஹிமை

समस्तसारे च पुराणसङ्ग्रहे
विसंशयं त्वन्महिमैव वर्ण्यते ।
त्रिमूर्तियुक्सत्यपदत्रिभागतः
परं पदं ते कथितं न शूलिनः ॥ 7 ॥

ஸமஸ்த ஸாரே ச புராண ஸங்க்ரஹே
விஸம்சயம் த்வன்மஹிமைவ வர்ண்யதே |
த்ரிமூர்த்தியுக்ஸத்ய பதத்ரிபாகத:
பரம் பதம் தே கதிதம் ந சூலின: ॥

ஓ, குருவாயூரப்பா! எல்லா புராணங்களுடைய ஸாரத்தைக் கூறும் புராண ஸங்க்ரஹம் என்னும் க்ரந்தத்தில் தங்கள் மஹிமையே வர்ணிக்கப் பட்டிருக்கிறது. அதாவது மும்மூர்த்திகளுடன் கூடிய ஸத்ய லோகமானது மூன்று உலகைக் காட்டிலும் மேலானதாக, (ப்ரம்மாண்டத்திற்கு அப்பால் இருக்கிறதாக) தங்களுடைய ஸ்தானமான வைகுண்டம் இருக்கிறதாய் கூறப்பட்டுள்ளது. அவ்விதம் ஸ்ரீ சிவனுடைய உலகத்தைக் கூறவில்லை.

## ப்ரம்மதேவன் கண்டஸ்வரூபம்

यद्ब्राह्मकल्प इह भागवतद्वितीय-
स्कन्धोदितं वपुरनावृतमीश धात्रे ।
तस्यैव नाम हरिशर्वमुखं जगाद
श्रीमाधवः शिवपरोपि पुराणसारे ॥ 8 ॥

யத்ப்ராம்ஹ கல்ப இஹ பாகவத்விதீய—
ஸ்கந்தோதிதம் வபுரநாவ்ருதமீச தாத்ரே |
தஸ்யைவ நாம ஹரிசர்வமுகம் ஜகாத
ஸ்ரீமாதவ: சிவபரோபி புராணஸாரே ||

ஈசனே ஓ, குருவாயூரப்பா! தற்போது நடந்துவரும் ப்ராம்ம கல்பம் என்னும் காலத்தின் ஆரம்பத்தில், ப்ரம்ம தேவனுக்குத் தாங்கள் பாகவதத்தில் இரண்டாவது ஸ்கந்தத்தில் கூறியபடி தங்கள் ஸ்வரூபத்தை ப்ரத்யக்ஷமாகக் காட்டினீர். ஸ்ரீமாதவாசார்யர் சிவபக்தராக இருந்த போதிலும், தான் எழுதிய புராணஸாரம் என்னும் க்ரந்தத்தில் (தாங்கள் ப்ரம்மதேவனுக்குக் காட்டிய) அந்தஸ்வரூபத்திற்கே விஷ்ணு, சிவன் முதலிய பெயர் என கூறியிருக்கிறார்.

ப்ராம்ம கல்பம்: ப்ரம்மா உண்டான கல்பத்திற்கு ப்ராம்ம கல்பம் என்று பெயர்.

### அதிகாரிக்குத் தக்கவாறு தெய்வத்தைக் கூறுதல்

ये स्वप्रकृत्यनुगुणा गिरिशं भजन्ते
तेषां फलं हि दृढयैव तदीयभक्त्या ।
व्यासो हि तेन कृतवानधिकारिहेतोः
स्कान्दादिकेषु तव हानिवचोऽर्थवादैः ॥ 9 ॥

யே ஸ்வப்ரக்ருத்யனுகுணா கிரிசம் பஜந்தே
தேஷாம் பலம் ஹி த்ருடயைவ ததீயபக்த்யா |
வ்யாஸோ ஹி தேன க்ருதவானதிகாரிஹேதோ:
ஸ்காந்தாதிகேஷு தவ ஹானிவசோऽர்தவாதை: ||

ஓ, குருவாயூரப்பா! தன் முன்ஜன்மாவின் வாஸனைக்குத் தக்கவாறு, எவர்கள் ஸ்ரீ சிவனை ஆராதிக்கிறார்களோ, அந்தத் தெய்வத்திடத்திலுள்ள திடமான பக்தியால் அல்லவா அவர்களுக்குப் பலன் ஏற்படுகிறது. அதனால் தான் வ்யாஸ முனிவரும் அந்தஅந்த அதிகாரிகளைப் பொறுத்து ஸ்காந்தம் முதலிய (சைவ) புராணங்களில் ஸ்ரீ சிவனுடைய மஹிமையைச் சிறப்பாகக் கூறும் வாயிலாக தங்களைப் பற்றித் தாழ்மையாகக் கூறியிருக்கிறார்.

## வ்யாஸர் தெய்வங்களை மேன்மையாகவும் இழிவாகவும் கூறியதன் கருத்து

भूतार्थकीर्तिरनुवादविरुद्धवादौ
त्रेधाऽर्थवादगतयः खलु रोचनार्थाः ।
स्कान्दादिकेषु बहवोऽत्र विरुद्धवादा-
स्त्वत्तामसत्वपरिभूत्युपशिक्षणाद्याः ॥ 10 ॥

பூதார்த்தகீர்த்திரனுவாதவிருத்தவாதௌ
த்ரேதாऽர்தவாதகதய: கலு ரோசனார்தா: |
ஸ்காந்தாதிகேஷு பஹவோऽத்ர விருத்தவாதா—
ஸ்த்வத்தாம ஸத்வபரிபூத்யுபசிக்ஷணாத்யா: ||

ஓ, குருவாயூரப்பா! அர்த்த வாதம் என்பது பூதார்த்த வாதம், அனுவாதம், வ்ருத்தார்த்த வாதம் என மூன்று வகைப்படும். அதாவது அவரவர்களின் தெய்வம் முன்பு செய்த, துஷ்டர்களை சிக்ஷித்தது, சிஷ்டர்களைக் காத்தது முதலியவைகளைக் கூறுவது ஒன்று. அவரவர்கள் பஜிக்கும் தெய்வத்தைப் புகழ்ந்து பேசி, இம்மாதிரியான புத்தி உனக்கு உண்டாயிற்றே, இது மிகுந்த பாக்கியம் எனக் கூறுவது இரண்டாவது. மற்ற தெய்வங்களிடத்தில் குறையைக் கூறி, அவைகளை விட்டுவிட்டு இந்த தெய்வத்

தையே நீ ஆராதனம் செய் என்பது மூன்றுவது. அவைக ளும் அவன் பஜிக்கும் தெய்வத்தினிடம் அதிக பக்தி உண் டாவதற்கே ஆகும் அவ்விதம் விஷ்ணுவான தங்களை தமோ குணம் நிறைந்தவராயும், சிவனிடமிருந்து தோல்வி யடைந்ததாயும், சிவனிடமிருந்து உபதேசம் பெற்றதாயும், பலமுறை ஸ்காந்தம் முதலிய புராணங்களில் தங்களை குறைவாகக் கூறியதும் சிவனிடத்தில் அதிகமான பக்தி வளர்வதற்கே ஆகும். அது தங்களை குறைவாகப் பேசிய தாக ஆகாது.

## நம்பூதிரியின் வேண்டுதல்

यत्किञ्चिदप्यविदुषाऽपि विभो मयोक्तं
तन्मन्त्रशास्त्रवचनाद्यभिदृष्टमेव ।
व्यासोक्तिसारमयभागवतोपगीत
क्लेशान् विधूय कुरु भक्तिभरं परात्मन् ॥ ११ ॥

யத்கிஞ்சிதப்யவிதுஷாபி விபோ மயோக்தம்
தன்மந்த்ரசாஸ்த்ரவசனுத்யபித்ருஷ்டமேவ
வ்யாஸோக்திஸாரமயபாகவதோபகீத
க்லேசான் விதூய குரு பக்திபரம் பராத்மன் ||

"ப்ரபுவான ஓ, குருவாயூரப்பா! இதுவரை அறிவில் லாத நான் யாது கூறினேனே அதுவும், மந்திர சாஸ்த்ர வசனங்கள் முதலிய வற்றில் நன்கு விபரமாகக் காணப் பட்டதேயாகும். வ்யாஸர் கூறிய புராணங்களில் ஸார மயமான பாகவதம் என்னும் புராணத்தில் அடிக்கடி புகழப் பட்ட ஹே, பரமாத்மாவே! என் துக்கங்களைப் போக்கி, என்னை பக்தி நிறைந்தவனுகவும் செய்ய வேண்டும்" என நம்பூதிரி வேண்ட, ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீ கரித்தார்.

## 91-வது தசகம்

அவதாரிகை :—ஸ்ரீ நாராயண பட்டதிரி என்னும் மஹா பக்தர் ஸ்ரீமத் பாகவதம் பதினொன்றாவது ஸ்கந்தத்தின் ஸாரத்தை (91-வது தசகம்) இது முதல் தொண்ணூற்றேழாவது தசகம் நான்காவது ஸ்லோகம் முடிய கூறுகிறார். ஸ்ரீமத் பாகவதத்தின் பதினொன்றாவது ஸ்கந்தத்திற்கு மீதமுள்ள பதினொன்று ஸ்கந்தங்களும் வ்யாக்யானம் (விரிவுரை) போல் அமைந்துள்ளன.

அப்படிப்பட்ட இந்த ஸ்கந்தத்தில் யாகம் செய்யும் நிமி என்னும் அரசனுக்கு, அவதூதர்களான ஒன்பது (9) யோகிகள் பக்தியின் மஹிமை முதலியவற்றையும். ஸ்ரீ பகவான் தான் வைகுண்டம் செல்லும் பொழுது உத்தவருக்கு உபதேசித்ததின் ஸாரத்தையும் கூறியிருக்கிறார். இதைப் படிப்பதால் சமஸ்த பாபமும் விலகி. வைராக்யமும், ஸ்ரீ கிருஷ்ணனை குருவாயூரப்பனிடத்தில் அளவுகடந்த பக்தியும் நிச்சயம் உண்டாகும்.

—o—

### பயமற்றது பக்தி மார்க்கம்

श्रीकृष्ण त्वत्पदोपासनमभयतमं बद्धमिथ्यार्थदृष्टे-
मर्त्यस्यार्तस्य मन्ये व्यपसरति भयं येन सर्वात्मनैव ।
यत्तावत्त्वत्प्रणीतानिह भजनविधीनास्थितो मोहमार्गे
धावन्नप्यावृताक्षः स्खलति न कुहचिद्देवदेवाखिलात्मन् ॥

ஸ்ரீக்ருஷ்ண த்வத்பதோபாஸனமபயதமம் பத்தமித்யார்த்தத்ருஷ்டேர்—
மர்த்யஸ்யார்தஸ்ய மன்யே வ்யபஸரதி பயம் யேன ஸர்வாத்மனைவ |
யத்தாவத்த்வத் ப்ரணீதானிஹ பஜனவிதீனாஸ்திதோ மோஹமார்கே
தாவன்னப்யாவ்ருதாக்ஷ: ஸ்கலதி ந குஹசித் தேவதேவாகிலாத்மன் ||

"தேவாதி தேவனாகவும், எல்லா உலகிற்கும் ஆத்மாவாகவும் விளங்கும் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவான ஓ, குருவாயூரப்பா! பொய்யான இந்த சரீரம் முதலானவைகளில் அபிமானம் வைத்து, அதனால் மரண பயத்தை அடைந்திருக்கும் ஒருவனுக்கும் தங்கள் திருவடி சேவையே பயத்தைப் போக்கக் கூடிய சாதனமென்று நான் நினைக்கிறேன். ஏனெனில், தங்களால் உபதேசிக்கப் பெற்ற பஜனை முறைகளை (பக்திமார்கம்) மேற்கொண்ட ஒருவன் கண் மூடித்தனமாகக் கெட்ட பாதையில் ஓடினாலும் அவன் ஒரு இடத்தில் கூட இடறுவதில்லையன்றோ" அதாவது பக்தி மார்க்கத்தில் ஒரு தவறும் ஏற்படுவதில்லை எனக் கருத்து.

### *பக்தனை ஜாதி தோஷம் பாதிக்காது*

भूमन् कायेन वाचा मुहुरपि मनसा त्वद्बलप्रेरितात्मा
यद्यत्कुर्वे समस्तं तदिह परतरे त्वय्यसावर्पयामि ।
जात्यापीह श्वपाकस्त्वयि निहितमनः कर्मवागिन्द्रियार्थ-
प्राणो विश्वं पुनीते न तु विमुखमनास्त्वत्पदाद्विप्रवर्यः ॥ 2 ॥

பூமன் காயேன வாசா முஹுரபி மனஸா த்வத்
பலப்ரேரிதாத்மா
யத்யத்குர்வே ஸமஸ்தம் ததிஹ பரதரே த்வய்ய
ஸாவர்பயாமி |
ஜாத்யாபீஹ ச்வபாகஸ்த்வயி நிஹிதமன: கர்ம
வாகிந்திரயார்த்த—
ப்ராணோ விச்வம் புனீதே ந து விமுகமனாஸ்த்வத்
பதாத்விப்ரவர்ய: ||

"எங்கும் நிறைந்த பரம்பொருளான ஓ, குருவாயூரப்பா! தங்கள் சக்தியினால் தூண்டப்பெற்ற மனதையுடைய நான், எனது சரீரம், வாக்கு, மனது இவைகளால் செய்யப்படும் எல்லாவற்றையும் தங்களிடம் அர்ப்பணம் செய்கிறேன். தங்களிடம் எவனொருவன் தனது கர்மா, வாக்கு,

இந்திரியம், பிராணன் மற்றும் அவைகளின் விஷயங்கள் இவையாவற்றையும் அர்ப்பணம் செய்து விடுகின்றுனே அவன் பிறப்பினுல் சண்டாளனுக இருந்தாலும் உலகத் தையே பரிசுத்தப் படுத்துகின்றுன். தங்கள் திருவடிகளி னின்றும் விலகிய மனதை உடையவன் ஓர் உயர்ந்த அந் தணனுக இருந்தாலும் அவன் உலகை அவ்விதம் பரிசுத்த மாக்குவதில்லையன்றே."

## இரண்டாவது வஸ்துவினுல் பயம்

भीतिर्नाम द्वितीयाद्भवति ननु मनःकल्पितं च द्वितीयं
तेनैक्याभ्यासशीलो हृदयमिह यथाशक्तिबुद्ध्या निरुन्ध्याम्।
मायाविद्धे तु तस्मिन् पुनरपि न तथा भाति मायाधिनाथं
तत्त्वां भक्त्या महत्या सततमनुभजन्नीश भीतिं विजह्याम् ॥3॥

பீதிர்நாம த்விதீயாத்பவதி நநு மன:கல்பிதம் ச
த்விதீயம்
தேனைக்யாப்யாஸசீலோ ஹிருதயமிஹ யதாசக்தி
புத்தயா நிருந்த்யாம் |
மாயாவித்தே து தஸ்மின் புனரபி ததா பாதி
மாயாதிநாதம்
தத்வாம் பக்த்யா மஹத்யா ஸததமனுபஜன்னீச
பீதிம் விஜஹ்யாம் ||

"ஒருவனது பயமானது தன்னின்றும் விலகியுள்ள ஓர் இரண்டாவது வஸ்துவிலிருந்துதான் உண்டாகின்ற தெனக் கூறப்படுகிறது. அவ்விரண்டாவது வஸ்துவும் மனதினுல் கற்பிக்கப்பட்டதேயாகும். ஆகையால் வஸ்து வின் காரிய காரணங்கள் ஒன்றே என்பதை மனதில் நினைத்தவாறு, என்னுல் சிந்திக்கப் பெற்ற எல்லா வஸ்துக் களிலும் நிச்சய புத்தியை (எனக்கு மன வலிமை உள்ள வரை) நான் நிலை நிறுத்துவேன். மாயையால் உண்டாக் கப் பெற்ற காமம், குரோதம் இவைகளால் மனமானது

ஒரு முறை சம்பந்தப்பட்டு விட்டால் மறுமுறை அது நிலை நிறுத்தப்பட்டாலும் முன்போல் ப்ரகாசிப்பதில்லையன்றோ. ஆகையால், ஏ, ஈசனே! மாயைக்கு அதிபதியான தங்களை திடமான பக்தியுடன் எப்பொழுதும் ஸேவிப்பவனாகி, எனது பயத்தை முற்றிலும் போக்கிக் கொள்வேன்."

## ஸாது ஸங்கமே பக்தி ஏற்படுவதற்கும் வளர்வதற்கும் காரணம்

भक्तेरुत्पत्तिवृद्धी तव चरणजुषां सङ्गमेनैव पुंसा-
मासाद्ये पुण्यभाजां श्रिय इव जगति श्रीमतां सङ्गमेन ।
तत्सङ्गो देव भूयान्मम खलु सततं तन्मुखादुन्मिषद्भि-
स्त्वन्माहात्म्यप्रकारैर्भवति च सुदृढा भक्तिरुद्धूतपापा ॥ 4 ॥

பக்தேருத்பத்திவ்ருத்தீ தவ சரணஜுஷாம் ஸங்க மேனைவ பும்ஸா—
மாஸாத்யே புண்யபாஜாம் ச்ரிய இவஜகதி ஸ்ரீமதாம் ஸங்கமேன |
தத்ஸங்கோ தேவ பூயான்மம கலு ஸததம் தன் முகாதுன்மிஷத்பி—
ஸ்த்வன்மாஹாத்ம்யப்ரகாரைர்பவதி ச ஸுத்ருடா பக்திருத்தூத பாபா ||

"இவ்வுலகில் லக்ஷ்மிகடாக்ஷம் பொருந்தியவர்களின் சேர்க்கையால் ஒருவனுக்குப் பொருள் பெருகுவது போல் தங்களது திருவடிகளை ஸேவிக்கும் அடியார்களது சேர்க்கையால் புண்ய புருஷர்களுக்கு பக்தியின் உற்பத்தியும் கிடைக்கின்றன. ஏ, தேவா! அடியேனுக்கும், எக்காலத்திலும் அவ்வடியார்களது சேர்க்கை உண்டாகட்டும். அவர்களது திருவாக்கிலிருந்து வெளிவரும் தங்களது மஹிமைகளால், அசைக்க முடியாததும். பாபங்களைப் போக்கக் வல்லதுமான பக்தியானது எனக்கு உண்டாகட்டும்."

## பக்தியை வேண்டுதல்

श्रेयोमार्गेषु भक्तावधिकबहुमतिर्जन्मकर्माणि भूयो
गायन् क्षेमाणि नामान्यपि तदुभयतः प्रद्रुतं प्रद्रुतात्मा ।
उद्यद्धासः कदाचित्कुहचिदपि रुदन् क्वापि गर्जन् प्रगाय-
न्नुन्मादीव प्रनृत्यन्नयि कुरु करुणां लोकबाह्यश्चरेयम् ॥ 5 ॥

ச்ரேயோ மார்கேஷு பக்தாவதிகபஹுமதிர் ஜன்ம
கர்மாணி பூயோ
காயன் க்ஷேமாணி நாமான்யபி ததுபயத: ப்ரத்ருதம்
ப்ரத்ருதாத்மா |
உத்யத்தாஸ : கதாசித் குஹசிதபி ருதன் க்வாபி கர்ஜன்
ப்ரகாயன்—
னுன்மாதீவ ப்ர ந்ருத்யந்நயி குரு கருணாம் லோக
பாஹ்யச்சரேயம் ‖

"மோக்ஷ சாதனத்தை அடையக்கூடிய மார்க்கங்களுள் பக்தி மார்க்கத்தில் அதிகப் பற்றுடையவனாகவும், பகவானது திரு அவதாரங்களின் லீலைகளையும், நாமங்களையும் அடிக்கடி பாடிக்கொண்டு அவற்றால் மனம் உருகி சிலசமயம் சிரித்தவனாகவும், சிலசமயம் பாடுகிறவனாகவும், மற்றொரு சமயம் உரக்கக் கத்துகிறவனாகவும். பைத்தியம் பிடித்தவன் போல் ஆடிக் கொண்டு பற்றற்றவனாக நான் இவ்வுலகில் சஞ்சரிப்பதற்கு எனக்குக் கருணை புரிவீராக."

## அவனது கருணையினால் தான் அவனது ஸ்வரூபத்தை அடையமுடியும்

भूतान्येतानि भूतात्मकमपि सकलं पक्षिमत्स्यान्मृगादीन्
मर्त्यान् मित्राणि शत्रूनपि यमितमतिस्त्वन्मयान्यानमानि ।
त्वत्सेवायां हि सिद्ध्येन्मम तव कृपया भक्तिदार्ढ्यं विराग-
स्त्वत्तत्त्वस्यावबोधोऽपि च भुवनपते यत्नभेदं विनैव ॥ 6 ॥

பூதான்யேதானி பூதாத்மகமபி ஸகலம் பக்ஷிமத்ஸ்யான்
ம்ருகாதீன்
மர்த்யான் மித்ராணி சத்ரூனபி யமிதமதிஸ்த்வன்
மயான்யானமானி |
த்வத்ஸேவாயாம் ஹி ஸித்தயேன்மம தவ க்ருபயா பக்தி
தார்ட்யம் விராக-
ஸ்த்வத்தத்வஸ்யாவபோதோऽபி ச புவனபதே
யத்னபேதம் விநைவ ||

"பஞ்ச மஹா பூதங்களையும், அவைகளால் உண்டான ப்ரபஞ்சத்தையும், அதில் வஸிக்கும் பறவைகள், மீன்கள், பிராணி வர்க்கங்கள், மனிதர்கள் முதலானவர்களையும், மற்றும் எனது நண்பர்களையும், பகைவர்களையும் தங்களது ஸ்வரூப மென்றே தீர்மானித்தவனாகி நான் (அவைகளை) வணங்குவேனாக. ஏ, லோக நாதா! எப்பொழுதும் தங்களை சேவிப்பதாலல்லவா, தங்கள் கருணையினால், எனக்குத் திடமான பக்தியும், வைராக்கியமும், தங்களது தத்துவத்தின் அறிவும் வேறு முயற்சியின்றியே சித்திக்கின்றது."

## மோஹமில்லாது பகவத் சரணசேவையை வேண்டுதல்

नो मुह्यन् क्षुत्तृडाद्यैर्भवसरणिभवैस्त्वन्निलीनाशयत्वा-
च्चिन्तासातत्यशाली निमिषलवमपि त्वत्पदादप्रकम्पः ।
इष्टानिष्टेषु तुष्टिव्यसनविरहितो मायिकत्वावबोधा-
ज्ज्योत्स्नाभिस्त्वन्नखेन्दोरधिकशिशिरितेनात्मना सञ्चरेयम् ॥7

நோ முஹ்யன் க்ஷுத்த்ருடாத்யைர் பவஸரணி
பவைஸ்த்வன்நிலீநாசயத்வா
ச்சிந்தா ஸாதத்யசாலீ நிமிஷலவமபி த்வத்பதாதப்
ரகம்ப: |
இஷ்டானிஷ்டேஷு துஷ்டிவ்யஸன விரஹிதோ
மாயிகத்வாவபோதா-
ஜ்ஜ்யோத்ஸ்நாபிஸ்த்வன்னகேந்தோரதிகசிசிரிதே
நாத்மனு ஸஞ்சரேயம் ||

"என்மனதைத் தங்களிடம் வைத்து விட்டகாரணத்திஞல் சரீரப் பற்றிலிருந்து உண்டாகும் பசி, தாகம் இவற்றிஞல் மயக்கத்தை அடையாத வஞகவும், இடை விடாது தங்களையே தியானம் செய்கின்றவஞகவும், சிறிது நிமிஷம் கூட தங்கள் திருவடிகளிலிருந்து சலிக்காதவஞகவும், வஸ்துக்களில் விருப்பு, வெறுப்பு இல்லாதவஞகவும், 'மாயையால் ஏற்பட்டது' என்னும் அறிவிஞல் விஷயங்களில் சந்தோஷம், துக்கம் இவைகள் அற்றவஞகவும் தங்களது திருவடிகளில் இருக்கும் நகங்களாகிற சந்திரனுடைய ஒளியால் மிகவும் குளிர்ச்சியடைந்த மனதுடன் நான் சஞ்சரிப்பேஞக."

## சிறந்த பக்தஞக ஆவதற்கு வேண்டுதல்

भूतेष्वेषु त्वदैक्यस्मृतिसमधिगतौ नाधिकारोऽधुना चे-
त्त्वत्प्रेम त्वत्कमैत्री जडमतिषु कृपा द्विट्सु भूयादुपेक्षा ।
अर्चायां वा समर्चाकुतुकमुरुतरश्रद्धया वर्धतां मे
त्वत्संसेवी तथाऽपि द्रुतमुपलभते भक्तलोकोत्तमत्वम् ॥ 8 ॥

பூதேஷ்வேஷு த்வதைக்யஸ்ம்ருதி ஸமதிகதௌ
நாதிகாரோऽது நாசே.
த்வத்ப்ரேம த்வத்கமைத்ரீ ஜடமதிஷு க்ருபா த்விட்ஸு
பூயாதுபேக்ஷா |
அர்சாயாம் வா ஸமர்சாகுதுக முருதர ச்ரத்தயா
வர்ததாம் மே
த்வத் ஸம்ஸேவீ ததாऽபி த்ருத முபலபதே பக்த
லோகோத்தமத்வம் ||

"உலகிலுள்ள இந்த எல்லாப் பிராணிகளிடத்திலும் தாங்களே ஐக்ய மடைந்திருக்கிறீர் என்னும் அறிவை நான் தெரிந்து கொள்வதற்கு இப்பொழுது எனக்குத் தகுதியில்லையென்றால், தங்களிடம் பக்தியும், தங்களது அடியார்களிடம் அன்பும், மூடர்களிடம் கருணையும், பகைவர்களிடம் உபேக்ஷையும் எனக்கு உண்டாகட்டும், அதிலும் எனக்கு அதிகாரம் இல்லையென்றால் தங்களது விக்ரஹத்தை மிகுந்த ச்ரத்தையுடன் பூஜை செய்வதில் எனது விருப்பம் ஓங்கட்டும் அவ்வகையிலாவது தங்களை சேவிக்கிறவன் பக்தர்களில் சிறந்தவனாக இருக்கும் தன்மையை விரைவில் அடைகின்றான்."

## மாயையைப் போக்குவது பக்தி ஒன்றே

आवृत्य त्वत्स्वरूपं क्षितिजलमरुदाद्यात्मना विक्षिपन्ती
जीवान् भूयिष्ठकर्मावलिविवशगतीन्दुःखजाले क्षिपन्ती ।
त्वन्माया माऽभिभून्मामयि भुवनपते कल्पते तत्प्रशान्त्यै
त्वत्पादेभक्ति रेवेत्यवददयि विभो सिद्धयोगी प्रबुद्धः ॥ 9 ॥

ஆவ்ருத்ய த்வத்ஸ்வரூபம் க்ஷிதிஜலமருதாத்யாத்மனா
விக்ஷிபந்தீ
ஜீவான் பூயிஷ்டகர்மாவலிவிவசகதீன் து:கஜாலே
க்ஷிபந்தீ |
த்வன்மாயா மாऽபிபூன்மாமயி புவனபதே கல்பதே
தத்ப்ரசாந்த்யை
த்வத்பாதே பக்திரேவேத்யவததயி விபோ
சித்தயோகீ ப்ரபுத்த: ॥

"ஜகன்னாதனான ஹே, குருவாயூரப்பா! தங்களது உண்மையான உருவத்தை மறைத்துக்கொண்டு பூமி, ஜலம், வாயு முதலிய உருவமாக (விக்ஷேப சக்தியினால்) தோன்றும்படி செய்கின்றதும் பலவித கர்மாக்களின் பயனாக அடையப்பெற்றதும், தன் வசப்படாத சரீரங்களைப் பெற்றவைகளுமான ஜீவாத்மாக்களைத் துன்பமாகிற வலையில் தள்ளுகின்றதுமான தங்களது மாயையானது என்னைக் கீழ்ப்படுத்தாமல் இருக்கட்டும். ஏ, ப்ரபுவே! தங்கள் திருவடிகளில் செலுத்தும் பக்தி ஒன்றே அந்த மாயையை அழிப்பதற்கு சக்தியுள்ளதாக ஆகிறதென்று பிரபுத்தர் என்ற சித்தயோகி (விதேக ராஜனான நிமியிடம்) உரைத்தாராமே."

## ஆசார்யரின் அருளால் ஏற்படும் நன்மை

दुःखान्यालोक्य जन्तुष्वलमुदितविवेकोऽहमाचार्यवर्या-
लब्ध्वा त्वद्रूपतत्त्वं गुणचरितकथाद्युद्भवद्भक्ति भूमा ।
मायामेनां तरित्वा परमसुखमये त्वत्पदे मोदिताहे
तस्यायं पूर्वरङ्गः पवननुरपते नाशयाशेषरोगान् ॥ 10 ॥

துঃகான்யாலோக்ய ஜந்துஷ்வலமுதிதவிவேகோ
ஸஹமாசார்யவர்யா—
ல்லப்த்வா த்வத்ரூபதத்வம் குணசரிதகதாத்யுத்ப
வத்பக்தி பூமா |
மாயாமேனும் தரித்வா பரமஸுகமயே த்வத்பதே
மோதிதாஹே
தஸ்யாயம் பூர்வரங்கः பவனபுரபதே நாசயாசேஷ
ரோகான் ||

"ஜீவர்களிடத்தில் ஏற்பட்டுள்ள துக்கங்களைக் காண்ப தினால் எனக்கு ஏற்படும் விவேகத்தின் பயனாக, சிறந்த குருவை நான் அடைந்து அவர் மூலமாகத் தங்களது உண்மை ஸ்வரூபத்தை அறிந்து, தங்களது குணங்களை யும் சரித்திரங்களையும் பாடி, அதன் பயனாய் பக்தி பெருகி, இந்த மாயையைத் தாண்டி, பரமானந்த ஸ்வரூபமான தங்கள் திருவடி ஸேவையில் சந்தோஷ மடைவேனாக. அந்த மாயாஜயத்தின் முயற்சிக்கு இதுவே ஆரம்பமாகும். ஏ, குருவாயூரப்பா! எனது வியாதிகளை யெல்லாம் போக்கு வீராக," என நம்பூதிரி வேண்ட, ஸ்ரீ அப்பனும் "ஆம்" என தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## 92-வது தசகம்

वेदैः सर्वाणि कर्माण्यफलपरतया वर्णितानीति बुद्ध्वा
तानि त्वय्यर्पितान्येव हि समनुचरन् यानि नैष्कर्म्यमीश ।
मा भूद्वेदैर्निषिद्धे कुहचिदपि मनःकर्मवाचां प्रवृत्ति-
र्दुर्वर्जं चेदवाप्तं तदपि खलु भवत्यर्पये चित्प्रकाशे ॥ 1 ॥

*வேதை: சர்வாணி கர்மாண்யபலபரதயா வர்ணி*
*தானீதி புத்த்வா*
*தானி த்வய்யர்பிதான்யேவ ஹி ஸமனுசரன் யானி*
*நைஷ்கர்ம்யமீச |*
*மா பூத்வேதைர்நிஷித்தே குஹசிதபி மன: கர்மவாசாம்*
*ப்ரவ்ருத்திர்*
*துர்வர்ஜம் சேதவாப்தம் ததபி கலு பவத்யர்பயே*
*சித்ப்ரகாசே ||*

"ஈசனை ஹே, குருவாயூரப்பா! வேதங்களால் விதிக்கப்பட்ட எல்லா கர்மங்களும், பயனில் விருப்பமின்றி செய்யத்தக்கவை என்பதாக சாஸ்திரங்களில் கூறப்பட்டிருப்பதையறிந்து, அவைகள் யாவற்றையும் தங்களிடத்திலேயே அர்ப்பணம் செய்தவனாய், பயனை எதிர்பாராது அவைகளை அனுஷ்டித்து அதனால் ஏற்படும் ஞானத்தை அடைவேனாக. வேதவிதிக்குப் புறம்பாக உள்ள எந்த கர்மாவிலும் எனது மனது, செயல், வாக்கு இவைகள் செல்லாமலிருக்கட்டும். அவ்விதம் விலக்கப்பட்ட கர்மம் ஏதாவது என் செயலில் தவிர்க்க முடியாதவாறு நேர்ந்து விடுமேயாகில் அதையும் ஞானஸ்வரூபியாகிய தங்களிடத்திலேயே அர்ப்பணம் செய்து விடுவேன்." அதாவது "நான் ஏதாவது தவறுதலாக பாபம் செய்திருந்தாலும் அந்த கர்மாவையும் தங்களிடமே அர்ப்பணம் செய்துவிடுகிறேன்." என்பது கருத்து.

### பகவானை பூஜிக்கும் பாக்யத்தை வேண்டுதல்

यस्त्वन्य: कर्मयोगस्तव भजनमयस्तत्र चाभीष्टमूर्तिं
हृद्यां सत्त्वैकरूपां दृषदि हृदि मृदि क्वापि वा भावयित्वा ।
पुष्पैर्गन्धैर्निवेद्यैरपि च विरचितै: शक्तितो भक्तिपूतै-
र्नित्यं वर्यां सपर्यां विदधदयि विभो त्वत्प्रसादं भजेयम् ॥

யஸ்த்வன்ய : கர்மயோகஸ்தவ பஜனமயஸ்தத்ர
சாபீஷ்ட மூர்த்திம்
ஹ்ருத்யாம் ஸத்வைகரூபாம் த்ருஷதி ஹ்ருதிம்ருதி
க்வாபி வா பாவயித்வா |
புஷ்பைர்கந்தைர்நிவேத்யைரபி ச விரசிதை : சக்திதோ
பக்திபூதைர்—
நித்யம் வர்யாம் ஸபர்யாம் விதததயி விபோ
த்வத்ப்ரஸாதம் பஜேயம் ||

“ப்ரபுவான ஓ, குருவாயூரப்பா! தங்களை பஜனை செய்வதானது மற்றொரு விதமான கர்மயோகமாகும். அம் மாதிரி பூஜையில், மிகவும் அழகு வாய்ந்தது, சுத்த ஸத்வஸ் வரூபமானதுமான, (தன்மனதிற்கிசைந்த) ஒரு மூர்த்தியை, கல்லிலோ, மண்ணிலோ, வேறு பிரதிமைகளிலோ அல்லது மனதிலோ (தியானம்) ஆவாஹனம் செய்து, தனது சக்திக் குத் தக்கவாறு சம்பாதிக்கப் பட்டவைகளும், பக்தியினுல் மிகவும் பரிசுத்தமாக்கப் பட்டவைகளுமான புஷ்பங்களாலும் சந்தனம் முதலிய வாஸனைத் திரவியங்களாலும், சிறந்த பூஜையை நான் ஒவ்வொரு நாளும் செய்து கொண்டு தங் கள் பிரஸாதத்தை அடைவேனுக.”

### பக்தியற்றவர்களின் கதியைக்கூறுதல்

स्त्रीशूद्रास्त्वत्कथादिश्रवणविरहिता आसतां ते दयार्हा-
स्त्वत्पादासन्नयातान् द्विजकुलजनुषो हन्त शोचाम्यशान्तान् ।
वृत्त्यर्थं ते यजन्तो बहुकथितमपि त्वामनाकर्णयन्तो
दृप्ता विद्याभिजात्यैः किमु न विदधते तादृशं मा कृथा माम् ॥

ஸ்த்ரீசூத்ராஸ்த்வத்கதாதி ச்ரவணவிரஹிதா ஆஸ
தாம் தே தயார்ஹா—
ஸ்த்வத்பாதாஸன்னயாதான் த்விஜகுல ஜனுஷோ
ஹந்தசோசாம்யசாந்தான் |
வ்ருத்யர்த்தம் தே யஜந்தோ பஹுகதிதமபி த்வாமனு
கர்ணயந்தோ
த்ருப்தா வித்யாபிஜாத்யை: கிமு ந விததே தாத்ருசம்
மா க்ருதாமாம் ||

" அறியாமையினால் சில ஸ்த்ரீகளும், சில சூத்திரர்களும் தங்கள் கதைகளைக் கேட்பதில் ஆசையற்றவர்களாக இருந்தால், அவர்கள் எப்பொழுதும் தங்கள் கருணைக்கு உரியவர்களாகின்றனர். அவர்களைப் பற்றி நான் கவலை கொள்ளவில்லை. ஆனால் தங்கள் திருவடிகளை அடைந்தும் சாந்தியை அடையாத பிரம்ம, க்ஷத்ரிய, வைச்யர்களைக்குறித்து நான் வருந்துகிறேன். அவர்கள் தங்களது ஜீவனத்திற்காக யாகம் செய்துகொண்டு, பலரால் புகழப் பெற்ற தங்கள் பெருமையில் செவி சாய்க்காதவர்களாகவும் படிப்பாலும் கர்வம் கொண்டவர்களாகவும் இருப்பதால் அவர்கள் வேறு எதைத்தான் செய்யமாட்டார்கள். ஓ, குருவாயூரப்பனே! தாங்கள் அப்படிப்பட்டவனாக என்னை செய்து விடக்கூடாது."

### பக்தியற்றவர்கள் சாதுக்களை நிந்திப்பார்கள்

पापोऽयं कृष्ण रामेत्यभिलपति निजं गूहितुं दुश्चरित्रं
निर्लज्जस्यास्य वाचा बहुतरकथनीयानि मे विघ्नितानि ।
भ्राता मे वन्ध्यशीलो भजति किल सदा विष्णुमित्थं बुधांस्ते
निन्दन्त्युच्चैर्हसन्ति त्वयि निहितमतींस्तादृशं मा कृथा माम् ॥ 4 ॥

பாபோ஽யம் க்ருஷ்ணராமேத்யபிலபதி நிஜம் கூஹிதும் துச்சரித்ரம்
நிர்லஜ்ஜஸ்யாஸ்ய வாசா பஹுதரகதனீயானி மே விக்நிதானி ।
ப்ராதா மே வந்த்யசீலோ பஜதி கில ஸதா விஷ்ணுமித்தம் புதாஸ்தே
நிந்தந்த்யுச்சைர்ஹஸந்தி த்வயி நிஹிதமதீஸ் தாத்ருசம் மா க்ருதா மாம் ॥

"பாவியாகிய இவன் தனது கெட்ட செய்கையை மறைப்பதற்காக 'கிருஷ்ணு' என்றும், 'ராமா' என்றும் பிதற்றுகிறுன். வெட்கமற்ற இவனது சொல்லினுல், என்னுடைய புகழுரைகள் பல, தடைப்படுகின்றன."

"வீண் பொழுது போக்கும் என்சகோதரன் எப்பொழுதும் ஸ்ரீ மஹா விஷ்ணுவை பஜிக்கின்றுனும்." என்றிவ்வாறெல்லாம் சிலர், தங்களிடம் உண்மையில் பக்தி செலுத்துகிறவர்களை நிந்திக்கின்றனர்; பரிஹஸிக்கவும் செய்கின்றனர். அப்படிப் பட்ட மனிதனுக என்னைத் தாங்கள் செய்து விடக்கூடாது."

## யுகத்திற்குத் தக்கவாறு தங்களை சேவித்தல்

श्वेतच्छायं कृते त्वां मुनिवरवपुषं प्रीणयन्ते तपोभि-
स्त्रेतायां स्रुक्स्रुवाद्यङ्कितमरुणतनुं यज्ञरूपं यजन्ते ।
सेवन्ते तन्त्रमार्गैर्विलसदरिगदं द्वापरे श्यामलाङ्गं
नीलं सङ्कीर्तनाद्यैरिह कलिसमये मानुषास्त्वां भजन्ते ॥ 5 ॥

ச்வேதச்சாயம் க்ருதே த்வாம் முனிவரவபுஷம் ப்ரீண-
யந்தே தபோபி—
ஸ்த்ரேதாயாம் ஸ்ருக்ஸ்ருவாத்யங்கித மருணதனும்
யக்ஞரூபம் யஜந்தே |
ஸேவந்தே தந்த்ரமார்கைர் விலஸதரிகதம் த்வாபரே
ச்யாமளாங்கம்
நீலம் ஸங்கீர்தனைத்யைரிஹ கலிஸமயே மானுஷாஸ்த்
வாம் பஜந்தே ||

"கிருதயுகத்தில் வெண்ணிறமுள்ள பிரும்மசாரியின் உருவத்தில் உள்ள தங்களை மனிதர்கள் தவங்களினால் சந்தோஷப் படுத்துகின்றார்கள். திரேதாயுகத்தில் ஸ்ருக், ஸ்ருவம் முதலியவற்றை தரிக்கும் சிவந்த நிறமுள்ள யக்ஞ ஸ்வரூபனை தங்களை பூஜிக்கின்றனர். துவாபர யுகத்தில் ஜ்வலிக்கின்ற சக்கிராயுதத்தையும், கதாயுதத்தையும் தரித்து ச்யாமள வர்னனை தங்களை தந்திர சாஸ்திரங்களில் சொல்லியபடியும், கலியுகத்திலோ நீலவர்ணனை உம்மை நாம ஸங்கீர்த்தனம் முதலியவற்றால் மனிதர்கள் பஜிக்கின்றனர்."

### கலியுகத்தில் பிறப்பை வேண்டுதல்

सोऽयं कालेयकालो जयति मुररिपो यत्र सङ्कीर्तनाद्यै-
र्नियत्नैरेव मार्गैरखिलदनचिरात्त्वत्प्रसादं भजन्ते ।
जातास्त्रेताकृतादावपि हि किल कलौ संभवं कामयन्ते
दैवात्तत्रैव जातान् विषयविषरसैर्मा विभो वञ्चयास्मान् ॥ 6 ॥

ஸோऽயம் காலேயகாலோ ஜயதி முரரிபோ யத்ர
ஸங்கீர்த்தனைத்யைர்—
நிர்யத்னைரேவ மார்கைரகிலத நசிராத் த்வத்ப்ரஸாதம்
பஜந்தே |
ஜாதாஸ்த்ரேதா க்ருதாதாவபி ஹி கில கலௌ
ஸம்பவம் காமயந்தே
தேவா தத்ரைவ ஜாதான் விஷய விஷரஸைர்மா
விபோ வஞ்சயாஸ்மான் ||

"முராரியான ஓ, குருவாயூரப்பா! அவ்விதம் இந்தக் கலிகாலமானது மேன்மையுடன் விளங்குகிறது. சிறிய முயற்சியினுலேயே மேற்கொள்ளும் நாம ஸங்கீர்த்தனம் முதலிய மார்க்கங்களால் இக்கலியில் மக்கள் தங்களுடைய பிரஸாதத்தை அடைகின்ருர்கள். அக்காரணம் பற்றியே த்ரேதாயுகம், த்வாபரயுகம் இவைகளில் ஜனித்த மக்கள் கூட இக்கலியுகத்தில் (மறுபடியும்) பிறக்க விரும்புகின்றனர் அன்ருே! எல்லாவற்றையும் தந்தருளும் ப்ரபுவே! பாக்யவசத்தினுல் இக்கலியிலேயே பிறந்த எங்களை விஷய சுகங்களாகிற விஷரஸங்களினுல் வஞ்சிக்க வேண்டாம்."

## நம்பூதிரி காவேரி முதலிய நதிக்கரையில் பிறப்பை வேண்டுதல்

भक्तास्तावत्कलौ स्युर्द्रमिलभुवि ततो भूरिशस्तत्र चोच्चैः
कावेरीं ताम्रपर्णीमनु किल कृतमालां च पुण्यां प्रतीचीम् ।
हा मामप्येतदन्तर्भवमपि च विभो किञ्चिदञ्चद्रसं त्व-
य्याशापाशैर्निबध्य भ्रमय न भगवन् पूरय त्वन्निषेवाम् ॥ 7 ॥

பக்தாஸ்தாவத்கலௌ ஸ்யுர்த்ரமிலபுவி ததோ
பூரிசஸ்தத்ர சோச்சை:
காவேரீம் தாம்ரபர்ணீமனு கில க்ருதமாலாம் ச
புண்யாம் ப்ரதீசீம்
ஹா மாமப்யேததந்தர்பவமபி ச விபோ கிஞ்சி
தஞ்சத்ரஸம் த்வ—
ய்யாசாபாசைநிர்பத்ய ப்ரமய ந பகவன் பூரய
த்வன்னிஷேவாம் ||

"இக்கலியில் தங்களிடம் பக்தி செய்கின்றவர்கள் அதிகமாக இருப்பார்கள். இந்த திராவிட தேசத்தில் மேலும் அதிகமாக இருப்பார்கள். அதிலும், காவிரி, தாம்ரபர்ணி, வைகை இவைகளின் கரைகளிலும், மற்றும் மேற்கு நோக்கி

ஓடுகின்ற மற்ற நதிகளின் கரைகளிலும், மிகவும் அதிகமாக இருப்பதாகக் கூறப்படுகின்றதல்லவா? ஓ, ப்ரபுவே! இந்தப் பிரதேசத்தில் பிறந்தவனாகவும், தங்களிடம் சிறிதாவது பக்தி கொண்டுள்ளவனாகவும் என்னை செய்ய வேண்டும். ஆனால், ஆசைகளாகிற பாசக் கயிறுகளால் இறுக்கக்கட்டி சுழற்றக்கூடாது. ஏ, க்ருஷ்ண! எனக்கு தங்களிடமுள்ள பக்தியானது பரிபூர்ணமடையட்டும்.''

## கலியின் குணத்தை அறிந்து மன்னித்தல்

दृष्ट्वा धर्मद्रुहं तं कलिमपकरुणं प्राङ्महीक्षित् परीक्षि-
द्धन्तुं व्याकृष्टखड्गोऽपि न विनिहतवान् सारवेदी गुणांशात् ।
त्वत्सेवाद्याशु सिद्धयेदसदिह न तथा त्वत्परे चैष भीरु-
र्यत्तु प्रागेव रोगादिभिरपहरते तत्र हा शिक्षयैनम् ॥ 8 ॥

த்ருஷ்ட்வா தர்மத்ருஹம் தம் கலிமபகருணம்
ப்ராங்மஹீக்ஷித் பரீக்ஷி—
த்தந்தும் வ்யாக்ருஷ்ட கட்கோऽபி ந விநிஹதவான்
ஸாரவேதீ குணாம்சாத் |
த்வத்ஸேவாத்யாசு ஸித்தயேதஸதிஹ ந ததா
த்வத்பரே சைஷ பீருர்—
யத்து ப்ராகேவ ரோகாதிபிரபஹராதே தத்ரஹா
சிக்ஷயைனம் ||

"முன்னொரு காலத்தில் பரீக்ஷித் என்ற மன்னன், தர்மத்திற்குத்ரோகம் விளைவிக்கும் கலியைத் கொல்லுவதற்காகத் தனது வாளை உருவினான். பிறகு, ஸாரத்தை அறியும் அந்த அரசன், அக்கலியிடம் நற்குணங்களிருப்பதால், அவனைக் கொல்லாது விட்டுவிட்டான். இக்கலியில் தங்களது ஸேவை முதலியவை சீக்கிரமாகவே பயனை அளிக்கும். பாபமானது அவ்விதம் விரைவாகப் பயனைக் கொடுப்ப

தில்லே. கலியானவன் தங்கள் பக்தனிடம் பயந்தவனுகவே இருக்கின்ருன். தங்களை பஜிப்பதற்கு முன்னரே அவன் பக்தர்களை நோய் முதலியவற்ருல் தடை செய்கின்ருன் என்ற காரணத்தினுல் மட்டும் இக்கலிபுருஷனை தண்டிப்பீராக."

**கலியில் கங்கை முதலியவைகளின் மஹிமை**

गङ्गा गीता च गायत्र्यपि च तुलसिका गोपिकाचन्दनं तत्
सालग्रामाभिपूजा परपुरुष तथैकादशी नामवर्णाः ।
एतान्यष्टाप्ययत्नान्ययि कलिसमये त्वत्प्रसादप्रवृद्ध्या
क्षिप्रं मुक्तिप्रदानीत्यभिदधुर्ऋषयस्तेषु मां सज्जयेथाः ॥ 9 ॥

கங்கா கீதா ச காயத்ர்யபி ச துலஸிகா கோபிகா
சந்தனம் தத்
ஸாலக்ராமாபி பூஜா பரபுருஷ ததைகாதசீ நாம
வர்ணு: |
ஏதான்யஷ்டாப்யயத்னுன்யயி கலிஸமயே த்வத்
ப்ரஸாதப்ரவ்ருத்தயா
க்ஷிப்ரம் முக்திப்ரதானீத்யபித துர்ருஷயஸ்தேஷு
மாம் ஸஜ்ஜயேதா: ||

ஒ, பரமாத்மாவே! கங்கையும், கீதையும், காயத்ரியும், துளசியும், கோபீசந்தனமும், ஸாளக்ராம பூஜையும், ஏகாதசியும், பகவானது நாம அக்ஷரங்களும் ஆகிய இவை எட்டும் கலிகாலத்தில் அதிக முயற்சியின்றியே தங்களுடைய அருளைப் பெருக்குவதால், அவைகள் யாவும் சீக்கிரமாக முக்தியை அளிக்கக்கூடியதென மஹரிஷிகள் உபதேசித்திருக்கின்றனர். இந்த எட்டு விஷயங்களிலும் என்னை பற்றுள்ளவனுகச் செய்ய வேண்டும்."

## பகவத் பஜனத்தால் எல்லா கடன்களிலிருந்தும் விடுபடுதல்

देवर्षीणां पितॄणामपि न पुनर्ऋणी किङ्करो वा स भूमन्
योऽसौ सर्वात्मना त्वां शरणमुपगतः सर्वकृत्यानि हित्वा ।
तस्योत्पन्नं विकर्माप्यखिलमपनुदस्येव चित्तस्थितस्त्वं
तन्मे पापोत्थतापान् पवनपुरपते रुन्धि भक्तिं प्रणीयाः ॥10॥

தேவர்ஷீணும் பித்ருணுமபி ந புனர்ருணீ கிங்கரோ வா ச பூமன்
யோऽஸௌ ஸர்வாத்மனு த்வாம் சரணமுபகத: ஸர்வக்ருத்யானி ஹித்வா |
தஸ்யோத்பன்னம் விகர்மாப்யகிலமபனுதஸ்யேவ சித்தஸ்திதஸ்த்வம்
தன்மே பாபோத்ததாபன் பவனபுரபதே ருந்தி பக்திம் ப்ரணீயா: ||

"எங்கும் நிறைந்த பரம்பொருளே! எவனொருவன் எல்லா காரியங்களையும் விட்டுவிட்டு முழுவதும் தங்களையே சரணமடைந்தானே, அவன் பிறகு தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பிதுருக்களுக்கும், கடங்காரனுகவோ, வேலைக்காரனுகவோ ஆகிறதில்லை. தாங்கள் அவனது மனதில் இருந்தவராகி அவனுக்குத் தீயச் செயல்களால் உண்டாகும் பாபங்கள் எல்லாவற்றையும் அகற்றுகின்றீர். ஓ, குருவாயூரப்பா! ஆகையால் பாபத்தினுல் உண்டாகும் எனது தாபங்களை நீர் தடுக்க வேண்டும்," என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

## 93-வது தசகம்

### ஞானிக்கு விதிநிஷேதம் கிடையாது

बन्धुस्नेहं विजह्यां तव हि करुणया त्वय्युपावेशितात्मा
सर्वं त्यक्त्वा चरेयं सकलमपि जगद्वीक्ष्य मायाविलासम् ।
नानात्वाद्भ्रान्तिजन्यात् सति खलु गुणदोषावबोधे विधिर्वा
व्यासेधो वा कथं तौ त्वयि निहितमतेर्वीतवैषम्यबुद्धेः ॥

*பந்துஸ்நேஹம் விஜஹ்யாம் தவ ஹி கருணயா த்வய்யு பாவேசிதாத்மா*
*ஸர்வம் த்யக்த்வா சரேயம் ஸகலமபி ஜகத்வீக்ஷ்ய மாயாவிலாஸம் ।*
*நாநாத்வாத்ப்ராந்தி ஜன்யாத் ஸதி கலு குணதோஷா வபோதே விதிர்வா*
*வ்யாஸேதோ வா கதம் தௌ த்வயி நிஹிதமதேர் வீதவைஷம்ய புத்தை: ॥*

"தங்களது கருணையினுல் உறவினர்களிடத்தில் உள்ள பாசத்தை நான் விலக்கி விடுவேனுக. இவ்வுலகெல்லாம் மாயையினுல் கற்பிக்கப் பட்டதென்பதை உணர்ந்து தங்களிடத்திலேயே மனதைச் செலுத்தினவனுகி, யாவற்றையும் விலக்கி நான் சஞ்சரிப் பேனுகவும், தேஹத்தில் நான் என்னுடையது என்ற ப்ரம்மக்ஞானத்தால் உண்டான வர்ணுச்ரமம் முதலிய பேதங்கள் பலவாருக இருக்கின்றன. அதனுல் நல்லது, கெட்டது என்ற ஞானம் இருக்கும் பொழுது, விதியாவது, நிஷேதமாவது ஏற்படுகிறது. தங்களிடத்தில் மனதை செலுத்தி அதனுல் விரோத புத்தியில்லாத ஒருவனுக்கு அவ்வித நிஷேதம் எவ்விதம் ஏற்படும்,"

## நண்பனையும், சத்ருவையும் கூறுவது

क्षुत्तृष्णालोपमात्रे सततकृतधियो जन्तवः सन्त्यनन्ता-
स्तेभ्यो विज्ञानवत्त्वात् पुरुष इह वरस्तज्जनिर्दुर्लभैव ।
तत्राप्यात्माऽऽत्मनः स्यात्सुहृदपि च रिपुर्यस्त्वयि न्यस्तचेता-
स्तापोच्छित्तेरुपायं स्मरति स हि सुहृत् स्वात्मवैरी ततोऽन्यः ॥

க்ஷுத்த்ருஷ்ணா லோபமாத்ரே ஸதத க்ருததியோ
ஜந்தவ: ஸந்த்யனந்தா
ஸ்தேப்யோ விக்ஞானவத்வாத் புருஷ இஹ வரஸ்தஜ்
ஜனிர் துர்லபைவ |
தத்ராப்யாத்மாऽऽத்மன: ஸ்யாத்ஸுஹ்ருதபி ச
ரிபுர்யஸ்த்வயி ந்யஸ்தசேதா—
ஸ்தாபோச்சித்தேருபாயம் ஸ்மரதி ஸ ஹி ஸுஹ்ருத்
ஸ்வாத்மவைரீ ததோன்ய: ||

"பசி, தாகம் இவைகளைத் தீர்த்துக் கொள்வதில் மாத்திரம் நினைவுள்ள பிராணி வர்க்கங்கள் உலகில் ஏராளமாக வஸிக்கின்றன. மனிதனோ பகுத்தறிவுள்ளவனாக இருப்பதால் அவன் அவைகளைவிட உயர்ந்தவனாகிறான். அப்படிப்பட்ட மனிதப்பிறப்பு கிடைப்பதோ மிக அரிது. அம்மனிதனாகப் பிறந்தவன் தனக்குத்தானே மித்திரனாகவும், சத்துருவாகவும் இயங்குகிறான். தங்களிடத்தில் பக்தி செலுத்தி, தனது தாபத்தைப் போக்கிக் கொள்ளத்தக்க வழியை எவன் நினைவுப்படுத்திக் கொள்கின்றானோ அவனே தனக்கு மித்திரனாகிறான். அவனைவிட வேறுபட்ட எவனும் தனது ஆத்மாவுக்கே சத்ருவாக விளங்குகிறானமே."

## பூமி முதலியவற்றிலிருந்து கற்றுக்கொண்டது

त्वत्कारुण्ये प्रवृत्ते क इव न हि गुरुर्लोकवृत्ते विभूमन्
सर्वाक्रान्ताऽपि भूमिर्नहि चलति तत सत्क्षमां शिक्षयेयम् ।
गृह्णीयामीश तत्तविषयपरिचयेऽप्यप्रसक्तिं समीरात्
व्याप्तत्वं चात्मनो मे गगनगुरुवशाद्भातु निर्लेपता च ॥ 3 ॥

த்வத்காருண்யே ப்ரவ்ருத்தே க இவ நஹி குருர்லோக வ்ருத்தே விபூமன்
ஸர்வாக்ராந்தாऽபி பூமிர்நஹி சலதி தத ஸத்க்ஷமாம் சிக்ஷயேயம் |
க்ருஹ்ணீயாமீச தத்விஷயபரிசயேऽப்யப்ரஸக்திம் ஸமீராத்
வ்யாப்தத்வம் சாத்மனோ மே ககனகுருவசாத்பாது நிர்லேபதா ச ||

"பரமாத்மாவான ஓ. குருவாயூரப்பா! தங்கள் அருள் கிட்டினால் உலகிலுள்ள ஸ்தாவர ஜங்மகங்களின் செய்கைகளில் எதுதான் குருபோல் ஆகாது. எல்லாவற்றையும் தாங்கி நிற்கும் இந்த பூமியானது சலிப்பை அடையாமலிருக்கிறதல்லவா? அந்த பூமா தேவியிடமிருந்து நான் மிக்க பொறுமையைக் கற்றுக்கொள்கிறேன். ஏ, ஈசனே! வாயு பகவானுக்கு ஒவ்வொரு விஷயத்திலும் (பொருளிலும்) சேர்க்கை ஏற்படினும் அவர் பற்றற்றவராக விளங்குவதால், பற்றுதல் இல்லாத் தன்மையை அவரிடமிருந்து நான் கற்றுக் கொள்ளுகிறேன். பற்றுதல் இல்லாமல் ஆத்மாவானது எங்கும் நிறைந்திருக்கும் தன்மையானது எனக்கு ஆகாயமாகிற குருவிடமிருந்து கிடைக்கட்டும்.

## ஜலம் முதலியவற்றிலிருந்து கற்றது

स्वच्छः स्यां पावनोऽहं मधुर उदकवद्वह्निवन्मा स्म गृह्णां
सर्वान्नीनोऽपि दोषं तरुषु तमिव मां सर्वभूतेष्ववेयाम् ।
पुष्टिर्नष्टिः कलानां शशिन इव तनोर्नात्मनोऽस्तीति विद्यां
तोयादिव्यस्तमार्ताण्डवदपि च तनुष्वेकतां त्वत्प्रसादात् ॥ 4 ॥

*ஸ்வச்ச: ஸ்யாம் பாவனோ஽ஹம் மதுர உதகவத்*
*வன்ஹிவன்மா ஸ்ம க்ருண்ஹாம்*
*ஸர்வான்னீநோ஽பி தோஷம் தருஷு தமிவ மாம்*
*ஸர்வபூதேஷ்வவேயாம் |*
*புஷ்டிர்நஷ்டி: கலாநாம் சசின இவ தனோர்நாத்*
*மனோ஽ஸ்தீதி வித்யாம்*
*தோயா திவ்யஸ்த மார்தாண்டவதபி*
*ச தனுஷ்வேகதாம் த்வத்ப்ரஸாதாத் ||*

"ஓ, குருவாயூரப்பா! நான் தண்ணீர் போல் தெளிவுள்ளவனாகவும், புனிதனாகவும், பிறரிடம் (மனது, சரீரம், வாய் இவைகள் மூலம்) இனிமையாக நடந்து கொள்பவனாகவும், இருப்பேனாகவும். நான் அக்னியைப் போல் எல்லா ஆகாரங்களையும் ஏற்றுக்கொண்டு, அதனால் ஏற்படும் பாபம் அற்றவனாகவும், மரங்களில் அக்னியானது வியாபித்திருப்பது போலவே எல்லா சரீரங்களிலும் நான் இருப்பதாக என்னை அறிவேனாகவும், வளர்ச்சியும், தேய்வும் சந்திரனது கலைகளுக்கே என்பது போல் அவ்வளர்ச்சியும், அழிவும் சரீரத்துக்கே ஏற்பட்டதாகும்; அவை ஆத்மாவுக்கு இல்லை என்னும் அறிவையும், ஒரே சூரியன் தண்ணீரில் வெவ்வேறாகத் தோன்றுவது போல் எல்லா சரீரங்களிலும் வெவ்வேறாகத் தோன்றினாலும் ஆத்மா ஒன்றே என் அறிவையும் தங்கள் அருளால் நான் தெரிந்துக்கொள்வேனாகவும்."

## மாடப்புரு முதலியவற்றிலிருந்து கற்பது

स्नेहाद्व्याधास्तपुत्रव्यसनमृतकपोतायितो मा स्म भूवं
प्राप्तं प्राश्नन् सहेय क्षुधमपि शयुवत् सिन्धुवत्स्यामगाधः ।
मा पप्तं योषिदादौ शिखिनि शलभवद् भृङ्गवत्सारभागी
भूयासं किन्तु तद्वद्धनचयनवशान्माऽहमीश प्रणेशम् ॥ 5 ॥

ஸ்நேஹாத்வயாதாஸ்தபுத்ரவ்யஸன
ம்ருதகபோதாயிதோ மா ஸ்ம பூவம்
ப்ராப்தம் ப்ராச்னன் ஸஹேய க்ஷுதமபிசயுவத்
ஸின்துவத்ஸ்யாமகாத : |
மா பப்தம் யோஷிதாதௌ சிகினி சலபவத்
ப்ருங்கவத்ஸாரபாகீ
பூயாஸம் கிந்து தத்வத்தனசயநவசான்மாऽஹமீச
ப்ரணேசம் ||

" ஒரு காலத்தில் ஒரு வேடன் ஓர் புருவின் மனைவியை யும், குஞ்சுகளையும் கொல்ல, பாசம் காரணமாக புத்திர சோகத்தினால், இறந்த அந்த மாடப்புருவைப்போல் நான் ஆகாதிருப்பேனாகவும். மலைப் பாம்பைப்போல் தானாகவே கிடைக்கும் ஆகாரத்தை உட்கொண்டு நான் பசியைப் பொறுத்துக் கொள்வேனாகவும். சமுத்திரத்தைப் போல கம்பீரமாக இருப்பேனாகவும். வெட்டுக்கிளியானது தானா கவே தீயில் விழுவது போல் ஸ்த்ரீகள் முதலிய அற்ப சுகங் களில் நான் விழாமலிருப்பேனாகவும். புஷ்பங்களிலிருந்து ஸாரத்தை மாத்திரம் க்ரஹிக்கும் வண்டு போல் நான் இருப் பேனாகவும். ஆனால் நான் அவ்வண்டுபோல் பொருளைத் திரட்டுவதில் ஈடுபட்டதால் ஏ, ஈசா! நான் நாசமடையா மல் இருக்க வேண்டும்.

**யானை முதலியவற்றை குருவாக அடைந்தது**

मा बध्यासं तरुण्या गज इव वशया नार्जयेयं धनौघं
हर्ताऽन्यस्तं हि माध्वीहर इव मृगवन्मा मुहं ग्राम्यगीतैः ।
नात्यासज्जेय भोज्ये झष इव बडिशे पिङ्गलावन्निराशः
सुप्यां भर्तव्ययोगात् कुरर इव विभो सामिषोऽन्यैर्न हन्यै ॥

*மா பத்யாஸம் தருண்யா கஜ இவ வசயா நார்ஜயேயம் தநௌகம்*
*ஹர்தாந்யஸ்தம் ஹி மாத்வீஹர இவ ம்ருகவன் மா முஹம் க்ராம்ய கீதை:*
*நாத்யாஸஜ்ஜேய போஜ்யே ஜஷ இவ படிசே பிங்கலாவன் நிராச:*
*ஸுப்யாம் பர்தவ்யயோகாத் குரர இவ விபோ ஸாமிஷோऽந்யைர்ந ஹந்யை ॥*

ப்ரபுவான ஹே குருவாயூரப்பா! பெண் யானையைக் கண்டு ஆண் யானை கட்டுப்படுவதுபோல் யுவதியான ஸ்திரீ ஜனத்தைக் கண்டு கட்டுப்படாமல் (மோஹிக்காமல்) இருக்க வேண்டும். தேன்பூச்சி தேனைச் சேர்த்துவைப்பது போல் நான் பொருளைக் குவியலாகச் சேர்த்து வைக்காமல் இருக்க வேண்டும். ஏனெனில் வேறு யாராவது அப் பொருளை அபஹரித்து விடுவான். (அதாவது தேன் பூச்சி சேர்த்து வைத்திருந்த தேனை, தேன் எடுப்பவன் எடுப்பதுபோல் நாம் பொருளை சேர்த்து வைத்தால் அதை திருடன் முதலியவர்கள் எடுத்துக் செல்வார்கள் எனக் கருத்து). க்ராம்யமான (பகவத்ஸம்பந்த மில்லாத) பாட்டுக் களைக் கண்டு மிருகங்கள் மயங்குவதுபோல் நான் மோஹ மடையாமல் இருப்பேனாக. சாப்பிடத் தகுந்த வஸ்துக் களில் ஆசையால் மீன் தூண்டிமுள்ளில் அகப்படுவது போல் அவ்வஸ்துக்களில் நான் அதிக அன்பு வைக்கா திருக்க வேண்டும். பிங்களை என்ற வேசிபோல் ஒன்றிலும்

ஆசையில்லாமல் சுகமாய் தூங்குவேனுக. (அதாவது பிங்களா என்ற வேசி முன்பு வந்த எல்லா ஆடவர்களையும், கொஞ்சமான செல்வம் பெற்றவர்கள் என நினைத்து அவர்களை நிராகரித்து வேறு நிறைய செல்வம் பெற்றவன் வருவான் என இரவு முழுவதும் காத்திருந்தாள். ஆனால் யாவரும் வராததாலும் தூக்கமின்மையாலும் வருந்தி கடைசியாய் அதிக ஆசையாலேயே இவ்விதமான துக்கம் அடைந்தேன். அதனால் இனி ஒன்றிலும் ஆசைவைக்கக் கூடாது என வைராக்யம் கொண்டு நன்கு தூங்கினாள்.) குரரம் என்ற பறவை மாம்ஸத்தை மூக்கில் வஹித்துக் கொண்டிருந்ததால் பலமுள்ள மற்ற பறவைகள் அதைக் கொன்றது. அவ்விதம் த்ரவ்யம் முதலியதை (ஆசையால்) வஹிக்காது இருந்து துன்பப்படாமல் இருப்பேனுக.

## குழந்தை முதலிய ஆசார்யர்களிடமிருந்து அறிந்தது

वर्तेय त्यक्तमानः सुखमतिशिशुवन्निस्सहायश्चरेयं
कन्याया एकशेषो वलय इव विभो वर्जितान्योन्यघोषः ।
त्वच्चित्तो नावबुध्यै परमिषुकृदिव क्ष्माभृदायानघोषं
गेहेष्वन्यप्रणीतेष्वहिरिव निवसान्युन्दुरोर्मन्दिरेषु ॥ 7 ॥

வர்தேய த்யக்தமாந: ஸுகமதிசிசுவன்னிஸ் ஸஹாயச்சரேயம்,
கன்யாயா ஏகசேஷோ வலய இவ விபோ வர்ஜிதாந்யோந்யகோஷ:|
த்வச்சித்தோ நாவ புத்யை பரமிஷுக்ருதிவ க்ஷ்மாப்ருதாயாநகோஷம்
கேஹேஷ்வந்யப்ரணீதேஷ்வஹிரிவ நிவஸாந் யுந்துரோர்மந்திரேஷு ||

ஹே, குருவாயூரப்பா! சிறு குழந்தைபோல் அபி மானத்தை விட்டு, சுகியாக இருக்கவேண்டும். ஒன்ரோடொன்று சப்திப்பதைத் தடுக்க ஒரு வளையல் மட்டும் பாக்கியாய் உடைய பெண்போல் சஹாயமில்லாமல், வீண் பேச்சை விட்டவனாய் சஞ்சரிப்பேனாக. (அதாவது ஒரு பெண்ணை விவாஹம் செய்து கொள்வதற்காக பார்க்க சென்றார்கள். அவ்விதம் தன் வீட்டிற்க்கு வந்த அவர்களை சாப்பிட்டு போகவேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். அவர்களும் அங்கு தங்கினார்கள். அப்பொழுது அப்பெண் வீட்டில் வேறு யாவரும் இல்லாததால் நெல்குத்த தொடங்கினாள். அவள் கையில் இருந்த வளையல்கள் ஒலித்தது. நெல்குத்துவதை வந்தவர்கள் அறியாமல் இருக்க வேண்டி உடன் எல்லா வளையல்களையும் கழட்டி ஒன்றைம் மட்டும் மீதமாக வைத்தாள். அப்பொழுது சப்தமும் ஓய்ந்தது. அதிலிருந்து ஸங்கம் இல்லாது இருந்தால் பயம் இல்லை என்று கருத்து). குறிவைத்து அம்பு போடுகிறவன், அரசன் வரும்பொழுது ஏற்படும் பேரீ முதலிய வாத்ய முழக்கத்தையும் எவ்விதம் அறியமாட்டானோ அவ்விதம் தங்களையே நினைக்கிறவனாய் வேறு ஒன்றையும் நினைக்காமல் இருப்பேனாக. எலிகளால் செய்யப்பட்ட பொந்துகளில் பாம்பு வஸிப்பதுபோல் பிறரால் கட்டப்பட்ட வீடுகளில் வஸிப்பவனாய் இருப்பேனாக.

## பட்டுப்பூச்சி முதலியவற்றை குருவாக அடைவது

त्वय्येव त्वत्कृतं त्वं क्षपयसि जगदित्यूर्णनाभात्प्रतीयां
त्वच्चिन्ता त्वत्स्वरूपं कुरुत इति दृढं शिक्षये पेशकारात् ।
विड्भस्मात्मा च देहो भवति गुरुवरो यो विवेकं विरक्तिं
धत्ते सञ्चिन्त्यमानो मम तु बहुरुजापीडितोयं विशेषात् ॥8॥

த்வய்யேவ த்வத்க்ருதம் த்வம் க்ஷபயஸி ஜகதித்யூர்ண
நாபாத்ப்ரதீயாம்,
த்வச்சிந்தா த்வத்ஸ்வரூபம் குருத இதி த்ருடம்
சிக்ஷயே பேசகாராத் |
விட்பஸ்மாத்மா ச தேஹோ பவதி குருவரோ யோ
விவேகம் விரக்திம்
தத்தே ஸஞ்சிந்த்யமானோ மம து பஹுருஜா
பீடிதோயம் விசேஷாத் ||

ஹே குருவாயூரப்பா! தங்களால் ச்ருஷ்டிக்கப்பட்ட உலகத்தை தங்களிடத்திலேயே லயிக்கச் செய்கிறீர் (அடக்கிக் கொள்கிறீர்) என்பதை நூல் போன்ற தாய் கூடு கட்டி பிறகு அதை தானே இழுத்துக் கொள்ளும் சிலந்திப் பூச்சியிடமிருந்து அறிந்து கொள்வேன். தங்களையே நினைத்திருக்கும் எண்ணம் தங்கள் ஸ்வரூபத்தையே அளிக்கிறது என்பதை கொளவியிடமிருந்து திடமாய் அறிவேன். (அதாவது கொளவி ஒரு புழுவை தன் கூட்டில் அடைத்து அதை தன் கொடுக்கால் கொட்டும். பிறகு அப்புழு எப்பொழுதும் தன்னைக் கொட்டிய குளவியையே நினைத்து நினைத்து பிறகு குளவியாகவே ஆகிவிடும்) புழுக்களாகவோ பஸ்மமாகவோ, ஆகும் தன்மை வாய்ந்த இந்த சரீரமானது ஓர் சிறந்த ஆசார்யனாக ஆகிறது, அந்த சரீரம் எவ்விதம் உண்டாயிற்று எப்படி உள்ளது என்று நன்கு விசாரிக்கப் படுமேயானல் க்ஞானத்தையும், வைராக்யத்தையும். உண்டாக்குகிறது. அதிலும் விசேஷமாய் பல வியாதியால் துன்புற்ற என்னுடையசரீரமோவெனில் மிக்க சிறந்த குருவாய் சீக்கிரமே வைராக்யத்தை அளிக்கிறது.

### தேகம் காரணமாகவே விஷயங்களில் பற்று

ही ही मे देहमोहं त्यज पवनपुराधीश यत्प्रेमहेतो-
गेंहे वित्ते कलत्रादिषु च विवशितास्त्वत्पदं विस्मरन्ति ।
सोऽयं वह्नेः शुनो वा परमिह परतः सांप्रतं चाक्षिकर्ण-
त्वग्जिह्वाद्या विकर्षन्त्यवशमत इतः कोऽपि न त्वत्पदाब्जे ॥

ஹ்ரீ ஹ்ரீ மே தேஹமோஹம் த்யஜ பவனபுராதீச யத்
ப்ரேமஹேதோர்
கேஹே வித்தே கலத்ராதிஷு ச விவசிதாஸ்த்வத்
பதம் விஸ்மரந்தி |
ஸோயம் வஹ்னே: சுனோ வா பரமிஹ பரத:
ஸாம்ப்ரதம் சாக்ஷிகர்ண
த்வக்ஜிஹ்வாத்யா விகர்ஷந்த்யவசமத இத: கோऽபி
ந த்வத்பதாப்ஜே ||

ஹே குருவாயூரப்பா! இந்த சரீரத்திலுள்ள ஆசை காரணமாக, வீட்டிலும், பொருளிலும், பத்னி முதலியவர்களிடத்திலும், பரவசர்களாக ஆகி ஜனங்கள் தங்கள் ஸ்வரூபத்தை மறக்கிறார்களோ அந்த இந்த சரீரமானது, முடிவில் அக்னிக்கோ, அல்லது நாய் முதலியவற்றிற்கோ அதீனமாக இருக்கிறது. மேலும் இருக்கும் போதோ வெனில் கண், காது, தோல், நாக்கு, முதலிய இந்திரியங்கள், தன் நிலையற்றதுகளாய் இங்குமங்கும் இழுக்கின்றன. ஒரு இந்திரியமாவது தங்களுடைய தாமரை மலர் போன்ற சரணத்தினிடம் இழுத்துச் செல்லவில்லை. கஷ்டம் கஷ்டம்.

### சரணபக்தியை வேண்டுதல்

दुर्वारो देहमोहो यदि पुनरधुना तर्हि निश्शेषरोगान्
हृत्वा भक्तिं द्रढिष्ठां कुरु तव पदपङ्केरुहे पङ्कजाक्ष ।
नूनं नानाभवान्ते समतिगतमिमं मुक्तिदं विप्रदेहं
क्षुद्रे हा हन्त मा मा क्षिप विषयरसे पाहि मां मारुतेश ॥

துர்வாரோ தேஹமோஹோ யதி புனரதுனா தர்ஹி
நிச்சேஷரோகான்
ஹ்ருத்வா பக்திம் த்ரடிஷ்டாம் குரு தவ பத
பங்கேருஹே பங்கஜாக்ஷ |
நூநம் நாநா பவாந்தே ஸமதிகதமிமம் முக்திதம்
விப்ரதேஹம்
க்ஷுத்ரே ஹா ஹந்த மா மா க்ஷிப விஷயரஸே
பாஹி மாம் மாருதேச |

இந்த தேகத்தில் வைத்த மோஹம் போக்க முடியாததா ஞல் இப்பொழுது என் எல்லா ரோகங்களையும் போக்கி, தங்களுடைய பாத கமலத்தில் திருடமான பக்தியையளிக்க வேண்டும். தாமரைக் கண்ணனை ஹே குருவாயூரப்பா! பல பிறவிகளுக்குப் பிறகு அடையப்பட்டதும், மோக்ஷத்தை யளிக்கக் கூடியதுமான இந்த பிராமண சரீரத்தை மட்ட மான விஷயரஸத்தை அனுபவிப்பதில் தள்ளிவிடாதீர். கஷ்டம் என்னைக் காப்பாற்றுவீராக.

என நம்பூதிரி வேண்ட, ஸ்ரீ அப்பனும் ஆம் என தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ அப்பனின் மஹிமை

பம்பாயில் ஒரு பிரபல கம்பெனியில் ஒருவர் வேலை பார்த்து வந்தார். முன்பு ஒரு ஸமயம் தன் உடம்பு அசௌகர்யத்தால் வைத்யம் செய்து கொள்ள தன் ஊருக்குச் சென்றார். அவர் ஊர் பாலக்காடு ஆதலால் சென்னை வழியாகச் சென்றார். அப்பொழுது அவரது மனைவி இரு சிறு குழந்தைகள் இவர்களே கூடச் சென்றார்கள், அவ்விதம் போகும் போது அவரது உடம்பு முன்பே நோய்வுற்றிருந்ததால் தீடீரென கவலைக்கிடமான நிலையில் காணப்பட்டது உடன் ரயில் கார்டினிடம் சொல்லி ஸ்டேஷனில் ஒரு டாக்டருக்கு போன் செய்து டாக்டரை வரவழித்துப் பார்த்தார்கள். டாக்டரும் படுக்கையில் ஒரு மாதத்திற்குமேல் இருக்க வேண்டும் மென்றும், இனி பயணம் செய்வது உசிதமில்லை யென்றும் சொல்லிச் சென்றார். அதைக் கேட்ட எல்லோரும் மிக்க கவலையும் துக்கமும் அடைந்தனர். ஆயினும் (21) வயதே உள்ள அவர் மனைவி தன் சிறு இரு குழந்தைகளையும், ப்ரக்ஞையற்று

இருக்கும் தன் பர்த்தாவையும் பார்த்து, "ஓ குருவாயூரப்பா" என்று இரண்டு மூன்று தடவை தன்னை மறந்து உறக்கக் கதறினுள்.

அது ஸமயம் ஒரு வாலிபன் வந்து தான் அந்த வண்டியில் வருகிறவன் என்றும், டாக்டருக்கு படிக்கிறவன் என்றும் கூறி இவரிடம் வந்து ஏதோ மருந்தையும் கொடுத்து ஒரு இஞ்செக்ஷனும் செய்து நான் மறுபடியும் வந்து பார்க்கிறேன் என்று சொல்லிச் சென்ருன், சிறிது நேரத்திற்கெல்லாம் நினைவு வந்து உடம்பும் சற்று குணமாகக் காணப்பட்டது. எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள் பல முறை அவ்வாலிபனை எதிர் பார்த்தும் அவன் வரவே இல்லை அவ்வண்டி முழுவதும் அவன் அடையாளத்தைக் கூறி தேடியும் அவன் காணப்படவில்லை.

உடன் இது ஸ்ரீ குருவாயூரப்பனுகத்தான் இருக்க வேண்டும் என நினைத்து, ஸ்ரீ அப்பனின் கருணையைக் கொண்டாடி ஸ்ரீ அப்பனை ஒரு தடவை தர்சனம் செய்து வருவதாகவும் ப்ரார்த்தனை செய்து கொண்டார். பிறகு தன் ஊருக்குச் சென்ருர். முன்பு தான் ப்ரார்த்தனை செய்த படியே தர்சனமும் செய்து வந்தார். மீண்டும் பம்பாய்க்கு வந்து தற்போது தன் குடும்பத்துடன் சௌக்யமாய் வாழ்ந்து வருகிருர்.

இப்படி ஸ்ரீ குருவாயூரப்பனின் கருணையால் பல பேர்கள் நன்மையை அடைந்திருக்கிருர்கள்.

—o—

94-வது தசகம்

## ஒன்றான ஆத்மா சரீரங்களின் பேதத்தால் பலவிதமாய் தோன்றுவது

शुद्धा निष्कामधर्मैः प्रवरगुरुगिरा तत्स्वरूपं परं ते
शुद्धं देहेन्द्रियादिव्यपगतमखिलव्याप्तमावेदयन्ते ।
नानात्वस्थौल्यकार्श्यादि तु गुणजवपुः सङ्गतोऽध्यासितं ते
वह्नेर्दारुप्रभेदेष्विव महदणुतादीप्तताशान्ततादि ॥ 1 ॥

சுத்தா நிஷ்காமதர்மை: ப்ரவர குருகிரா தத்ஸ்வரூபம் பரம் தே
சுத்தம் தேஹேந்திரியாதிவ்யபகதமகிலவ்யாப்தமாவேதயந்தே ।
நாநாத்வஸ்தௌல்ய கார்ச்யாதி து குணஜவபு: ஸங்கதோऽத்யாஸிதம் தே
வந்ஹேர்தாருப்ரபேதேஷ்விவ மஹ தணுதாதீப்ததா சாந்ததாதி ॥

ஹே குருவாயூரப்பா, பயனை விரும்பாது தர்மங்களை செய்து அதனால் சுத்த மன முள்ளவர்கள். தேஹம் இந்திரியங்கள், மாயை, அதனால் செய்யப் பட்டவை இவைகளைக் காட்டிலும் வேறானதும், சுத்தமானதும் எங்கும் நிறைந்திருப்பதும், பரப்ரும்மமானது மான எங்களுடைய அந்த நிர்குண ஸ்வரூபத்தையறிகிறார்கள். பல விதமான கட்டைகளில் ஸம்பந்தித்த அக்னியானது பெரியதாகவும் சிறியதாகவும், சாந்தமடைந்ததாயும், எவ்விதம் தோன்றுகிறதோ, அவ்விதம் குணங்களால் செய்யப்பட்ட சரீரத்தின் ஸம்பத்தால் அந்த ப்ரும்மமானது பல விதமாய் இருத்தல், பெரியது, சிறியது முதலியதாய் தோன்றுகிறது.

## ஆசார்ய உபதேசத்தால் ப்ரும்மமாக இருப்பதையறிதல்

आचार्याख्याधरस्थारणिसमनुमिलच्छिष्यरूपोत्तरार-
ण्यावेधोद्भासितेन स्फुटतरपरिबोधाग्निना दह्यमाने ।
कर्मालीवासनातत्कृततनुभुवनभ्रान्तिकान्तारपूरे
दाह्याभावेन विद्याशिखिनि च विरते त्वन्मयी खल्ववस्था ॥

ஆசார்யாக்யாதரஸ்தாரணி ஸமநுமிலச் சிஷ்யரூ
போத்தராரா-
ண்யாவேதோத்பாஸிதேந ஸ்புடதரபரிபோதாக்னிநா
தஹ்யமானே |
கர்மாலீவாஸநாதத்க்ருத தநுபுவநப்ராந்தி காந்தார
பூரே
தாஹ்யாபாவேந வித்யாசிகிநி ச விரதே த்வன்மயீ
கல்வவஸ்தா ||

ஹே குருவாயூரப்பா, ஸ்ரீ ஆசார்யனுகிற கீழ் அரணிக் கட்டையும் வந்தடைந்த சிஷ்யனுகிற மேல் அரணிக் கட்டையும் உரசுவதால் விளங்குகிறதான மிகத்தெளிவான ஞான மாகிற அக்னியால் கர்மங்களின் கூட்டம் அதன் வாஸனை கள் அதனுல் உண்டான சரீரம் உலகம் முதலியவைகளில் உள்ள ப்ராந்திரூபமான காடு முழுவதும் எறிக்கப்படுகிறது. மேலும் எறிக்கப் பொருள் இல்லாத பொழுது ஞானமாகிற அந்த அக்னியானது தானும் சாந்த மடைகிறது. அப் பொழுதும் மீதமாய் இருக்கும் ஓர் நிலை தங்கள் ரூபமாக இருக்கிறதாமே.

ஸ்ரீ பகவத்ப்ராப்தி, காம்ய கர்மம், இவைகளின்பயன்

एवं त्वत्प्राप्तितोऽन्यो नहि खलु निखिलक्लेशहानेरुपायो
नैकान्तात्यन्तिकास्ते कृषिवदगदषाड्गुण्यषट्कर्मयोगाः ।
दुर्वैकल्यैरकल्या अपि निगमपथास्तत्फलान्यप्यवाप्ता
मत्तास्त्वां विस्मरन्तः प्रसजति पतने यान्त्यनन्तान् विषादान् ॥

ஏவம் த்வத்ப்ராப்திதோऽந்யோ நஹி கலு
நிகிலக்லேசஹாநேருபாயோ
நைகாந்தாத்யந்திகாஸ்தே க்ருஷிவதகதஷாட்
குண்யஷட் கர்மயோகா: |
துர்வைகல்யைரகல்யா அபி நிகமபதாஸ்தத்
பலாந்யப்யவாப்தா—
மத்தாஸ்த்வாம் விஸ்மரந்த: ப்ரஸஜதி பதனே
யாந்த்யநந்தாந் விஷாதாந் ‖

ஹே குருவாயூரப்பா, இவ்விதம் எல்லா துக்கங்களையும் போக்குவதற்கு தங்களை அடைவதைத் தவிர வேறு உபாயம் இல்லை. ஆயுர்வேதத்தில் கூறிய மருந்து முதலியவைகளோ, ராஜநீதியில் சொல்லிய ஸந்தி, விக்ரஹ, யானம், முதலிய ஆறு உபாயங்கள் தர்ம சாஸ்த்திரத்தில் கூறிய ஜநம், யாஜனம், அத்யயனம், அத்யாபனம், தானம், ப்ரதிக்ரஹம் முதலிய ஆறு கர்மங்கள் மேலும் வேதத்தில் கூறிய யோகங்கள் உபாயங்கள் இவைகள். துக்கத்தை முழுவதும் நாசமடையச் செய்வதற்கோ திரும்பவும் வராமல் தடுப்பதற்கோ சக்தியற்றவை, அவை க்ருஷி (வ்யவஸாயம்) போல் மிகுந்த கஷ்டத்துடன் சுகமளிப்பவை. வேதத்தில் கூறிய மார்கங்கள், குறைவு (அங்கவைகல்யம்) இல்லாமல் செய்யமுடியாதவைகள். ஆயினும், அவைகளைச் செய்து அதன்பலனை (ஸ்வர்கத்தை) அடைந்து, அதனால் மதமடைந்தவர்களாய் தங்களை மறந்து விடுகிறார்கள். (அந்த சுகபலன் முடிந்ததும்) கீழே விழும்பொழுது அவர்கள் அளவு கடந்த துக்கங்களை அடைகிறார்கள்.

### அழிவற்றது வைகுண்ட உலகம்

त्वल्लोकादन्यलोकः क्वनु भयरहितो यत्परार्धद्वयान्ते
त्वद्भीतः सत्यलोकेऽपि न सुखवसतिः पद्मभूः पद्मनाभ ।
एवं भावे त्वधर्मार्जितबहुतमसां का कथा नारकाणां
तन्मे त्वं छिन्धि बन्धं वरद कृपणबन्धो कृपापूरसिन्धो ॥ 4 ॥

த்வல்லோகாதந்யலோக: க்வநு பயரஹிதோ யத்பரார்த்த த்வயாந்தே
த்வத் பீத: ஸத்யலோகேऽபி ந ஸுகவஸதி: பத்மபூ: பத்மநாப |
ஏவம் பாவே த்வதர்மார்ஜிதபஹுதமஸாம் கா கதா நாரகாணும்
தந்மே த்வம் சிந்திபந்தம் வரத க்ருபணபந்தோ க்ருபாபூரஸிந்தோ ||

பத்மநாபனே ஹே குருவாயூரப்பா, தங்களுடைய வைகுண்ட உலகத்தைத் தவிர பயமற்ற உலகம் எங்கு இருக்கிறது. ஏனென்ருல் இருபரார்த்தங்களின் முடிவில் ப்ரும்மதேவன் தங்களிடமிருந்து ஏற்படும் நாசத்திலிருந்து பயந்தவராய் ஸத்ய லோகத்திலும் சுகமாய் வஸிக்கவில்லை. இவ்விதமிருக்கும் பொழுது அதர்மங்களை செய்து அதனுல் மிக்க தமோகுணமுள்ளவர்களான நரகத்தில் வஸிப்பவர்களைப் பற்றி என்னவென்று கூறுவது. ஹே, வரதனே, துக்கமடைந்தவர்களைக் காற்பவனே, கருணைக் கடலே தாங்கள் என்னுடைய பந்தங்களை அகற்ற வேண்டும்

### ஜீவனையும் ஈச்வரனையும் கூறுவது

याथार्थ्यात्त्वन्मयस्यैव हि मम न विभो वस्तुतो बन्धमोक्षौ
मायाविद्यातनुभ्यां तव तु विरचितौ स्वप्नबोधोपमौ तौ ।
बद्धे जीवद्विमुक्तिं गतवति च भिदा तावती तावदेको
भुङ्क्ते देहद्रुमस्थो विषयफलरसान्नापरो निर्व्यथात्मा ॥ 5 ॥

யாதார்த்யாத்வந்மயஸ்யைவ ஹி மம ந விபோ
வஸ்துதோ பந்தமோக்ஷௌ,
மாயாவித்யாதநுப்யாம் தவ து விரசிதௌ ஸ்வ
ப்நபோதோபமௌ தௌ |
பத்தே ஜீவத்விமுக்திம் கதவதி ச பிதா தாவதீ
தாவதேகோ
புங்தே தேஹத்ருமஸ்தோ விஷயபலரஸாந்நாபரோ
நிர்வ்யதாத்மா ||

ப்ரபுவான ஹே குருவாயூரப்பா, உண்மையாய் தங்கள் அம்ச பூதமாய் இருக்கும் எனக்கு பந்தமோ, மோக்ஷமோ கிடையாது. அவை தங்களுடைய மாயை, வித்யை இவைகளால் செய்யப்பட்டதேயாகும். அதுவும் ஸ்வப்னம் விழித்துக் கொள்வது இவைகளைப்போல் ஆகும். பந்தமடைந்தவர்களிடத்திலும், ஜீவன் முக்தியடைந்தவர்களிடத்திலும் வேற்றுமை அவ்விதமே காணப்படுகிறது. அதாவது ஒருவன் சரீரமாகிற மரத்தில் இருந்து கொண்டு விஷயங்களாகிற பழங்களை அனுப்பவிக்கிறன். வேறு ஒருவன் துக்கமற்றவனாய் இருந்துகொண்டு விஷயங்களை அனுபவிக்கிறதில்லை. ஒருவன் ஜீவன். மற்றொருவன் ஈச்வரன்.

## ஜீவன் முக்தநிலையையடைய வழி

जीवन्मुक्तत्वमेवंविधमिति वचसा किं फलं दूरदूरे
तन्नामाशुद्धबुद्धेर्न च लघु मनसः शोधनं भक्तितोऽन्यत्।
तन्मे विष्णो कृषीष्ठास्त्वयि कृतसकलप्रार्पणं भक्तिभारं
येन स्यां मङ्क्षु किञ्चिद्गुरुवचनमिलत्त्वत्प्रबोधस्त्वदात्मा ॥6॥

ஜீவந்முக்தத்வமேவம் விதமிதி வசஸா கிம் பலம்
தூரதூரே
தன்னுமா சுத்தபுத்தேர்ந ச லகு மனஸ : சோதனம்
பக்தி தோsன்யத் |
தன்மேவிஷ்ணோ க்ருஷீஷ்ட்டா ஸ்த்வயி
க்ருதஸகலப்ரார்பணம் பக்தி பாரம்
யேந ஸ்யாம் மங்க்ஷு கிஞ்சித்குருவசன மிலத்வத்
ப்ரபோத ஸ்த்வதாத்மா ||

ஹே குருவாயூரப்பா, ஜீவன்முக்தனின் நிலை இம்மாதிரியுள்ளது எனக்கூறுவதால் என்ன பிரயோஜனம். மனது சுத்த மில்லாதவனுக்கு, அந்நிலை வெகு தூரத்திற்கு அப்பால் உள்ளது என உலகம் அறிந்ததே. ஆனால் அம்மனதையும் சுத்தி செய்ய பக்தியைத்தவிர சுலபமான வேறு வழியில்லை, ஆகையால் ஹே விஷ்ணோ தங்களிடம் எல்லாவற்றையும் அர்பணம் செய்வதான பக்திப் பெறுக்கை எனக்கு அளிப்பீராக. அப்பக்தியால் ஆசார்யனுடைய சிறிய உபதேசத்தாலேயே தங்களுடைய தத்வக்ஞானத்தை யறிந்தவனாய் சீக்கிரம் தங்களாகவே நான் ஆகி விடுவேன்.

## காம்ய கர்மாவை விலக்கி பக்தியை வேண்டுவது

शब्दब्रह्मण्यपीह प्रयतितमनसस्त्वां न जानन्ति केचित्
कष्टं वन्ध्यश्रमास्ते चिरतरमिह गां बिभ्रते निष्प्रसूतिम् ।
यस्यां विश्वाभिरामाः सकलमलहरा दिव्यलीलावताराः
सच्चित्सान्द्रं च रूपं तव न निगदितं तां न वाचं भ्रियासम् ॥7॥

சப்தப்ரஹ்மண்யபீஹ ப்ரயதிதமனஸஸ்த்வாம்
ந ஜாநந்தி கேசித்
கஷ்டம் வந்தியச்ரமாஸ்தே சிரதரமிஹ காம் பிப்ரதே
நிஷ்ப்ரஸூதிம் |
யஸ்யாம் விச்வாபிராமா: ஸகலமலஹரா திவ்ய
லீலாவதாரா :
ஸச்சித்ஸாந்த்ரம் சரூபம் தவ ந நிகதிதம் தாம் ந வாசம்
ப்ரியாஸம் ||

ஹே குருவாயூரப்பா! சிலர் மீமாம்ஸையால் விவரிக்க பட்டதும் அங்கங்களுடன் கூடியது மான வேதத்திலேயே முயர்சியடைந்த மனமுடையவர்களாக இருந்த போதிலும் அந்த வேதத்தில் கூறப்பட்ட தங்களை, அறிவதில்லை, கஷ்டம் வீணான சிரமத்தை யடைந்தவர்களான அவர்கள் கன்று போடாத (பால் கறக்காத) பசுவைப் போல், பக்தி க்ஞானம் இவற்றை அளிக்காத அவ்வேத வாக்குகளை வெகு காலமாய் சுமக்கிறார்கள். ஹே கிருஷ்ணா எல்லா ஜனங் களின் மனதைக் கவர்கிறதும், ஸகலபாபங்களைப் போக்கு கிறதும், திவ்யமான லீலைகளைச் செய்த அவதாரங்களை விளக்கும் சரித்திரங்களையும், நிறைந்த ஸச்சிதாநந்த மய மான தங்களுடைய ஸ்வரூபத்தையும் எந்த வார்த்தைகளில் கூறவில்லையோ, அந்த வார்த்தையை நான் சுமக்காமல் இருக்கும் படி தாங்கள் அருள்புரிவீராக.

### ஸகுண உபாஸனத்தைக் கூறுவது

यो यावान् यादृशो वा त्वमिति किमपि नैवावगच्छामि भूम-
न्नेवं चानन्यभावस्त्वदनुभजनमेवाद्रिये चैद्यवैरिन् ।
त्वल्लिङ्गानां त्वदङ्घ्रिप्रियजनसदसां दर्शनस्पर्शनादि-
र्भूयान्मे त्वत्प्रपूजानतिनुतिगुणकर्मानुकीर्त्यादरोऽपि ॥ 8 ॥

யோ யாவான் யாத்ருசோ வாத்வமிதி கிமபி நௌவ
வகச்சாமி பூம—
ந்நேவம் சாநந்யபாவஸ்த்வதநுபஜநமேவாத்ரியே
சைத்யவைரின் |
த்வல்லிங்கானாம் த்வதங்க்ரிப்ப்ரிய ஜனஸதஸாம்
தர்சனஸ்பர்சனாதி
ர்பூயான்மே த்வத்ப்ரபூஜாநதிநுதி குணகர்மானு
கீர்த்யாதரோऽபி ||

பரிபூர்ணரான ஹே குருவாயூரப்பா, தாங்கள் எந்த ஸ்வரூபமாய் இருப்பவர், எவ்வளவு மஹிமை வாய்ந்தவர், எவ்விதமான தர்மத்தையுடையவர், என்று நான் ஒன்றையும் அறியவில்லை, ஆனால் வேறு இடத்தில் மனம் செலுத்தாமல் அடிக்கடி தங்களையே ஆதரவோடு பஜிக்கிறேன், சிசுபாலனுக்கு எதிரியான ஹே கிருஷ்ணா தங்களுடைய பால கிருஷ்ணன், வேணு கோபாலன் முதலிய மூர்த்திகளையோ, தங்களுடைய சரணத்திலேயே அன்பு கொண்ட ஜன கூட்டங்களையோ, தர்சனம் செய்வது, அவர்களோடு சேர்வது முதலியவை எனக்கு ஏற்படவேண்டும். மேலும் தங்களை நன்கு பூஜை செய்வது நமஸ்கரிப்பது, ஸ்தோத்திரம் செய்வது, தங்கள் குணங்களைக் கூறுவது, தாங்கள் செய்த நன்மைகளைக் கூறுவது, முதலியவைகளில் எனக்கு மிகுந்த பற்று இருக்க வேண்டும்.

## பகவானை பூஜிக்க வேண்டிய இடம்

यद्यल्लभ्येत तत्तत्तव समुपहृतं देव दासोऽस्मि तेऽहं
त्वद्गेहोन्मार्जनाद्यं भवतु मम मुहुः कर्म निर्मायमेव ।
सूर्याग्निब्राह्मणात्मादिषु लसितचतुर्बाहुमाराधये त्वां
त्वत्प्रेमार्द्रत्वरूपो मम सततमभिष्यन्दतां भक्तियोगः ॥ 9 ॥

யத்யல்லப்யேத தத்தத்தவ ஸமுபஹ்ருதம் தேவ தாஸோऽஸ்மி தேऽஹம்
த்வத்கேஹோந்மார்ஜநாத்யம் பவது மம முஹு: கர்ம நிர்மாயமேவ |
ஸூர்யாக்னி ப்ராஹ்மணாத்மாதிஷு லஸிதசதுர் பாஹு மாராதயே த்வாம்
த்வத்ப்ரேமார்த்ரத்வரூபோ மம ஸததமபிஷ்யந் ததாம் பக்தியோக: ||

ஹே குருவாயூரப்பா, நான் எந்த எந்த பொருள்களை யடைகிறேனோ அந்த அந்த பொருள்களை தங்களிடமே அர்ப்பணம் செய்வேனாக. நான் தங்களுக்கு அடிமையாக இருக்கிறேன். தங்களுடைய ஆலயத்தை சுத்தம் செய்வது முதலியவற்றை கபடமில்லாமல் நான் அடிக்கடி செய்வேனாக. மேலும், சூரியன், அக்னி, பிராமணன், தன் ஹ்ருதயம், பசு, முதலிய இடங்களில் சதுர்புஜத்தோடு (நான்கு கைகளுடன்) விளங்கும் தங்களை ஆராதனம் செய்கிறேன். தங்களிடத்தில் உள்ள அன்பால் நனைந்தஸ்வரூபமான பக்தியோக மானது என்னிடம் இடைவிடாமல் விளங்கட்டும்.

## நம்பூதிரி பக்தியையே வேண்டுவது

ऐक्यं ते दानहोमव्रतनियमतपस्सङ्ख्ययोगैर्दुरापं
त्वत्सङ्गेनैव गोप्यः किलसुकृतितमाः प्रापुरानन्दसान्द्रम् ।
भक्तेष्वन्येषु भूयस्स्वपि बहुमनुषे भक्तिमेव त्वमासां
तन्मे त्वद्भक्तिमेवं द्रढय हर गदान् कृष्ण वातालयेश ॥10॥

ஐக்யம் தே தாநஹோமவ்ரதநியமதபஸ்ஸாங்க்ய
யோகைர்துராபம்
த்வத்ஸங்கேநைவ கோப்ய: கிலஸுக்ருதிதமா:
ப்ராபுராநந்த ஸாந்த்ரம் |
பக்தேஷ்வந்யேஷு பூயஸ்ஸ்வபி பஹுமனுஷே
பக்திமேவ த்வமாஸாம்
தந்மே த்வத்பக்திமேவம் த்ரடய் ஹர கதான் க்ருஷ்ண
வாதாலயேச ||

ஹே குருவாயூரப்பா, தானங்கள் ஹோமம், வ்ரதம், நியமம், தவம், ஸாங்க்ய யோகம் முதலியவற்றால் அடைய முடியாது ஆனந்தம் மட்டும் நிரம்பிய ஐக்யத்தை (மோக்ஷத்தை) மிகுந்த புண்யசாலிகளான கோபிகைகள்

அடைந்தார்கள். தங்களிடத்தில் பக்தி செய்கிறவர்கள் பலபேர்கள் இருந்த போதிலும் இந்த கோபிகைகளுடைய பக்தியையே தாங்கள் வெகுமதிக்கிறீர். ஆகவே எனக்கு தங்களிடம் உள்ள பக்தியை ஸ்திரமாக இருக்கச் செய்ய வேண்டும். ஹே கிருஷ்ணு! என் வியாதிகளைப் போக்க வேண்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் ஆம் என தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## கலியில் கண்கண்ட தெய்வம்

ஒரு பையனுக்கு வேலை இல்லாமல் இருந்தது. அதனுல் அவன் தாயார் ரொம்பவும் கவலை கொண்டாள். அந்த ஸமயம் ஓர் பெரியவர் அந்த அம்மாவிடம் ஸ்ரீ குருவாயூரப்பன் படத்தை வைத்து பூஜை செய்யும்படியும் ஸ்ரீ நாராயணீயத்தை பாராயாணம் செய்யும் படியும் சொன்னுர். மேலும் தானும் ஸ்ரீ நாராயணீயத்தை கேட்டதிலிருந்து பல க்ஷேமத்தை யடைந்திருக்கிறேன் என்று கண்ணிர் பெருக்கிக் கூறினுர். உடன் மறுதினம் வெள்ளிக் கிழமை அன்று ஸ்ரீ குருவாயூரப்பன் படம் கிடைத்து. அன்றை யிலிருந்து பூஜையும் பாராயணமும் செய்ய ஆரம்பித்தான். அதற்கு அடுத்த வெள்ளிக் கிழமையிலேயே உத்யோகமும் கிடைத்தது. எல்லோரும் ஸ்ரீ அப்பனின் பெறுமையை கூறி சந்தோஷித்தார்கள். என்னிடம் அவன் தாயரர் நேரில் கூறி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

—o—

95-வது தசகம்

## பகவானே ஜீவனாக ஆவது

आदौ हैरण्यगर्भीं तनुमविकलजीवात्मिकामास्थितस्त्वं
जीवत्वं प्राप्य मायागुणगणखचितो वर्तसे विश्वयोने ।
तत्रोद्वृद्धेन सत्त्वेन तु गुणयुगलं भक्तिभावं गतेन
छित्त्वा सत्त्वं च हित्त्वा पुनरनुपहितो वर्तिताहे त्वमेव ॥ 1 ॥

ஆதௌ ஹைரண்யகர்பீம் தநுமவிகல ஜீவாத்மிகா
மாஸ்திதஸ்த்வம்
ஜீவத்வம் ப்ராப்ய மாயாகுணகணகசிதோ வர்தஸே
விச்வயோநே |
தத்ரோத்வ்ருத்தேன ஸத்வேந து குணயுகளம்
பக்திபாவம் கதேந
சித்வா ஸத்வம் ச ஹித்வா புநரநுபஹிதோ
வர்திதாஹே த்வமேவ ||

உலகத்தின் காரணமான ஹே குருவாயூரப்பா, மஹாப்ரளயத்தின் பிறகு புதியதாக உலகத்தை ஸ்ருஷ்டிக்க நினைத்த பொழுது எல்லா ஜீவன்களும் ஸூக்ஷ்ம சரீரமாய் இருக்கும் ஸமஷ்டிரூபமான ஹிரண்யகர்பருடைய சரீரத்தையடைந்தீர் பிறகு தாங்கள் ஸூக்ஷ்மசரீரமான வ்யஷ்டிரூபத்தை எடுத்துக்கொண்டு (ஜீவனாக ஆகி) மாயையின் குணங்களான மஹத் அகங்காரம் பஞ்ச பூதங்கள் இந்திரியங்கள், பஞ்ச பிராணன்கள் இவைகளோடு சம்பந்தப் பட்டவராக இருக்கிறீர். அப்பொழுது நன்கு ஓங்கி வளர்ந்ததும் பக்தியின் உருவமுமான ஸத்வ குணத்தினால் மற்ற ரஜஸ், தமோ குணங்களை விலக்கி பிறகு ஸத்வ குணத்தையும் விட்டு விட்டு (நிர்குணராய்) தாங்களாகவே பரிபூர்ணனாய் இருப்பேனாக.

## ஹம்ஸரூபியான பகவான் கூறிய வழி

सत्त्वोन्मेषात् कदाचित् खलु विषयरसे दोषबोधेऽपि भूमन्
भूयोऽप्येषु प्रवृत्तिः सतमसि रजसि प्रोद्धते दुर्निवारा ।
चित्तं तावद् गुणाश्च ग्रथितमिह मिथस्तानि सर्वाणि रोद्धुं
तुर्ये त्वय्येव भक्तिः शरणमिति भवान् हंसरूपी न्यगादीत् ॥2॥

*ஸத்வோந்மேஷாத் கதாசித் கலு விஷயரஸே தோஷ போதே஽பி பூமன்*
*பூயோ஽ப்யேஷு ப்ரவ்ருத்தி : ஸதமஸி ரஜஸி ப்ரோத் ததே துர்நிவாரா |*
*சித்தம் தாவத் குணாச்ச க்ரதிதமிஹ மிதஸ்தாநி ஸர்வாணி ரோத்தும்,*
*துர்யே த்வய்யேகபக்தி : சரணமிதி பவான் ஹம்ஸரூபி ந்யகாதீத் ॥*

பரிபூர்ணரான ஹே குருவாயூரப்பா, ஸத்வகுணம் வளர்ந்தால் ஒரு சமயமாவது விஷயானுபவத்தில் தோஷமிருப்பதாய் அறிந்த போதிலும் மறுபடியும் தமோ குணத்துடன் கூடிய ரஜோகுணம் வளர்ந்ததும் இந்த விஷயங்களை மீண்டும் அனுபவிக்கத் துடங்குகிருன். அந்த அனுபவமானது தடுக்க முடியாமல் ஆகிறது. இங்கு சித்தமும் (மனதும்) அதில் ஏறிய விஷயங்களின் பற்றும் ஒன்ருேடு ஒன்று இணைந்து விடுகிறது. அதனுல் மோக்ஷமடைவதற்கு இடையூறுகளாய் இருக்கும் அந்த குணங்களையும், சித்தத்தையும், தடுப்பதற்கு இம்மூன்றைக் காட்டிலும் வேருன நான்காவதாக இருக்கும் தங்களிடத்தில் செலுத்திய பக்தி ஒன்றே துணையாக இருக்கிறது என்று ஹம்ஸரூபமெடுத்து தாங்கள் கூறினீராமே.

## பகவான் உத்தவருக்கு செய்த உபதேசம்

सन्ति श्रेयांसि भूयांस्यपि रुचिभिदया कर्मिणां निर्मितानि
क्षुद्रानन्दाश्च सान्ता बहुविधगतयः कृष्ण तेभ्यो भवेयुः ।
त्वं चाचख्याथ सख्ये ननु महिततमां श्रेयसां भक्तिमेकां
त्वद्भक्त्यानन्दतुल्यः खलु विषयजुषां सम्मदः केन वा स्यात् ॥

ஸந்தி ச்ரேயாம்ஸி பூயாம்ஸ்யபி ருசிபிதயா கர்மிணாம் நிர்மிதாநி
க்ஷுத்ராநந்தாச்ச ஸாந்தா பஹுவிதகதய: க்ருஷ்ண தேப்யோ பவேயு: ।
த்வம் சாசக்யாத ஸக்யே நநு மஹிததமாம் ச்ரேயஸாம் பக்திமேகாம்
த்வத்பக்த்யா நந்ததுல்ய: கலு விஷயஜுஷாம் ஸம்மத: கேந வா ஸ்யாத் ॥

ஹே குருவாயூரப்பா, கர்மங்களை செய்வதில் அதிகாரிகளுக்கு அவரவர்களின் ருசிக்குத் தக்கவாறு சிரேயஸ்ஸையடைவதற்கு பல மார்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆயினும் அவைகள் ஸ்வல்ப சுகத்தை யளிப்பவைகளாகவும் முடிவு உள்ளதுகளாகவும் ஸ்வர்கம் முதலிய பலவற்றை பயனாக உடையதுகளாகவும் ஆகின்றன. ச்ரேயஸ் ஸாதனங்களுக்குள் மிக்க போற்றத் தகுந்ததும் ஒன்றானதும் (அழிவற்றதும்) ஆன பக்திமார்கமே சிறந்தது என ஸ்னேகிதரான உத்தவரின் பொருட்டு தாங்கள் கூறினீராமே. தங்களிடத்தில் செலுத்திய பக்தியால் உண்டாகும் ஆனந்தத்திற்கு ஸமமான சுகம், விஷயாதிகளில் ஈடுபட்டவர்களுக்கு வேறு எந்த ஸ்தானத்தால் அடையக்கூடும்?

## மோக்ஷ சுகத்திற்கும் மேலானது பக்தி

त्वद्भक्त्या तुष्टबुद्धेः सुखमिह चरतो विच्युताशस्य चाशाः
सर्वाः स्युः सौख्यमय्यः सलिलकुहरगस्येव तोयैकमय्यः ।
सोऽयं खल्विन्द्रलोकं कमलजभवनं योगसिद्धीश्च हृद्याः
नाकाङ्क्षत्येतदास्तां स्वयमनुपतिते मोक्षसौख्येऽप्यनीहः ॥4॥

*த்வத்பக்த்யா துஷ்டபுத்தே: ஸுகமிஹசரதோ விச்யுதாசஸ்ய சாசா:*
*ஸர்வா: ஸ்யு: ஸௌக்யமய்ய: ஸலிலகுஹரகஸ்யேவ தோயைகமய்ய: |*
*ஸோऽயம் கல்விந்த்ரலோகம் கமலஜபவநம் யோக ஸித்தீச்ச ஹ்ருத்யா:*
*நாகாங்க்ஷத்யேததாஸ்தாம் ஸ்வயமனுபதிதே மோக்ஷ ஸௌக்யேऽப்யநீஹ: ||*

ஹே குருவாயூரப்பா, தங்களிடத்திலே பக்தி கொண்டதால் சந்தோஷமடைந்தவன் இந்த லோகத்தில் எல்லா ஆசையையும் விட்டு சுகமாய் சஞ்சரிக்கிறான். எல்லா திசைகளும் அவனுக்கு ஸுகமளிப்பவைகளாகவே காணப்படுகின்றன! ஜலத்தில் மூழ்கிய குடத்திற்கு உள்ளும் புறமும் ஜலமயமாகவே இருப்பது போல் எங்கும் சந்தோஷ முள்ளவனாகவே இருக்கிறான். அவன் இந்திரலோகத்தையோ (ஸ்வர்கத்தையோ) பிரம்மாவின் ஸ்தானமான ஸத்ய லோகத்தையோ மனதைகவரும் யோகஸித்திகளையோ விரும்புவதில்லை. இது இவ்விதமிருக்கட்டும். தானாகவே மோக்ஷசுகம் கிடைத்தாலும் அதிலும் ஆசை கொள்வதில்லை.

## இந்திரியங்களை வசப்படுத்த வழி கூறுதல்

त्वद्भक्तो बाध्यमानोऽपि च विषयरसैरिन्द्रियाशान्तिहेतो-
र्भक्त्यैवाक्रम्यमाणैः पुनरपि खलु तैर्दुर्बलैर्नाभिजय्यः ।
सप्तार्चिर्दीपितार्चिर्दहति किल यथा भूरिदारुप्रपञ्चं
त्वद्भक्त्योघे तथैव प्रदहति दुरितं दुर्मदः क्वेन्द्रियाणाम् ॥5॥

த்வத்பக்தோ பாத்யமாநோऽபி ச விஷயரஸைரிந்த்ரியா
சாந்திஹேதோர்
பக்த்யைவாக்ரம்யமாணை: புநரபி கலு தைர் துர்
பலைர் நாபிஜய்ய: |
ஸப்தார்சிர் தீபிதார்சிர் தஹதி கில யதா பூரிதாரு
ப்ரபஞ்சம்,
த்வத்பக்த்யோகே ததைவ ப்ரதஹதி துரிதம் துர்மத:
க்வேந்த்ரியாணாம் ||

ஹே, குருவாயூரப்பா! தங்களுடைய பக்தன் கண் முதலிய இந்திரியங்கள் வசப்படாமல் இருப்பதைக் குறித்து விஷய அனுபவம் ஏற்பட்டு அதனால் துன்பமடைகிறான். ஆனாலும், பக்தியினால் தகையப்பட்டு துர்பலங்களான இந்திரியங்களால் மறுபடியும் இவனை ஜயிக்க முடிவதில்லை. ஜ்வாலை மிகுந்த அக்னியானது பல கட்டைகளுடைய குவியலையும் எவ்விதம் எறிக்கிறதோ அவ்விதம் தங்களிடத்தில் வைத்த பக்தி பெருக்கானது பாபமனைத்தையும் நாசம் செய்யும்பொழுது இந்திரியங்களுக்கு எங்கிருந்து கெட்ட கர்வம் உண்டாகும்.

## பக்தியாலேயே தத்வக்ஞானம்

चित्तार्द्रीभावमुच्चैर्वपुषि च पुलकं हर्षबाष्पं च हित्वा
चित्तं शुध्येत्कथं वा किमु बहुतपसा विद्यया वीतभक्तेः ।
त्वद्गाथास्वादसिद्धाञ्जनसततमरीमृज्यमानोऽयमात्मा
चक्षुर्वत्तत्त्वसूक्ष्मं भजति न तु तथाऽभ्यस्तया तर्ककोट्या ॥6॥

*சித்தார்த்ரீபாவமுச்சைர்வபுஷி ச புலகம் ஹர்ஷ*
*பாஷ்பம் ச ஹித்வா*
*சித்தம் சுத்யேத்கதம் வா கிமு பஹுதபஸா வித்யயா*
*வீதபக்தே: |*
*த்வத்காதாஸ்வாதஸித்தாஞ்ஜந ஸததமரீம்ருஜ்ய*
*மாேநாயமாத்மா,*
*சக்ஷுர்வத்தத்வ ஸூக்ஷ்மம் பஜதி ந து*
*ததாऽப்யஸ்தயா தர்ககோட்யா ||*

ஹே குருவாயூரப்பா! மனம் கனிந்திருப்பது, சரீரத்தில் நன்கு மயிர்சிலிற்பது, கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பெருகுவது இவைகளை விட்டு எப்படி சித்தத்தில் சுத்தி ஏற்படும் பக்தியற்றவனுக்கு வேறுபல தவங்களாலோ, க்ஞானத்தினுலோ ஒன்றும் பலனில்லை. தங்களுடைய சரித்திரங்களை கேட்டு அனுபவிப்பதாகிற ஸித்தாஞ்சனத்தால் (ஸித்தியின் பயனுள மை) அடிக்கடி சுத்தி செய்யப்படுகிறதான இந்த மனமானது ஸித்தாஞ்சனம் தடவிய கண் போல உண்மையான ஸூக்ஷ்மக்ஞானத்தை அடைகிறது. நன்கு அப்யஸிக்கப்பெற்ற கோடிக்கணக்கான யுக்திகளால் அவ்விதம் தத்வஞானத்தை யடைவதில்லை.

## தியான யோகம் செய்யவேண்டிய முறை

ध्यानं ते शीलयेयं समतनुसुखबद्धासनो नासिकाग्र-
न्यस्ताक्षः पूरकाद्यैर्जितपवनपथश्चित्तपद्मं त्ववाञ्चम् ।
ऊर्ध्वाग्रं भावयित्वा रविविधुशिखिनः संविचिन्त्योपरिष्टाव
तत्रस्थं भावये त्वां सजलजलधरश्यामलं कोमलाङ्गम् ॥ 7 ॥

த்யானம் தே சீலயேயம் ஸமதனுஸுகபத்தாஸநோ
நாஸிகாக்ர—
ந்யஸ்தாக்ஷ: பூரகாத்யைர்ஜிதபவன பதச்சித்தபத்மம்
த்வவாஞ்சம் |

ஊர்த்வாக்ரம் பாவயித்வா ரவிவிதுசிகிந: ஸம்விசிந்த்யோபரிஷ்டாத்
தத்ரஸ்தம் பாவயே த்வாம் ஸஜலஜலதரச்யாமலம் கோமலாங்கம் ||

ஹே குருவாயூரப்பா! தங்களை தியானம் செய்யும் முறையை அப்யஸிப்பேனாக. அதாவது சரீரம் வளையாமல் இருக்கும்படி நிமிர்ந்து பத்மாஸனம் முதலிய ஆஸனங்களால் அமர்ந்து தன் மூக்கின் நுனியை (இருபுருவங்களின் நடுப்பாகத்தை) பார்த்துக்கொண்டு பூரகம் முதலியவைகளால் வாயு மார்க்கங்களை ஜயித்து (சுத்தம் செய்து) கீழ் நோக்கியிருக்கும் ஹ்ருதய கமலத்தை மேல்நோக்கியிருப்பதாய் பாவித்து, அதன்மேல் சூர்ய மண்டலம் சந்திர மண்டலம், அக்னி மண்டலம் இவைகளை வரிசையாய் நினைத்து, கடைசியாய் தியானித்து அக்னி மண்டலத்தில் நீருண்ட மேகம்போல் சியாமள வர்ணமாயும், மனோஹரமான சரீரத்தையுடையவராயும் இருப்பவராய் தங்களை தியானம் செய்கிறேன்.

## தியானிக்க வேண்டிய ஸ்ரீ பகவத்ரூபம்

आनीलश्लक्ष्णकेशं ज्वलितमकरसत्कुण्डलं मन्दहास-
स्यन्दार्द्रं कौस्तुभश्रीपरिगतवनमालोरुहाराभिरामम् ।
श्रीवत्साङ्कं सुबाहुं मृदुलसदुदरं काञ्चनच्छायचेलं
चारुस्निग्धोरुमम्भोरुहललितपदं भावयेऽहं भवन्तम् ॥ 8 ॥

ஆநீலச்லக்ஷ்ணகேசம் ஜ்வலித மகரஸத் குண்டலம் மந்தஹாஸ—
ஸ்யந்தார்த்ரம் கௌஸ்துபஸ்ரீ பரிகதவனமாலோரு ஹாராபிராமம் |
ஸ்ரீவத்ஸாங்கம் ஸுபாஹும் ம்ருதுலஸதுதரம் காஞ்சனச்சாயசேலம்
சாருஸ்நிக்தோருமம்போருஹ லலிதபதம் பாவயேஹம் பவந்தம் ||

ஹே குருவாயூரப்பா, எங்கும் கருத்ததும் மிருதுவானது மான கேசங்களை உடையவரும் ஜ்வலிக்கின்ற மகரரூபமான சிறந்த இரு குண்டலங்களை உடையவரும், மந்தஹாஸத்தின் ரஸத்தால் கனிந்தவரும், கௌஸ்துபமென்ற மணியின் சோபையால் வ்யாப்தமான வனமாலை, பெரிய முத்து மாலைகள் இவைகளால் மனோஹரமாய் இருப்பவரும் ஸ்ரீவத்ஸம் என்ற மச்சமுள்ளவரும் அழகான கைகள் வாய்ந்தவரும் மிருதுவாய் விளங்கும் வயிறுடனும், ஸ்வர்ணம் போல் காந்தியுள்ள வஸ்திரம் தரித்தவரும் அழகானதும் பெருத்ததுமான இருதுடைகளையுடையவரும், தாமரை போன்ற லலிதமான பாதங்களோடு கூடினவருமான தங்களை நான் தியானம் செய்கிறேன்.

### தியான யோகத்தின் சிறந்த பயன்

सर्वाङ्गेष्वङ्ग रङ्गत्कुतुकमतिमुहुर्धारयन्नीश चित्तं
तत्राप्येकत्र युञ्जे वदनसरसिजे सुन्दरे मन्दहासे ।
तत्रालीनं तु चेतः परमसुखचिदद्वैतरूपे वितन्व-
न्नन्यन्नो चिन्तयेयं मुहुरिति समुपारूढयोगो भवेयम् ॥ 9 ॥

ஸர்வாங்கேஷ்வங்க ரங்கத்குதுகமதிமுஹுர்தாரயந் நீச சித்தம்
தத்ராப்யேகத்ர யுஞ்ஜே வதநஸரஸிஜே ஸுந்தரே மந்தஹாஸே |
தத்ராலீநம் து சேத: பரமஸுகசிதத்வைத ரூபே விதந்வ—
ந்நந்யந்நோ சிந்தயேயம் முஹுரிதி ஸமுபாரூட யோகோ பவேயம் ||

ஈசனை ஹே குருவாயூரப்பா, மிகுந்த சந்தோஷமடைந்த என்மனதை தங்களுடைய எல்லா அங்கங்களிலும் அடிக்கடி நிலை நிறுத்துகிறேன். அவைகளிலும் ஒன்றான

தும் மந்தஹாஸத்துடன் கூடியதும் அழகானதும் தாமரை போன்றதுமான முகத்தில் நன்கு லயிக்கச் செய்வேன். அவ்விதம் லயித்த மனதை பரம ஆனந்தமயமாயும் சித் ஸ்வரூபமாயும் உள்ள அத்வைத ரூபத்தில் (மோக்ஷசுகத்தில்) வேறு ஒன்றையும் (நான் தியானம் செய்கிறேன் என்பதையும்) நினைக்காது இருப்பேன். இவ்விதம் அடிக்கடி செய்து தியான யோகத்தின் மேல் ஸ்தானத்தை ஏறினவனாய் இருப்பேனாக.

## தியான யோகத்தில் ஈடுபடுபவனை அணிமாதி ஸித்திகள் வந்தடைதல்

इत्थं त्वद्ध्यानयोगे सति पुनरणिमाद्यष्टसंसिद्धयस्ता:
दूरश्रुत्यादयोऽपि ह्यहमहमिकया संपतेयुर्मुरारे ।
त्वत्संप्राप्तौ विलम्बावहमखिलमिदं नाद्रिये कामयेऽहं
त्वामेवानन्दपूर्णं पवनपुरपते पाहि मां सर्वतापात् ॥ 10 ॥

இத்தம் த்வத்யானயோகே ஸதி புனரணிமாத்யஷ்ட ஸம்ஸித்தயஸ்தா:
தூரச்ருத்யாதயோऽபி ஹ்யஹமஹமிகயா ஸம்பதேயுர் முராரே ।
த்வத்ஸம்ப்ராப்தௌ விலம்பாவஹமகிலமிதம் நாத்ரியே காமயேऽஹம்
த்வாமேவானந்தபூர்ணம் பவனபுரபதே பாஹி மாம் ஸர்வதாபாத் ॥

முரனைக் கொன்ற ஹே கிருஷ்ணா! தங்களை தியானிப்பதான யோகத்தை அப்யஸிக்கும் பொழுது, அணிமா முதலிய எட்டு பெரிய ஸித்திகளும், வெகுதூரத்தில் பேசுவதைக் கேட்கும் சக்தி, வெகுதூரத்தில் நடப்பதைப் பார்

கும் சக்தி முதலிய ஸித்திகளும் நான் முந்தி, நான் முந்தி என்று என்னிடம் வந்தடையும். தங்களையடைவதில் இடையூறு விளைவிக்கும் அவையாவையும் நான் ஆதரிக்க மாட்டேன். நான் ஆனந்த பூர்ணனை தங்களையே விரும்புகிறேன். ஹே குருவாயூரப்பா, எல்லா தாபங்களிலிருந்தும் என்னைக் காற்க வேண்டும்.

என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ அப்பனின் மஹிமை

சென்னையில் பிரபல உத்யோகத்தில் உள்ள ஒருவர் சிறந்த பக்தியுள்ளவர். அவர் முதலியார் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் குலவழக்கப்படி தினந்தோறும் கோவிலுக்குச் சென்று ஸ்வாமி தர்சனம் செய்து வருவார். எங்கு நல்ல காலக்ஷேபங்கள் நடந்தாலும் அதை ச்ரவணம் செய்வார். ஸ்ரீ நாராயணீயத்தை தினந்தோறும் பாராயணம் செய்து வருவார். அவருக்கோ அவர் குடும்பத்துக்கோ ஏதேனும் கஷ்டம் வந்தால் ஸ்ரீ குருவாயூரப்பனை ப்ரார்த்தனை செய்து கொள்வார். அவ்விதம் ப்ரார்த்தனை செய்த உடனேயே அக்கஷ்டம் விலகிவிடுமாம். இவ்விதம் நான் பலமுறை கஷ்டம் வந்த ஸமயத்தில் ஸ்ரீ அப்பனை பிரார்த்தனை செய்தும் ஸ்ரீநாராயணீயத்தையும் படித்தேன். உடனே அக்கஷ்டங்கள் நீங்கின என்றும் பலமுறை என்னிடம் நேரிலும் சொல்லியிருக்கிறார். ஸ்ரீ அப்பனின் அருளாலும் ஸ்ரீ நாராயணீயத்தை பாராயணம் செய்ததாலும் நான் பெரிய லாபத்தை அடைந்தேன் என்றும் ஸமீபத்தில் ஒரு கடிதம் எழுதினார். இவ்விதம் ஸ்ரீ அப்பனின் பெருமையை அடிக்கடி நாம் நேராகக் காண்கிறோம்.

## 96-வது தசகம்

### ஸ்ரீ பகவானின் விபூதியைக் கூறுதல்

त्वं हि ब्रह्मैव साक्षात्परमुरुमहिमन्नक्षराणामकार-
स्तारो मन्त्रेषु राज्ञां मनुरसि मुनिषु त्वं भृगुर्नारदोऽपि ।
प्रह्लादो दानवानां पशुषु च सुरभिः पक्षिणां वैनतेयो
नागानामस्यनन्तः सुरसरिदपि च स्रोतसां विश्वमूर्ते ॥ 1 ॥

*த்வம் ஹி ப்ரஹ்மைவ ஸாக்ஷாத்பரமுருமஹிமந்*
*நக்ஷராணாமகார—*
*ஸ்தாரோ மந்த்ரேஷு ராக்ஞாம் மனுரஸி முனிஷு*
*த்வம் ப்ருகுர் நாரதோऽபி ।*
*ப்ரஹ்லாதோ தாநவாநாம் பசுஷு ச ஸுரபி:*
*பக்ஷிணாம் வைநதேயோ*
*நாகாநாமஸ்யனந்த: ஸுரஸரிதபி ச ஸ்ரோதஸாம்*
*விச்வமூர்த்தே ॥*

மிக்க மஹிமை வாய்ந்தவரும் விச்வ மூர்த்தியுமான ஹே குருவாயூரப்பா, தாங்களே ஸாக்ஷாத்தான பரப்ரும்மமாக இருக்கிறீர். அக்ஷரங்களுக்குள் (எழுத்துக்களுள்) அகாரமாயும், மந்திரங்களுக்குள் ப்ரணவமாயும், அரசர்களுக்குள் மனுவாகவும், ப்ரம்ம ரிஷிகளுக்குள் ப்ருகுவாகவும், தேவ ரிஷிகளுக்குள் நாரதராகவும் அசுரர்களுக்குள் ப்ரஹ்லாதனுகவும் பசுக்களுள் காமதேனுவாயும், பறவைகளுக்குள் கருடனுகவும், பாம்புகளுக்குள் அனந்தனுகவும், நதிகளுள் ஆகாச கங்கையாகவும் இருக்கிறீராமே.

## மேலும் விபூதியைக் கூறுதல்

ब्रह्मण्यानां बलिस्त्वं क्रतुषु च जपयज्ञोऽसि वीरेषु पार्थो
भक्तानामुद्धवस्त्वं बलमसि बलिनां धाम तेजस्विनां त्वम् ।
नास्त्यन्तस्त्वद्विभूतेर्विकसदतिशयं वस्तु सर्वं त्वमेव
त्वं जीवस्त्वं प्रधानं यदिह भवदृते तन्न किञ्चित्प्रपञ्चे ॥ 2 ॥

ப்ரம்மண்யாநும் பலிஸ்த்வம் க்ரதுஷு ச ஜபயக்
ஞோऽஸி வீரேஷு பார்த்தோ
பக்தாநாமுத்தவஸ்த்வம் பலமஸி பலிநாம் தாம
தேஜஸ்விநாம் த்வம் |
நாஸ்த்யந்தஸ்த்வத்விபூதேர்விகஸததிசயம் வஸ்து
ஸர்வம் த்வமேவ
த்வம் ஜீவஸ்த்வம் ப்ரதானம் யதிஹ பவத்ருதே தந்ந
கிஞ்சித்ப்ரபஞ்சே ||

ஹே குருவாயூரப்பா, பிராம்மணனிடத்தில் பக்தி கொண்டவர்களுக்குள் மஹாபலியாயும் யக்ஞங்களுள் ஜபயக்ஞமாகவும் (ஜபயக்ஞம் என்பது ஸஹஸ்ரநாம பாராயணம் முதலியது ஆகும்) வீரர்களுக்குள் அர்ஜுனனுகவும் பக்தர்களுக்குள் உத்தவராகவும் பலிஷ்டர்களுக்கு பலமாயும் தேஜஸ் உள்ளவர்களுக்கு தேஜஸ்ஸாகவும் இருக்கிறீர். தங்களுடைய மஹிமைக்கு முடிவே கிடையாது. உலகில் ஆச்சரியமாய் விளங்கும் எல்லா பொருளும் தாங்களே யாகும் தாங்களே ஜீவன், தாங்களே ப்ரக்ருதி, இப்பிரபஞ்சத்தில் தங்களைத் தவிர வேறு பொருள் இருக்குமோ வெனில் அவை ஒன்றும் கிடையாது.

## ப்ரம்மமே நான் என்று அறிவதைக் கூறுதல்

धर्मं वर्णाश्रमाणां श्रुतिपथविहितं त्वत्परत्वेन भक्त्या
कुर्वन्तोऽन्तर्विरागे विकसति शनकैः सन्त्यजन्तो लभन्ते ।
सत्तास्फूर्तिप्रियत्वात्मकमखिलपदार्थेषु भिन्नेष्वभिन्नं
निर्मूलं विश्वमूलं परममहमिति त्वद्विबोधं विशुद्धम् ॥ 3 ॥

*தர்மம் வர்ணாச்ரமாணாம் ச்ருதிபதவிஹிதம் த்வத்பரத்வேந பக்த்யா*
*குர்வந்தோऽந்தர்விராகே விகஸதி சநகை: ஸத்யஜந்தோ லபந்தே |*
*ஸத்தாஸ்பூர்த்திப்ரியத்வாத்மகமகிலபதார்த்தேஷு பிந்நேஷ்வபின்னம்*
*நிர்மூலம் விச்வமூலம் பரமமஹமிதி த்வத்விபோதம் விசுத்தம் ||*

ஹே குருவாயூரப்பா, ப்ராம்மணன் முதலிய வர்ணங்களுக்கும் ப்ரம்மசாரி முதலிய ஆச்ரமங்களுக்கும் வேதமார்கங்களில் கூறப்பட்ட தர்மத்தை பக்தியோடு தங்களிடம் அர்ப்பணம் செய்யும் மனமாய் அவர்கள் செய்கிறார்கள். அவர்களுடைய மனதில் வைராக்கியமனது மெள்ள மெள்ள பிரகாசிக்கத் துடங்கியதும் அக்கர்மங்களை விடுகிறார்கள். (முறைப்படி கர்மங்களை விட்டு ஸன்யாஸம் கொள்கிறார்கள் எனக்கருத்து) பிறகு ஸச்சிதாநந்த ஸ்வரூபமாயும் தனித் தனியாய் உள்ள எல்லா பதார்த்தங்களிலும் அபின்னமாயும் (ஒன்றாய் காணப்படுகிறதாயும்) தனக்கு ஒரு காரணமும் இல்லாமல் இருப்பது எல்லா உலகிற்கும் பிறப்பு முதலியவற்றிற்குக் காரணமாய் இருப்பது மிக்க சுத்தமாயும் இருக்கிறதுமான 'நான்' பரமாத்மா என்ற தங்கள் ஸ்வரூபக் ஞானத்தை அடைகிறார்கள்.

## அதிகாரிகளுக்குத் தக்கவாறு மார்கம்

ज्ञानं कर्मापि भक्तिस्त्रितयमिह भवत्प्रापकं तत्र ताव-

न्निर्विण्णानामशेषे विषय इह भवेद् ज्ञानयोगेऽधिकारः ।

सक्तानां कर्मयोगस्त्वयि हि विनिहितो ये तु नात्यन्तसक्ताः

नाप्यत्यन्तं विरक्तास्त्वयि च धृतरसा भक्तियोगो ह्यमीषाम् ॥

க்ஞானம் கர்மாபி பக்திஸ்த்ரிதயமிஹ பவத்ப்ராபகம் தத்ர தாவ—

ந்நிர்விண்ணாநாமசேஷே விஷய இஹ பவேத் க்ஞான யோகேऽதிகார: ।

ஸக்தாநாம் கர்மயோகஸ்த்வயி ஹி விநிஹிதோ யே து நாத்யந்த ஸக்தா:

நாப்யத்யந்தம் விரக்தாஸ்த்வயி ச த்ருதரஸா பக்தி யோகோ ஹ்யமீஷாம் ॥

ஹே குருவாயூரப்பா, இவ்வுலகில் க்ஞானம், கர்மா, பக்தி என்ற இம்மூன்றும் தங்களையடைய வேண்டிய மார்கங்களே யாகும் இந்த உலகில் எல்லா விஷயங்களிலும் ஆசையற்றிருப்பவர்களுக்கு க்ஞான யோகமே தகுந்த முறையாக கூறப்பட்டுள்ளது. விஷயத்தில் பற்றுள்ளவர்களுக்கு தங்களையடைய வேண்டி கர்மயோகமே தகுந்ததென சொல்லப்பட்டது. எவர்கள் வீடு முதலியவற்றில் ரொம்பவும் பற்றுதல் இல்லாதவர்களாகவும் ரொம்பவும் பற்றற்றவர்களாக ஆகாதவர்களாகவும் இருந்து கொண்டு தங்கள் சரித்திரம் முதலியவற்றுல் சிறிது ஆசை கொண்டவர்களாக இருக்கின்றனரோ, அப்படிப்பட்டவர்களுக்கு பக்தியோகமே சிறந்த மார்க்கமாமே.

## ஸம்ஸாரத்திலிருந்து கரை ஏற்றும்படி வேண்டுதல்

ज्ञानं त्वद्भक्ततां वा लघु सुकृतवशान्मर्त्यलोके लभन्ते
तस्मात्तत्रैव जन्म स्पृहयति भगवन्नाकगो नारको वा ।
आविष्टं मां तु दैवाद्भवजलनिधिपोतायिते मर्त्यदेहे
त्वं कृत्वा कर्णधारं गुरुमनुगुणवातायितस्तारयेथाः ॥ 5 ॥

க்ஞானம் த்வத்பக்ததாம் வா லகு ஸுக்ருதவசாந்மர்த்ய லோகே லபந்தே
தஸ்மாத்தத்ரைவ ஜன்ம ஸ்ப்ருஹயதி பகவந்நாககோ நாரகோ வா |
ஆவிஷ்டம் மாம் து தைவாத்பவஜலநிதிபோதாயிதே மர்த்ய தேஹே
த்வம் க்ருத்வா கர்ணதாரம் குருமநு-குணவாதாயிதஸ்தாரயேதா: ||

பகவனை ஹே குருவாயூரப்பா, இம்மனித உலகத்தில் புண்யவசத்தால் க்ஞானத்தையோ தங்களிடத்தில் பக்தியையோ அடைகிருர்கள். ஆகையால் ஸ்வர்க்கத்தில் இருப்பவனும் நரகத்தில் இருப்பவனும்கூட இங்கேயே மனித ஜன்மாவை விரும்புகிருர்கள். இந்த ஸம்ஸார ஸமுத்ரத்தை தாண்டுவதற்கு மனுஷ்ய சரீரமானது தெப்பக் கட்டையாய் உள்ளது. இந்த சரீரத்தில் தெய்வவசமாய் ப்ரவேசித்த என்னை கறையேத்துவதற்கு ஸத்குருவாகிற ஓடக்காரனை அளித்து தாங்கள் அனுகூலமான காற்ருய் இருந்து கரையேற்ற வேண்டுகிறேன்.

## க்ஞான மார்கத்தைக் காட்டிலும் பக்திமார்கம் சிறந்தது

अव्यक्तं मार्गयन्तः श्रुतिभिरपि नयैः केवलज्ञानलुब्धाः
क्लिश्यन्तेऽतीव सिद्धिं बहुतरजनुषामन्त एवाप्नुवन्ति ।
दूरस्थः कर्मयोगोऽपि च परमफले नन्वयं भक्तियोग-
स्त्वामूलादेव हृद्यस्त्वरितमयि भगवन्प्रापको वर्धतां मे ॥ 6 ॥

அவ்யக்தம் மார்கயந்த : ச்ருதிபிரபி நயைஃ
கேவலக்ஞானலுப்தா
க்லிச்சயந்தேऽதீவ ஸித்திம் பஹுதரஜநுஷாமந்த
ஏவாப்னுவந்தி |
தூரஸ்த : கர்மயோகோऽபி ச பரமபலே நந்வயம்
பக்தியோக-
ஸ்த்வாமூலாதேவ ஹ்ருத்யஸ்த்வரிதமயி பகவந்
ப்ராபகோ வர்த்ததாம் மே ||

ஹே குருவாயூரப்பா க்ஞானத்தை மட்டும் விரும்புகிற வர்கள் உபனிஷத்துகளாலும், மீமாம்ஸையில் கூறப்பட்ட யுக்திகளாலும் இந்திரியங்களுக்கு விஷயமாகாத ப்ரும மத்தை தேடுகிறவர்களாய் கஷ்டமடைகிறார்கள். இவ் விதம் பல பிறவிகளுக்கு பிறகு கடைசியில் ஸித்தியை (மோக்ஷத்தை) யடைகிறார்கள். கர்மயோகமும் சிறந்த பயனை மோக்ஷத்திற்கு வெகு தூரத்தில் இருக்கிறது. இந்த பக்தியோவெனில் ஆரம்பம் முதல் மனதைக் கவர்கிறதாய் சீக்கிரம் தங்களை அடைவிக்கிறது. அந்த பக்தியே எனக்கு நன்கு வளரட்டும்.

## பக்தி செய்கிறவனின் கையில் மோக்ஷம்

ज्ञानायैवातियत्नं मुनिरपवदते ब्रह्मतत्त्वं तु शृण्वन्
गाढं त्वत्पादभक्तिं शरणमयति यस्तस्य मुक्तिः कराग्रे ।
त्वद्ध्यानेऽपीह तुल्या पुनरसुकरता चित्तचाञ्चल्यहेतो-
रभ्यासादाशु शक्यं तदपि वशयितुं त्वत्कृपाचारुताभ्याम् ॥7॥

க்ஞானாயைவாதியத்னம் முனிரபவததே
ப்ரம்மதத்வம் து ச்ருண்வன்
காடம் த்வத்பாதபக்திம் சரணமயதி யஸ்தஸ்ய முக்தி :
கராக்ரே |

த்வத்யானே஽பீஹ துல்யா புநரஸுகரதா சித்த
சாஞ்சல்யஹேதோ

ரப்யாஸாதாசு சக்யம் ததபி வசயிதும்
த்வத்க்ருபாசாருதாப்யாம் ||

ஹே குருவாயூரப்பா, க்ஞானத்திற்காக மிக்க முயற்சி செய்வதை வியாஸமுனிவர் (புராணங்களில்) தடுத்திருக்கிறார். எவன் ப்ரம்மதத்வத்தை கேட்டு த்ருடமாய் இருக்கும்படி தங்கள் திருவடிகளில் பக்தியை சரணமாக அடைகிறானோ அவனுடைய கையின் நுனியிலேயே மோக்ஷம் இருக்கிறது. க்ஞான யோகத்தில் போல் தியான யோகத்திலும் மனது சஞ்சலமாயிருப்பது காரணமாக கஷ்டம் ஸமமாய் இருக்கிறது. ஆயினும் அப்யாஸத்தினாலும் ஹே கிருஷ்ணா தங்கள் கருணையாலும், அழகினாலும் சீக்கிரமே த்யானத்தை ஸ்வாதீனமாய் செய்வதற்கு தகுதியுள்ளதேயாகும்.

### பக்தியை வளர்ப்பதற்கு வழி கூறுதல்

निर्विण्णः कर्ममार्गे खलु विषमतमे त्वत्कथादौ च गाढं
जातश्रद्धोऽपि कामानयि भुवनपते नैव शक्नोमि हातुम् ।
तद् भूयोऽपि निश्चयेन त्वयि निहितमना दोषबुद्ध्या भजंस्तान्
पुष्णीयां भक्तिमेव त्वयि हृदयगते मङ्क्षु नङ्क्ष्यन्ति सङ्गाः ॥४॥

நிர்விண்ண : கர்மமார்க்கே கலு விஷமதமே
த்வத்கதாதௌ ச காடம்

ஜாதச்ரத்தோ஽பி காமாநயி புவனபதே நைவ
சக்னோமி ஹாதும் |

தத் பூயோ஽பி நிச்சயேந த்வயி நிஹிதமநா
தோஷபுத்யா பஜம்ஸ்தான்

புஷ்ணீயாம் பக்திமேவ த்வயி ஹ்ருதயகதே
மங்க்ஷு நங்க்ஷ்யந்தி ஸங்கா : ||

லோகநாதனுன ஹே குருவாயூரப்பா, ரொம்பவும் கஷ்டம் நிறைந்த கர்மமார்கத்தில் ஆசையற்றவனும் இருக்கிறேன். தங்கள் கதை முதலியவற்றில் சிரத்தை கொண்டிருந்தும் நான் விருப்பங்களை வேண்டாமல் இருக்க முடியவில்லை. அதனுல் மீண்டும் தங்களிடத்திலேயே நிச்சயமாய் மனம் செலுத்தியவனும் அந்த விருப்பங்களை தோஷமுள்ளதாக இருப்பதாகவே கருதி யனுபவிப்பவனும் தங்களிடத்திலுள்ள பக்தியையே வளர்க்க வேண்டும். தாங்கள் என் ஹ்ருதயத்திற்குள் வந்த உடனேயே துஷ்ட ஸங்கங்கள் (அந்த விருப்பங்களும்) நாசமடைகின்றன.

### பிக்ஷுகீதம்

कश्चित् क्लेशार्जितार्थक्षयविमलमतिर्नुद्यमानो जनौघैः
प्रागेवं प्राह विप्रो न खलु मम जनः कालकर्मग्रहा वा ।
चेतो मे दुःखहेतुस्तदिह गुणगणं भावयत् सर्वकारी-
त्युक्त्वा शान्तो गतस्त्वां मम च कुरु विभो तादृशीं चित्तशान्तिम् ॥

கச்சித் க்லேசார்ஜிதார்தக்ஷயவிமலமதிர் நுத்யமானோ ஜநௌகை:
ப்ராகேவம் ப்ராஹ விப்ரோ ந கலு மம ஜந: காலகர்மக்ரஹா வா |
சேதோ மே து:கஹேதுஸ்ததிஹ குணகணம் பாவயத் ஸர்வகாரீ—
த்யுக்த்வா சாந்தோ கதஸ்த்வாம் மம ச குரு விபோ தாத்ருசீம் சித்தசாந்திம் ||

ஹே குருவாயூரப்பா, முன்பு அவந்தி தேசத்தில் ஒரு பிராமணன் மிக்க கஷ்டத்துடன் பொருள்களை தர்மமின்றி சம்பாதித்தான். நாளடைவில் அப்பொருள் முழுவதையும் திருடர்கள் முதலியவர்கள் அபகரித்து விட்டனர். அதிலிருந்து அவன் மனம் ஒன்றிலும் பற்று இல்லாமல்

துறவியாக ஆனான். இவனை கபடமான ஸன்யாஸி என்று ஜனங்கள் துன்புறுத்தினார்கள். அப்பொழுது அந்த பிராமணன் இவர்கள் என்னை துன்புறுத்துவதற்குக் காரணம் இந்த ஜனங்களோ, காலமோ, கர்மங்களோ, நவக்ரஹங்களோ அல்ல. என் மனதே அவ்வளவு துக்கத்திற்கும் காரணம். ஏனெனில் இந்த ஆத்மாவினிடத்தில் விஷய கூட்டங்கள் இருப்பதாய் ஆரோபணம் செய்து இந்த மனது எல்லாவற்றையும் செய்கிறது என்று கூறிக் கொண்டே சாந்தியை (மனக்களிப்பை) யடைந்தான். பிறகு தங்களையும் அடைந்தான். ஹே ப்ரபோ அப்பேர்கொத்த மனச்சாந்தியை எனக்கு அளிக்க வேண்டும்.

## புரூரவஸ்ஸின் வைராக்யமும் நம்பூதிரி வேண்டுவதும்

ऐलः प्रागुर्वशीं प्रत्यतिविवशमनाः सेवमानश्चिरं तां
गाढं निर्विद्य भूयो युवतिसुखमिदं क्षुद्रमेवेति गायन् ।
त्वद्भक्तिं प्राप्य पूर्णः सुखतरमचरत्तद्वदुद्धूय सङ्गं
भक्तोत्तंसं क्रिया मां पवनपुरपते हन्त मे रुन्धि रोगान् ॥10॥

ஐல: ப்ராகுர்வசீம் ப்ரத்யதி விவசமநா : ஸேவமாந
ச்சிரம் தாம்
காடம் நிர்வித்ய பூயோ யுவதிஸுகமிதம் க்ஷுத்ரமே-
வேதி காயன் |
த்வத்பக்திம் ப்ராப்ய பூர்ண : ஸுகதிரமசரத்தத்வதுத்
தூய ஸங்கம்
பக்தோத்தம்ஸம் க்ரியா மாம் பவநபுரபதே ஹந்த
மே ருந்தி ரோகான் ||

முன்பு புரூரவஸ் என்ற அரசன் ஊர்வசி என்ற தேவப் பெண்ணைக் குறித்து மிக்க ஆசை கொண்டவனாய் அவளோடு வெகு நாள் வாழ்ந்து வந்தான். ப்ரதிக்ஞையை

மீறியதால் பிரிவை அடைந்த அவன் யக்ஞம் முதலியதைச் செய்து மீண்டும் அந்த ஊர்வசியை ஸ்வர்க்கத்தில் அடைந்தான். பின்பு சிறந்த வைராக்யம் கொண்டு இந்த ஸ்திரீ சுகமானது மிக்க அல்ப சுகம் என்று பாடிக்கொண்டே தங்களிடத்தில் பக்தியை அடைந்து நிறைந்தவனாய் மிக்க சந்தோஷத்துடன் எங்கும் சஞ்சரித்தான்.

ஹே குருவாயூரப்பா, அவ்விதம் விஷயங்களில் உள்ள பற்றுதலை போக்கி என்னை பக்தர்களுக்குள் சிறந்தவனாய் செய்ய வேண்டும். கஷ்டம்! என் ரோகங்களையும் போக்க வேண்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ குருவாயூரப்பனின் மஹிமை

யோக்கியனான *B. S.* நாகராஜன் என்ற பையன் பிறருடைய ஓர் சிறந்த சாமானை ஒருவரிடத்தில் சொந்தக்காரர் சொன்னதின்பேரில் கொடுத்துவந்தான். சில வாரம் கழித்து போய் திருப்பி அந்த சாமானை கேட்டதற்கு துணிச்சலாய் என்னிடம் கொடுக்கவில்லை என்று சொல்லிவிட்டார். மறு தினமும் போய் கேட்டதற்கு அதே பதில்தான் சொன்னார். சாமானின் சொந்தகாரர், நாகராஜனை இம்மாதிரி செய்து விட்டாயே என்று வருத்தப்பட்டார். இதை கேட்டு வருந்திய நாகராஜனை அவனுடைய வயதான பாட்டி ஸ்ரீ மீனாக்ஷி அம்மாள், ஸ்ரீ குருவாயூரப்பனை பிரார்த்தித்துக்கொண்டு நமஸ்காரம் செய்துவிட்டு மறுபடியும் போய் கேள். நிச்சயம் கிடைத்துவிடும் என்று சொன்னாள். அதே போல் நமஸ்காரம் செய்துவிட்டு போனான். இவன் போன சமயம் அந்த சாமான் எதிரில் வைக்கப்பட்டிருந்தது. இதோ இருக்கிறதே என்று கேட்டதற்கு அது தங்களது இல்லை என்று சொன்னார். பெயர் இருக்கிறதே என்று கேட்டதற்கு திடுக்கிட்டு பயந்து சாமானை கையில் கொடுத்து மன்னிக்கும்படி வேண்டினார்.

இது அப்பனின் அருளால்தான் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அதனால் ஓ ஆஸ்திகர்களே! அப்பனை வழிபடுங்கள். ஸ்ரீ நாராயணீயத்தை பக்தியுடன் படியுங்கள்.

—o—

97-வது தசகம்

## முக்குணமற்ற நிலையை நம்பூதிரி வேண்டுதல்

त्रैगुण्याद्भिन्नरूपं भवति हि भुवने हीनमध्योत्तमं यद्
ज्ञानं श्रद्धा च कर्ता वसतिरपि च सुखं कर्म चाहारभेदाः ।
त्वत्क्षेत्रत्वन्निषेवादि तु यदिह पुनस्त्वत्परं तत्तु सर्वं
प्राहुर्नैर्गुण्यनिष्ठं तदनुभजनतो मङ्क्षु सिद्धो भवेयम् ॥ १ ॥

த்ரைகுண்யாத் பின்ன ரூபம் பவதி ஹி புவனே
ஹீநமத்யோத்தமம் யத்
க்ஞானம் ச்ரத்தா ச கர்தா வஸதிரபி ச ஸுகம் கர்ம
சாஹாரபேதா: |
த்வத்க்ஷேத்ரத்வந்நிஷேவாதி து யதிஹ புநஸ்த்வத்
பரம் தத்து ஸர்வம்
ப்ராஹுர் நைர்குண்ய நிஷ்டம் ததனு பஜனதோ
மங்க்ஷு ஸித்தோ பவேயம் ||

ஹே குருவாயூரப்பா, இவ்வுலகில் புலப்படும் யாதொரு வஸ்து உண்டோ அவையாவும் மூன்று குணங்களால் உண்டு பண்ணப்பட்டதால் வேற்றுமை உள்ளதாகவும் அதனால் உத்தமமாகவும், நடுத்தரமாயும், அதமமாயும் காணப்படுகிறது. அவைகளில் ஆத்மா ஒன்றென்ற க்ஞான மானது ஸத்வகுணத்தாலும் வேறுபட்டவன் என்ற க்ஞான மானது ரஜோகுணத்தினலும் குழைந்தைகளின் அறிவுக் கொப்பான க்ஞானம் தமோ குணத்தினலும் ஏற்படு

கிறது. ஆத்மாவினிடத்தில் உள்ள நம்பிக்கை (சிரத்தை) ஸத்வகுணத்தாலும், தர்மத்தில் வரும் நம்பிக்கை ரஜோ குணத்தாலும், அதர்மத்தில் ஏற்படும் நம்பிக்கையானது தமோ குணத்தாலும் உண்டாகிறது. கர்த்தாவும் ஸத்வ குணத்தால் வைராக்ய முள்ளவனாகவும், ரஜோகுணத்தால் விஷயப்பற்றுள்ளவனாகவும் தமோகுணத்தால் அக்ஞானி யாகவும் ஆகிறான். இருப்பிடமும், வனத்தில் வஸிப்பதின் ருசி ஸத்வகுணத்தாலும், நகரம், கிராமம் இவற்றில் வஸிப்ப தின் ருசி ரஜோகுணத்தாலும், சூது, மத்யம் முதலியவை யிருக்குமிடத்தில் வஸிப்பதின் ருசி தமோ குணத்தாலும் ஏற்படுகிறது. ஸுகத்தின் அனுபவமும் ஆத்மானுபவத் தால் ஏற்படும் சுகமானது ஸத்வகுணத்தாலும், விஷயானு பவத்தால் ஏற்படும் ஸுகமானது ரஜோ குணத்தாலும் தூக்கம் முதலியவற்றால் ஏற்படும் ஸுகமானது தமோ குணத்தாலும் ஏற்படுகிறது.

செய்கையும் (கர்மாவும்) ஈச்வரார்பணத்திற்காக செய் யும் கர்மம் ஸத்வகுணத்தாலும், காம்யமானால் ரஜோகுணத் தாலும் செய்யக் கூடாத கர்மத்தைச் செய்வது தமோகுணத் தாலும் ஏற்படுகிறது. ஆஹார பேதமும், சுத்தமான அன்னத்தை உட்கொள்வது ஸத்வகுணத்தாலும், இந்திரி யத்திருப்திக்காக உட்கொள்ளுதல் ரஜோகுணத்தாலும் அசுத்தமான (பழையதான) அன்னம் முதலியவற்றை உட் கொள்வது தமோகுணத்தாலும் ஏற்படுகிறது. இவ்வுல கிலோவெனில் *நிஷ்காமமாய் தங்கள் கோவில் முதலிய வற்றிற்கு செய்வது ஸ்ரீ குருவாயூரப்பனை தங்களை ஸேவிப் பது முதலியது முக்குணமற்றதாக முனிவர்கள் கூறுகின்ற னர். அம்மாதிரி முக்குணங்களால் உண்டு பண்ணப் படாத தங்கள் ஸேவை முதலியவற்றை நான் அனுஷ்டித்து ஜீவன் முக்தனாக ஆகவேண்டும் என வேண்ட ஸ்ரீ அப்ப னும் அப்படியே தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

## எங்கும் ஸ்ரீ பகவானை உணருவது

त्वय्येव न्यस्तचित्तः सुखमयि विचरन् सर्वचेष्टास्त्वदर्थं
त्वद्भक्तैः सेव्यमानानपि चरितचरानाश्रयन् पुण्यदेशान् ।
दस्यौ विप्रे मृगादिष्वपि च सममतिर्मुच्यमानावमान-
स्पर्धासूयादिदोषः सततमखिलभूतेषु संपूजये त्वाम् ॥ 2 ॥

த்வய்யேவ ந்யஸ்தசித்த : ஸுகமயி விசரன் ஸர்வ சேஷ்டாஸ்த்வதர்தம்
த்வத்பக்தை : ஸேவ்யமாநாநபி சரிதசரா நாச்ரயன் புண்யதேசான் ।
தஸ்யௌ விப்ரே ம்ருகாதிஷ்வபி ச ஸமமதிர்முச்யமாநாவமான—
ஸ்பர்தாஸூயாதி தோஷ : ஸததமகிலபூதேஷு ஸம் பூஜயே த்வாம் ॥

ஹே குருவாயூரப்பா, தங்களிடமே மனம் செலுத்தியவனாய். எல்லா செய்கைகளையும் தங்களுக்கே அர்ப்பணம் செய்து சுகமாய் சஞ்சரித்துக் கொண்டும் தங்கள் பக்தர்கள் முன்பு சென்ற இடங்கள், இப்பொழுது செல்லும் இடங்கள் முதலிய புண்ய தேசங்களுக்கு சென்றும் திருடனிடத்திலும் பிராமணனிடத்திலும் மிருகம் பக்ஷி, முதலியதுகளினிடத்திலும் பேதம் காட்டாது வாழ்வேன். அவமானம், துவேஷம் அஸூயை முதலிய தோஷங்களை விடுகிறவனாய் எப்பொழுதும் எல்லா ஜீவன்களிடத்திலும் தங்களையே (நினைத்து) பூஜிக்கிறேன்.

## பாகவத தர்மத்தை வேண்டுதல்

त्वद्भावो यावदेषु स्फुरति न विशदं तावदेवं ह्युपास्तिं
कुर्वन्नैकात्म्यबोधे झटिति विकसति त्वन्मयोऽहं चरेयम् ।
त्वद्धर्मस्यास्य तावत् किमपि न भगवन् प्रस्तुतस्य प्रणाश-
स्तस्मात्सर्वात्मनैव प्रदिश मम विभो भक्तिमार्गं मनोज्ञम् ॥3॥

த்வத்பாவோ யாவதேஷு ஸ்புரதி ந விசதம் தாவதேவம் ஹ்யுபாஸ்திம்
குர்வந்நைகாத்ம்யபோதே ஜடிதி விகஸதி த்வந் மயோऽஹம் சரேயம் |
த்வத்தர்மஸ்யாஸ்ய தாவத் கிமபி ந பகவன் ப்ரஸ்துதஸ்ய ப்ரணாச—
ஸ்தஸ்மாத்ஸர்வாத்மநைவ ப்ரதிச மம விபோ பக்தி மார்க்கம் மனோக்ஞம் ||

ஹே குருவாயூரப்பா, முன்கூறிய திருடன் முதலிய எல்லா வஸ்துக்களிலும் நீங்கள் அந்தர்யாமியாக இருப்பது எதுவரை நன்கு ஸ்பஷ்டமாய் எனக்கு விளங்கவில்லையோ அதுவரை இவ்விதமான உபாஸனையை (சண்டாளன் முதலிய யாவரையும் நமஸ்கரிப்பது முதலியன) செய்து பிறகு ஒன்றாய் இருக்கும் (அத்வைத க்ஞானம்) விளங்கத்துடங்கியதும் தங்கள் மயமாகவே நான் ஆகி சஞ்சரிப்பேன். ஏ பகவானே! தற்போது செய்ய ஆரம்பித்த பாகவத தர்மத்திற்கு சிறிதளவும் நாசம் ஏற்படாது. ஆதலால் ஹே ப்ரபோ! மிக்க மனோஹரமான பக்தி மார்க்கத்தை முழுமையாய் எனக்கு அளிப்பீராக.

### யமனை விரட்டுதல்

तं चैनं भक्तियोगं द्रढयितुमयि मे साध्यमारोग्यमायु-
र्दिष्ट्या तत्रापि सेव्यं तव चरणमहो भेषजायेव दुग्धम् ।
मार्कण्डेयो हि पूर्वं गणकनिगदितद्वादशाब्दायुरुच्चैः
सेवित्वा वत्सरं त्वां तव भटनिवहैर्द्रावयमास मृत्युम् ॥ 4 ॥

தம் சைநம் பக்தியோகம் த்ரடயிதுமயி மே ஸாத்யமாரோக்யமாயு—
ர்திஷ்ட்யா தத்ராபி ஸேவ்யம் தவ சரணமஹோ பேஷஜாயேவ துக்தம் |
மார்கண்டேயோ ஹி பூர்வம் கணகநிகதித த்வாதசாப்தாயுருச்சை:
ஸேவித்வா வத்ஸரம் த்வாம் தவ படநிவஹைர் த்ராவயாமாஸ ம்ருத்யும் ||

ஹே குருவாயூரப்பா, எனக்கு தற்போது ஏற்பட்டிருக்கும் பக்தி யோகத்தை திடமாகச் செய்வதற்கு ஆரோக்யமும் ஆயுளையும் ஸம்பாதிக்க வேண்டும். அதை சம்பாதிக்கும் விஷயத்திலும் தெய்வவசமாய் தங்கள் சரணத்தை வியாதி தீருவதற்கு பாலை சாப்பிடுவது போல் ஸேவிக்க வேண்டும். முன்பு மார்கண்டேயன் ஜோதிடர்கள் தனக்கு பன்னிரண்டு வயது என்று கூறியவுடன் நன்கு ஒரு வருஷகாலம் தங்களை ஸேவித்து பிறகு தங்களுடைய படர்களை கொண்டு (தன்னை அழைத்துச் செல்ல வந்த) யமனை விரட்டினுனமே' என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் ஆம் என்று தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

### மார்க்கண்டேயரின் தீவிரதம்

मार्कण्डेयश्चिरायुः स खलु पुनरपि त्वत्परः पुष्पभद्रा-

तीरे निन्ये तपस्यन्नतुलसुखरतिः षट् तु मन्वन्तराणि ।

देवेन्द्रः सप्तमस्तं सुरयुवतिमरुन्मन्मथैर्मोहयिष्यन्

योगोष्मप्लुष्यमाणैर्न तु पुनरशकत्त्वज्जनं निर्जयेत् कः ॥ 5 ॥

மார்கண்டேயச்சிராயு: ஸ கலு புநரபி த்வத்பர :
புஷ்பபத்ரா—
தீரே நிந்யே தபஸ்யந்நதுலஸுகரதி : ஷட் து
மந்வந்தராணி |
தேவேந்த்ர : ஸப்தமஸ்தம் ஸுரயுவதி மருந்மந்மதைர்
மோஹயிஷ்யன்
யோகோஷ்மப்லுஷ்யமாணைர்ந து புனரசகத்வஜ்ஜநம்
நிர்ஜயேத் க : ||

ஹே குருவாயூரப்பா, நீண்ட ஆயுள் பெற்றவனை அந்த மார்க்கண்டேயர் தங்கள் ஸேவையிலேயே ஈடுபட்டவராய் புஷ்பபத்ரா என்ற நதிக்கரையில் தவம் செய்து கொண்டு நிகரற்ற சுகத்தில் பற்றுக் கொண்டவராய் ஆறு மன்வந்தரங்களை கழித்தார். பிறகு ஏழாவது மன்வந்தி

ரத்தில் ஏழாவதான தேவேந்திரன் அந்த மார்க்கண்டேயரை மோஹிக்கச் செய்ய வேண்டி தேவப் பெண்களையும் மந்த மாருதத்தையும் மன்மதனையும் அனுப்பினான். ஆயினும் அவருடைய யோகாக்னியானது வந்தவர்களை எரிக்கவே அவர்களால் மார்க்கண்டேயரை ஒன்றும் செய்ய முடியவில்லை. தங்கள் பக்தனை யார்தான் ஜெயிக்கமுடியும்.

**மார்க்கண்டேயர் மாயையைப் பார்க்க வேண்டுதல்**

प्रीत्या नारायणाख्यस्त्वमथ नरसखः प्राप्तवानस्य पार्श्वं
तुष्ट्या तोष्ट्यमानः स तु विविधवरैर्लोभितो नानुमेने ।
द्रष्टुं मायां त्वदीयां किल पुनरवृणोद् भक्तितृप्तान्तरात्मा
मायादुःखानभिज्ञस्तदपि मृगयते नूनमाश्चर्यहेतोः ॥ 6 ॥

*ப்ரீத்யா நாராயணாக்யஸ்த்வமத நரஸக: ப்ராப்தவா நஸ்ய பார்ச்வம்*
*துஷ்டயா தோஷ்டுயமாந: ஸ து விவிதவரைர்லோபி தோ நாநுமேனே ।*
*த்ரஷ்டும் மாயாம் த்வதீயாம் கில புநரவ்ருணோத் பக்தி த்ருப்தாந்தராத்மா*
*மாயாது:காநபிக்ஞஸ்ததபி ம்ருகயதே நூநமாச்சர்ய ஹேதோ: ॥*

ஹே குருவாயூரப்பா, நரஸகனும் நாராயணன் என்ற பெயருள்ளவருமான தாங்கள் சந்தோஷத்தோடு அந்த மார்க்கண்டேயருடைய சமீபத்திற்கு வந்தீர். மிக்க மனம் களித்தவனாய் தங்களை ஸ்தோத்திரம் செய்தார். அதுஸமயம் அவரை தாங்கள் பலவித வரங்களைக் காட்டி மோஹிக்கச் செய்தீர். ஆயினும் அவர் ஒன்றையும் கருதவில்லை. ஆனால் தங்கள் மாயையை மட்டும் காண விரும்பினார். அதுவும் பக்தியால் சந்தோஷமடைந்த மனமுடைய அவர் மாயையால் உண்டாகும் துக்கத்தையறியாததால் ஆச்சர்யத்தின் காரணமாய் இவ்விதம் வேண்டியிருக்கிறார் நிச்சயம்.

## மார்க்கண்டேயர் மாயையைக் காண்பது

याते त्वय्याशु वाताकुलजलदगलत्तोयपूर्णातिघूर्ण-
त्सप्तार्णोराशिमग्ने जगति स तु जले संभ्रमन् वर्षकोटीः ।
दीनः प्रैक्षिष्ट दूरे वटदलशयनं कञ्चिदाश्चर्यबालं
त्वामेव श्यामलाङ्गं वदनसरसिजन्यस्तपादाङ्गुलीकम् ॥ 7 ॥

*யாதே த்வய்யாசு வாதாகுலஜலதகலத்தோயபூர்ணாதி கூர்ண—*
*த்ஸப்தார்ணோ ராசிமக்நே ஜகதி ஸ து ஜலே ஸம்ப்ரமன் வர்ஷகோடீ: |*
*தீன: ப்ரைக்ஷிஷ்ட தூரே வடதலசயனம் கஞ்சிதாச்சர்யபாலம்*
*த்வாமேவ ச்யாமலாங்கம் வதநஸரஸிஜ ந்யஸ்த பாதாங்குலீகம் ||*

ஹே குருவாயூரப்பா, அவ்விதமே வரத்தையளித்து விட்டு தாங்கள் பதரிகாச்ரமம் சென்றீர். உடன் பலத்த காற்றினல் கலங்கிய மேகங்களிலிருந்து வர்ஷிக்கும் ஜலத்தினல் மிகவும் ஏழு ஸமுத்திரங்களும் பெருகிற்று. அதனல் இந்த உலகம் மூழ்கியதும், அந்த ஜலத்திலேயே கோடி வருஷங்கள் சுற்றிக்கொண்டும் அதனல் வருந்தியவருமான ஸ்ரீ மார்க்கண்டேயர் வெகுதூரத்தில் கருத்த சரீரத்துடன் ஆலிலையின் மேல் பள்ளிக்கொண்டும் தாமரை மலர் போன்ற முகத்தில் தன் கால் கட்டைவிரலை வைத்துக் கொண்டும், ஆச்சர்யமான உருவத்துடனும் இருக்கும் தங்களையே அந்த ஜலத்தின் மீது கண்டாராமே.

## மாயை விலகி பகவானைக் காண்பது

दृष्ट्वा त्वां हृष्टरोमा त्वरितमभिगतः स्प्रष्टुकामो मुनीन्द्रः
श्वासेनान्तर्निविष्टः पुनरिह सकलं दृष्टवान् विष्टपौघम् ।
भूयोऽपि श्वासवातैर्बहिरनुपतितो वीक्षितस्त्वत्कटाक्षै-
र्मोदादाश्लेष्टुकामस्त्वयि पिहिततनौ स्वाश्रमे प्राग्वदासीत् ॥8॥

த்ருஷ்ட்வா த்வாம் ஹ்ருஷ்டரோமா த்வரிதமபிகத:
ஸ்ப்ரஷ்டு காமோமுனீந்த்ர:
ச்வாஸேநாந்தர்நிவிஷ்ட: புநரிஹ ஸகலம் த்ருஷ்ட
வான் விஷ்டபௌகம் |
பூயோபி ச்வாஸவாதைர் பஹிரனுபதிதோ வீக்ஷிதஸ்
த்வத்கடாக்ஷை:
மோதாதாச் லேஷ்டுகாமஸ்த்வயி பிஹித தநௌ
ஸ்வாச்ரமே ப்ராக்வதாஸீத் ||

ஹே குருவாயூரப்பா, அவ்விதம் ஆலிலையின்மேல் படுத்திருக்கும் தங்களைக்கண்ட முனிச்ரேஷ்டரான மார்க்கண்டேயர் சரீரமெல்லாம் மயிர் சிலிர்த்து தங்களை ஸபர்சிப்பதற்காக வேகமாய் தங்கள் சமீபம் வந்தார். உடன் தங்கள் மூச்சுக் காற்றின் வேகத்தால் (தங்கள் சரீரத்திற்குள்) இழுத்துச் செல்லப்பட்டார். அங்கு (குழந்தையான தங்கள் வயிற்றில்) எல்லா உலகமும் இருப்பதைக் கண்டார். மறுபடியும் தங்கள் மூச்சுக் காற்றுகள் அவரை வெளியில் கொண்டு தள்ளிற்று. தாங்கள் அவரை கடைக்கண்களால் பார்த்தீர். உடன் மார்க்கண்டேயர், சந்தோஷத்துடன் தங்களை ஆலிங்கனம் செய்ய விரும்பினர். அப்பொழுது தாங்கள் தன் சரீரத்தை மறைத்துக் கொண்டீர். அங்கு தங்களைக் காணுமல் தான்மட்டும், முன்போலவே தன் ஆச்ரமத்திலேயே இருப்பதைக் கண்டாராமே.

## பரமசிவனும் வரமளித்தல்

गौर्या सार्धं तदग्रे पुरभिदथ गतस्त्वत्प्रियप्रेक्षणार्थी
सिद्धानेवास्य दत्त्वा स्वयमयमजरामृत्युतादीन् गतोऽभूत् ।
एवं त्वत्सेवयैव स्मररिपुरपि स प्रीयते येन तस्मा-
न्मूर्तित्रय्यात्मकस्त्वं ननु सकलनियन्तेति सुव्यक्तमासीत् ॥९॥

கௌர்யா ஸார்தம் ததக்ரே புரபிதத கதஸ்த்வத்ப்ரிய
ப்ரேக்ஷணர்தீ
ஸிந்தாநேவாஸ்ய தத்வா ஸ்வயமயமஜரா
ம்ருத்யுதாதீன் கதோ஽பூத் ।
ஏவம் த்வத்ஸேவயைவ ஸ்மரரிபுரபி ஸ ப்ரீயதே
யேந தஸ்மா—
ந்மூர்தித்ரய்யாத்மகஸ்த்வம் நநுஸகலநியந்தேதி
ஸுவ்யக்தமாஸீத் ॥

ஹே குருவாயூரப்பா, அது ஸமயம் தங்கள் பக்தனை மார்க்கண்டேயரை பார்க்கவேண்டி, பரமேச்வரன் பார்வதி தேவியுடன் அவர் ஸமீபம் வந்தார். பிறகு கிழத்தன மின்மை, மரணமின்மை முதலிய (முன்பே தவத்தினல் கிட்டியுள்ள) வரங்களை மார்க்கண்டேயருக்கு அளித்துவிட்டு அவரும் தன் இருப்பிடம் சென்றார். இவ்விதம் தங்களை பஜிப்பதாலேயே பரமேச்வரன் சந்தோஷமடைகிறார் என் பதினலேயே மும்மூர்த்திகளின் ஸ்வரூபம் தாங்கள் எல்லோரையும் ஆள்பவர் என்று நன்கு விளங்கவில்லையா.

### வைகுண்டலோகமிருக்குமிடத்தைக் கூறுவது

त्र्यंशेऽस्मिन् सत्यलोके विधिहरिपुरभिन्मन्दिराण्यूर्ध्वमूर्ध्वं
तेभ्योऽप्यूर्ध्वं तु मायाविकृतिविरहितो भाति वैकुण्ठलोकः ।
तत्र त्वं कारणांभस्यपि पशुपकुले शुद्धसत्त्वैकरूपी
सच्चिद्ब्रह्माद्वयात्मा पवनपुरपते पाहि मां सर्वरोगात् ॥ 10 ॥

த்ரயம்சேஸ்மின் ஸத்யலோகே விதிஹரிபுரபின்
மந்திராண்யூர்த்வமூர்த்வம்
தேப்யோ஽ப்யூர்த்வம் து மாயாவிக்ருதி விரஹிதோ
பாதி வைகுண்டலோக: |
தத்ர த்வம் காரணம்பஸ்யபி பசுபகுலே
சுத்தஸத்வைகரூபீ
ஸச்சித்ப்ரஹ்மாத்வயாத்மா பவனபுரபதே பாஹி
மாம் ஸர்வரோகாத் ॥

ப்ரும்மலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் என்ற மூன்று பாகங்களாய் உள்ள இந்த ஸத்ய உலகத்தில் ப்ரும்மா, விஷ்ணு, சிவன் இவர்களுடைய வீடுகள் ஒன்றின் மேல் ஒன்ருய் வரிசையாய் இருக்கின்றன. (அங்கிருந்துக் கொண்டு ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று கார்யங்களேயும் செய்துகொண்டிருக்கிருர்கள் என கருத்து) அம்மூன்றிற்குமேல் இருக்கிறதும், மஹத் அஹங்காரம் முதலிய பதினறு விகாரங்கள் அற்றதுமானது வைகுண்டம் என்ற உலகம். அங்கும் காரண ஜலத்திலும் இடச்சேரி யிலும் சுத்த ஸத்வரூபமாயும், ஸச்சிதாநந்த ப்ரம்மத்திற்கு, வேறுபடாததாயும் இருக்கிற தாங்கள் ஹே குருவாயூரப்பா எல்லா வியாதிகளிலிருந்தும் என்னை காற்க வேண்டும் என ஸ்ரீ நம்பூதிரி வேண்ட, ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீ கரித்தார்.

—o—

## ஸ்ரீ அப்பனின் மஹிமை

மலேயாள தேசத்தைச் சேர்ந்த ஒருவர் பம்பாயில் நல்ல உத்யோகத்தில் இருக்கிருர். அவர் வருஷம் இரு முறை தன் சொந்த ஊருக்குச் செல்வது வழக்கமாம். அவ் விதம் செல்லும்போதெல்லாம் குருவாயூர் சென்று ஸ்ரீ அப் பனை தர்சனம் செய்து வருவார். அவ்விதம் ஒருமுறை செல்லும்போது, தன் ஊரிலிருந்து காரிலேயே குருவாயூர் சென்ருர். அவருடன் அவர் குடும்பமும் அவர் மனைவியுமே கூடச் சென்ருர்கள். ஸ்ரீ அப்பனை தர்சனம் செய்தார்கள். தன் சொந்த ஊருக்கும் திரும்பும் சமயம், அவர் மனைவி குருவாயூரப்பனுக்கு நிவேதனம் செய்த பாயஸம் வாங்கி வர வேண்டுமெனக் கூறிஞள், உடன் கோவிலில் போய் விசாரித்ததில் இன்னும் ஒரு மணி நேரத்திற்கு பிறகு தான் கிடைக்குமென கோவில் அதிகாரிகள் கூறிவிட்டார்

கள், அதனால் எல்லோரும் கொஞ்சம் வருத்தமுற்றனர். ஆயினும் பாயஸம் வாங்காமல் போக வேண்டியிருக்கிறதே என அவர் மனைவி மிக்க வருத்தமுற்றாள். தங்கி வருவதற்கு அவகாசமில்லாததால் உடனேயே புறப்பட்டார்கள். மூன்று மைல் தூரம் திரும்பியதும் காரை நிறுத்தும்படி சொன்னார். ஏன் என எல்லோரும் கேட்டார்கள். அதற்கு அவர் நான் ஒரு அழகான குருவாயூரப்பன் படம் வாங்கினேன். அதை நான் சென்ற ஒரு ஹோட்டலில் வைத்துவிட்டேன். அப்படம் மிக்க அழகானது. ஒரு விசித்திரமானதும்கூட, என கண் கலங்கிக் கூறினார். இதைக் கேட்டதும் திரும்பிச் சென்று பார்போம் என ஸமாதானம் கூறி திரும்பி குருவாயூருக்குச் சென்றார்கள். அந்த ஹோட்டலில் இவர் வைத்த இடத்திலேயே ஸ்ரீ அப்பனின் படம் இருந்தது. அதை அவர் எடுத்துவந்து கொடுத்து விட்டு தான் கோவிலுக்குச் சென்றார். அங்கு சென்றதும் பாயஸம் வாங்க வேண்டுமெனத் தோன்றியது பாயஸம் வாங்க பாத்திரமும் இல்லை கையில் பணமும் இல்லையே என நினைத்து வருந்தினார். அது ஸமயம் தன் இடுப்பில் ஏதோ சில்லரை இருப்பது தெரிய வந்தது. அதை எடுத்து பார்த்தார் பாத்திரம் வாங்க தேவையுள்ள ரூபாய் இருந்தது அந்த ரூபாய் தான் படம் வாங்கி விட்டு பாக்கியை இடுப்பில் வைத்துக் கொண்டது ஆகும். இடுப்பில் வைத்துக் கொண்டது புது ஸம்பவமாதலால் மிக்க ஆச்சர்யமடைந்தார். பாயஸம் வாங்கிக் கொண்டு திரும்பினார் வந்து எல்லோரிடமும் ஸ்ரீ அப்பனின் அருளால் நேர்ந்த இச்சம்பவங்களை சொல்லி ஆச்சர்ய முற்றார்,

•

எல்லோரும் அதைக் கேட்டு சந்தோஷித்தார்கள். அவரும் அவர் மனைவியும் என்னிடம் பம்பாயில் நேரில் கூறி மிக்க சந்தோஷ மடைந்தார்கள்.

—o—

## 98-வது தசகம்

### ப்ரும்மத்தினிடமிருந்து உலகம் முதலியது உண்டானதைக் கூறுவது

यस्मिन्नेतद्विभातं यत इदमभवद्येन चेदं य एत-
योऽस्मादुत्तीर्णरूपः खलु सकलमिदं भासितं यस्य भासा ।
यो वाचां दूरदूरे पुनरपि मनसां यस्य देवा मुनीन्द्राः
नो विद्युस्तत्त्वरूपं किमु पुनरपरे कृष्ण तस्मै नमस्ते ॥ 1 ॥

யஸ்மிந்நேதத்விபாதம் யத இதமபவத்யேந சேதம் ய ஏத |
த்யோऽஸ்மாதுத்தீர்ணரூப: கலு ஸகலமிதம் பாஸிதம் யஸ்ய பாஸா |
யோ வாசாம் தூரதூரே புநரபி மனஸாம் யஸ்ய தேவா முனீந்த்ரா:
நோ வித்யுஸ்தத்வரூபம் கிமு புநரபரே க்ருஷ்ண தஸ்மை நமஸ்தே ||

ஹே குருவாயூரப்பா, இந்த உலகமானது எந்த பகவானிடத்தில் தோன்றுகிறதோ, எந்த பகவானிடமிருந்து உண்டாயிற்றோ, எவனால் இந்த உலகம் காக்கப்படுகிறதோ, எந்த பகவான் உலகரூபமாக இருக்கிறானோ, எவனுடைய காந்தியால் இந்த உலகம் முழுவதும் ப்ரகாசிக்கிறதோ, எந்த பகவான் வாக்குக்கும், மனத்திற்கும் (எட்டாது) வெகுதூரத்தில் இருக்கிறானோ, எந்த பகவானின் உண்மையான ஸ்வரூபத்தை தேவர்களும், முனிவர்களும் அறிய வில்லையோ (அவர்களே அறிய முடியவில்லை என்றால் மற்றவர்களைப் பற்றிக் கூறவே வேண்டியதில்லை.) அப்பேர்கொத்த ஹே கிருஷ்ணா தங்களை நான் நமஸ்கரிக்கிறேன், என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

## சுத்த ப்ரும்மத்தை நமஸ்கரித்தல்

जन्माद्यो कर्म नाम स्फुटमिह गुणदोषादिकं वा न यस्मिन्
लोकानामूतये यः स्वयमनुभजते तानि मायानुसारी ।
बिभ्रच्छक्तीररूपोऽपि च बहुतररूपोऽवभात्यद्भुतात्मा
तस्मै कैवल्यधाम्ने पररसपरिपूर्णाय विष्णो नमस्ते ॥ 2 ॥

*ஜந்மாதோ கர்ம நாம ஸ்புடமிஹ குணதோஷாதிகம்*
*வா ந யஸ்மின்*
*லோகானாமூதயே ய: ஸ்வயமநுபஜதே தாநி*
*மாயாநுஸாரீ |*
*பிப்ரச்சக்தீரரூபோऽபி ச பஹுதரரூபோ*
*ऽவபாத்யத்புதாத்மா*
*தஸ்மை கைவல்யதாம்னே பரரஸபரிபூர்ணாய*
*விஷ்ணோ நமஸ்தே ||*

விஷ்ணுவான ஹே குருவாயூரப்பா எந்த பகவானிடத்தில், பிறப்போ அல்லது புண்ய பாப கர்மங்களோ, பெயரோ ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களோ வேறு தோஷங்களோ, ஒன்றும் உண்மையாய் கிடையாதோ, ஆனால் அந்த பகவான் மாயையையனுஸரித்துக் கொண்டு உலகத்தையனுக்ரகம் செய்யவேண்டி தானாகவே அவைகளை ஏற்றுக் கொண்டாரோ, தான் நிர்குணமாய் இருந்தபோதிலும், வித்யை, அவித்யை, க்ஞானம் ஐச்வர்யம் முதலிய சக்திகளை தரித்துக்கொண்டும் பலதர உருவங்களோடும், ஆச்சர்யகரமான ஸ்வரூபத்துடன் எந்த பகவான் விளங்குகிறாரோ, பரமானந்தத்தினால் பூர்ணராயும் இருக்கும் அந்த தங்களை நமஸ்கரிக்கிறேன்.

## இந்திரிய விஷயத்தைக் காட்டிலும் வேறுபட்டதே ப்ருஹ்மம்

नो तिर्यञ्चं न मर्त्यं न च सुरमसुरं न स्त्रियं नो पुमांसं
न द्रव्यं कर्म जातिं गुणमपि सदसद्वाऽपि ते रूपमाहुः ।
शिष्टं यत्स्यान्निषेधे सति निगमशतैर्लक्षणावृत्तितस्तत्
कृच्छ्रेणावेद्यमानं परमसुखमयं भाति तस्मै नमस्ते ॥ 3 ॥

நோ திர்யஞ்சம் ந மர்த்யம் ந ஸுரமஸுரம் ந ஸ்திரியம் நோ புமாம்ஸம்
ந த்ரவ்யம் கர்ம ஜாதிம் குணமபி ஸதஸத்வாऽபி தேரூபமாஹு: |
சிஷ்டம் யத்ஸ்யாந்நிஷேதே ஸதி நிகமசதைர் லக்ஷணவ்ருத்திதஸ்தத்
க்ருச்ரேணவேத்யமானம் பரமஸுகமயம் பாதி தஸ்மை நமஸ்தே ||

ஹே குருவாயூரப்பா, பக்ஷி ம்ருகம், பசு முதலிய தாகவோ, அல்லது மனிதனே, தேவனே, அசுரனே, ஸ்திரீயோ, புருஷனே, பஞ்சபூதங்களோ, புண்ய பாப கர்மாவோ, ஜாதியோ, ஸத்வம் முதலிய குணங்களோ, சேதனமோ, அசேதனமோ, தங்கள் ஸ்வரூபமில்லை என கூறுகிறார்கள். இவ்விதம் எல்லாவற்றையும் இல்லையென்று சொன்னதும், இவைகளைக் காட்டிலும் எது மீதமாய் மிஞ்சுகிறதோ, நூற்றுக்கணக்கான வேதங்களாய் லக்ஷணவ்ருத்தியின் மூலம் மிக்க சிரமத்துடன் தெரிவிக்கப்படுகிறதும் பரமஸ்வரூபமாயும் அது விளக்குகிறது. அப்பேர்கொத்த தங்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன்.

मायायां बिंबितस्त्वं सृजसि महदहङ्कारतन्मात्रभेदै-
भूतग्रामेन्द्रियाद्यैरपि सकलजगत्स्वप्नसङ्कल्पकल्पम् ।
भूयः संहृत्य सर्वं कमठ इव पदान्यात्मना कालशक्त्या
गंभीरे जायमाने तमसि वितिमिरो भासि तस्मै नमस्ते ॥4॥

மாயாயாம் பிம்பிதஸ்த்வம் ஸ்ருஜஸி மஹதஹங்கார
தந்மாத்ர பேதை—
ர்பூதக்ராமேந்திரியாத்யைரபி ஸகல ஜகத்ஸ்வப்ந
ஸங்கல்ப கல்பம் ।
பூய; ஸம்ஹ்ருத்ய ஸர்வம் கமட இவ பதாந்யாத்மநா
காலசக்த்யா
கம்பீரே ஜாயமாநே தமஸி விதிமிரோ பாஸி தஸ்மை
நமஸ்தே ॥

ஹே குருவாயூரப்பா, தாங்கள் மாயையில் ப்ரதிபிம்பித்தவனாய் இருந்து கொண்டு மஹத்அஹங்காரம் ஐந்து தன் மாத்திரைகள், ஐந்து பூதங்கள், இந்திரியங்கள் முதலியவைகளைக் கொண்டு ஸ்வப்னம் ஸங்கல்பம் இவைகளுக்கு ஸமமான எல்லா உலகையும் ஸ்ருஷ்டித்தீர். பிறகு மறுபடியும் ஆமை தன் கால்களையும் கைகளையும் உள்ளே இழுத்துக் கொள்வது போல் தாங்கள் இவ்வெல்லா உலகங்களையும் காலசக்தியினால் ஸம்ஹாரம் செய்து தன் உள்ளேயே அடக்கிக் கொள்கிறீர். அளவிட முடியாத ஸுஷுப்தியானது உண்டாகும் பொழுது தமஸ் ஸம்பந்த மற்றவராய் ப்ரகாசிக்கிறீரோ அந்த தங்களுக்கு நமஸ்காரம்.

## ப்ரும்மம் ஒன்றே பெயர்களே வெவ்வேறு

शब्दब्रह्मेति कर्मेत्यणुरिति भगवन् काल इत्यालपन्ति
त्वामेकं विश्वहेतुं सकलमयतया सर्वथा कल्प्यमानम् ।
वेदान्तैर्यत्तु गीतं पुरुषपरचिदात्माभिधं तत्तु तत्त्वं
प्रेक्षामात्रेण मूलप्रकृतिविकृतिकृत् कृष्ण तस्मै नमस्ते ॥ 5 ॥

*சப்தப்ரஹ்மேதி கர்மேத்யணுரிதி பகவன் கால இத்யாலபந்தி*
*த்வாமேகம் விச்வஹேதும் ஸகலமயதயா ஸர்வதா கல்ப்யமாநம் |*
*வேதாந்தைர்யத்து கீதம் புருஷ பரசிதாத்மாபிதம் தத்து தத்வம்*
*ப்ரேக்ஷாமாத்ரேண மூலப்ரக்ருதி விக்ருதி க்ருத் க்ருஷ்ண தஸ்மை நமஸ்தே ||*

ஹே குருவாயூரப்பா, உலகிற்கு காரணம் நாதப்ரும்ம மென்று சிலரும் சிலர் கர்மா என்றும் அணு என்று சிலரும் காலம் என்று சிலரும் வாதிக்கின்றனர். தாங்கள் எல்லா வாகவும் இருப்பதால் அவ்விதம் கூறுகிறார்கள். எந்த தத்வஸ்வரூபமானது வேதாந்தங்களால் புருஷன், என்றும் பரன் என்றும், சித் என்றும், ஆத்மா என்றும் பெயருள்ள தாகக் கூறப்படுகிறதோ அந்த தத்வமான தாங்கள் தன் பார்வை மாத்திரத்தாலேயே மாயையின் கார்யத்தை செய் கிறீர். அப்பேர் கொத்த ஹே கிருஷ்ண தங்களுக்கு நமஸ் காரம்.

## அருளால் அவித்யை வித்யையாக ஆவது

सत्त्वेनासत्तया वा न च खलु सदसत्त्वेन निर्वाच्यरूपा
धत्ते याऽसावविद्या गुणफणिमतिवद्विश्वदृश्यावभासम् ।
विद्यात्वं सैव याता श्रुतिवचनलवैर्यत्कृपास्यन्दलाभे
संसारारण्यसद्यस्त्रुटनपरशुतामेति तस्मै नमस्ते ॥ 6 ॥

ஸத்வேநாஸத்தயா வா ந ச கலு ஸதஸத்வேந
நிர்வாச்ய ரூபா
தத்தே யாऽஸாவவித்யா குண பணிமதி வத்விச்வத்ருச்
யாவபாஸம் |
வித்யாத்வம் ஸைவ யாதா ச்ருதிவசனலவைர்யத்க்ரு
பாஸ்யந்தலாபே
ஸம்ஸாராரண்யஸத்யஸ்த்ருடந பரசுதாமேதி தஸ்மை
நமஸ்தே ||

ஹே குருவாயூரப்பா, ஸத் (இருப்பது) என்றோ அஸத் (இல்லாதது) என்றோ இருப்பதும் இல்லாததும் சேர்ந்தது என்றோ நிச்சயமாக கூற முடியாத யாதொரு அவித்யை உண்டோ அது கயிற்றில் பாம்பு என்ற எண்ணம் உண்டாவது போல் உலகில் காணப்படும் எல்லா வஸ்துக்களிடத்திலும் (உண்மையாய்) விளங்குகிறது என்ற எண்ணத்தை உண்டு பண்ணுகிறது. தங்கள் கருணாப்ரவாஹத்தையடைந்தும் அதை அவித்யை உபனிஷத்துகளின் சிறிய உபதேசவசனங்களினுலேயே (வேதாந்த வாக்கிய சிரவணத்தினுலேயே) வித்யையாக ஆகி உடன் ஸம்ஸாரமாகிற வனத்தை சீக்கிரம் அழிப்பதற்கு கோடறியாகவும் ஆகிறது. அப்பேர்கொத்த கருணா நிதியான தங்களுக்கு நமஸ்காரம்.

### ப்ரும்மமே உலகம் '

मूषासु स्वर्णवद्रा जगति घटशरावादिके मृत्तिकाव-
त्तत्त्वे सञ्चिन्त्यमाने स्फुरति तदधुनाऽप्यद्वितीयं वपुस्ते ।
स्वप्नद्रष्टुः प्रबोधे तिमिरलयविधौ जीर्णरज्जोश्च यद्व-
द्विद्यालाभे तथैव स्फुटमपि विकसेत् कृष्ण तस्मै नमस्ते ॥7॥

பூஷாஸு ஸ்வர்ண வத்வா ஜகதி கடசராவாதிகே
ம்ருத்திகாவ
த்தத்வே ஸஞ்சிந்த்யமானே ஸ்புரதி ததது௵ப்யத்
விதீயம் வபுஸ்தே |
ஸ்வப்னத்ரஷ்டு: ப்ரபோதே திமிரலயவிதௌ ஜீர்ண
ரஜ்ஜோச்ச யத்வ
த்வித்யாலாபே ததைவ ஸ்புடமபி விகஸேத்க்ருஷ்ண
தஸ்மை நமஸ்தே

ஹே குருவாயூரப்பா, குண்டலம் வளையல்கள் இவை களில் ஸ்வர்ணம் இருப்பது போலும் பானை மடக்கு முதலி யவைகளில் மண் இருப்பது போலவும், உண்மையான ஸ்வரூபத்தை ஆலோசிக்கும் பொழுதும் இவ்வுலகில் அத்வைதமான அர்த்தங்கள் ஸ்வரூபம் காணப்படுகிறது. எவ்விதம் ஸ்வப்னத்தில் காணப்படும் பொருள்கள் விழித்துக் கொண்டதும் காணப்படாதோ இருளில் பாம் பாகத் தோன்றியது வெளிச்சம் வந்ததும் ஜீர்ணமான கயறுய் இருப்பது அறியப்படுகிறதோ அவ்விதம் வித்யை (ப்ரும்மக்ஞானம்) ஏற்பட்டதும் தங்கள் ஸ்வரூபம் நன்கு விளங்குகிறது. அப்பேர் கொத்த தங்களை நமஸ்கரிக் கிறேன்.

## ஸ்ரீ பகவானே யாவரையும் நியமனம் செய்கிறவன்

यद्भीत्योदेति सूर्यो दहति च दहनो वाति वायुस्तथान्ये
यद्भीताः पद्मजाद्याः पुनरुचितबलीनाहरन्तेऽनुकालम् ।
येनैवारोपिताः प्राङ्निजपदमपि ते च्याविताश्च पश्चात्
तस्मै विश्वं नियन्त्रे वयमपि भवते कृष्ण कुर्मः प्रणामम् ॥8॥

யத்பீத்யோதேதி ஸூர்யோ தஹதி ச தஹநோவாதி
வாயுஸ்ததான்யே
யத்பீதா : பத்மஜாத்யா புனருசித பலீநாஹரன்தேऽநு
காலம் |
யேனைவாரோபிதா : ப்ராங்நிஜபதமபி தே ச்யாவிதா
ரச்ச பச்சாத்
தஸ்மை விச்வம் நியந்த்ரே வயமபி பவதே க்ருஷ்ண
குர்ம : ப்ரணுமம் || 8 ||

ஹே குருவாயூரப்பா, எவனிடமிருந்து பயத்தால் சூரியன் உதிக்கிறதோ அக்னி, எறிக்கிறதோ வாயு வீசுகிறதோ, அவ்விதம் ப்ரும்மா முதலிய எல்லா தேவர்களும் தங்கள் தங்களுக்குரிய பலிபாகத்தை குறித்த காலத்தில் பெறுகிறார்களோ, எவனுடைய அருளால் முன்பே தன் தன் ஸ்தானத்தையடைந்தார்களோ, பிறகு (இருபரார்த்த காலத்திற்குப் பிறகு) அப்பதவியிலிருந்து விலக்கப் படுகிறார்களோ, அப்பேர் கொத்தவரும், உலகமனைத்தையும் நியமனம் செய்கிறவரும் (அடக்குகிறவரும்) ஆன ஹே கிருஷ்ண தங்களை நாங்கள் நமஸ்கரிக்கிறோம்.

## ஸ்ரீ பகவான் செய்த ஸ்ருஷ்டி முதலியவற்றைக் கூறுதல்

त्रैलोक्यं भावयन्तं त्रिगुणमयमिदं त्र्यक्षरस्यैकवाच्यं
त्रीशानामैक्यरूपं त्रिभिरपि निगमैर्गीयमानस्वरूपम् ।
तिस्रोऽवस्था विदन्तं त्रियुगजनिजुषं त्रिक्रमाक्रान्तविश्वं
त्रैकाल्ये भेदहीनं त्रिभिरहमनिशं योगभेदैर्भजे त्वाम् ॥ 9 ॥

த்ரைலோக்யம் பாவயந்தம் த்ரிகுணமயமிதம்
த்ரயக்ஷரஸ்யைகவாச்யம்
த்ரீசாநாமைக்யரூபம் த்ரிபிரபி நிகமைர்கீயமானஸ்வ
ரூபம் |
திஸ்ரோsவஸ்தா விதந்தம் த்ரியுகஜ நிஜுஷம்
த்ரிக்ரமாக்ராந்த விச்வம்
த்ரைகால்யே பேதஹீநம் த்ரிபிரஹமநிசம் யோக
பேதைர் பஜே த்வாம் ||

ஹே குருவாயூரப்பா, ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்கள் நிரம்பிய மூன்று உலங்களை சிருஷ்டித்தவரும் மூன்று அக்ஷர முள்ள (ப்ரணவத்தால்) முக்கியமாய் கூறப் படுகிறவரும், மும்மூர்த்திகளின் ஐக்கியஸ்வரூபமானவரும் மூன்று வேதங்களால் புகழப்படும் ஸ்வரூபமுள்ளவரும் விழிப்பு ஸ்வப்பனம் தூக்கம் என்ற மூன்று அவஸ்த்தைகளை அறிந்தவரும், மூன்று யுகத்தில் அவதாரம் செய்தவரும் மூன்று அடிகளால் உலகம் முழுவதையும் வியாபித்தவரும் சென்ற காலம், நிகழ்காலம், வரும் காலம், என்ற இம்மூன்றி லும், மாறுதல் இல்லாமல் விளங்குகிறவரும் ஆன தங்களை கர்மா, க்ஞானம், பக்தி என்ற மூன்று யோகங்களால் எப் பொழுதும் பஜிக்கிறேன்.

பகவானின் ஸ்வரூபத்தின் பெருமையைக் கூறுவது

सत्यं शुद्धं विबुद्धं जयति तव वपुर्नित्यमुक्तं निरीहं
निर्द्वन्द्वं निर्विकारं निखिलगुणगणव्यञ्जनाधारभूतम् ।
निर्मूलं निर्मलं तन्निरवधिमहिमोल्लासि निर्लीनमन्त-
र्निस्सङ्गानां मुनीनां निरुपमपरमानन्दसान्द्रप्रकाशम् ॥ 10 ॥

ஸத்யம் சுத்தம் விபுத்தம் ஜயதி தவ வபுர் நித்யமுக்தம்
நிரீஹம்
நிர்த்வந்த்வம் நிர்விகாரம் நிகிலகுண கணவ்யஞ்ஜ
நாதார பூதம் |
நிர்மூலம் நிர்மலம் தந்நிரவதிமஹி மோல்லாஸி
நிர்லீனமந்த—
ர்நிஸ்ஸங்கானாம் முநீநாம் நிருபமபரமானந்த
ஸாந்த்ர ப்ரகாசம் ||

ஹே குருவாயூரப்பா, உண்மையாய் இருக்கிறதும் சுத்த ஸத்வமயமாய் இருக்கிறதும், ஸ்வப்ரகாசமாய்யுள்ளதும், எப்பொழுதும் பந்தங்கள் அற்று இருக்கிறதும் செய்கையற்று இருக்கிறதும் த்வந்த்வமியில்லாததும் (சீதோஷ்ணம் முதலியவற்றதும்) விகாரமற்றதும் பொருமை, சத்யம், தயை, ஐச்வர்யம் முதலிய எல்லா குணங்களுடைய கூட்டத்திற்கு உத்பத்திஸ்தானமாயும், காரணமற்றதும், தோஷமில்லாததும், அளவு கடந்த மஹிமையால் நன்கு விளங்குகிறதும், ஸங்கமற்ற முனிவர்களுடைய மனதில் நிச்சலமாய் உள்ளதும் நிகரற்ற பரமானந்தத்தால் மிக்க ப்ரகாசிக்கிறதும் ஆன தங்களுடைய ஸ்வரூபமானது சிறந்ததாக விளங்குகிறது.

## சக்ரம் போன்ற காலத்தினுல் ஏற்படும் பயத்தை போக்கும்படி வேண்டுதல்

(இதை படிப்பதால் துக்கம் நீங்கி ஆயுள் வளரும்)

दुर्वारं द्वादशारं त्रिशतपरिमिलत्षष्टिपर्वाभिवीतं
संभ्राम्यत् क्रूरवेगं क्षणमनु जगदाच्छिद्य सन्धावमानम् ।
चक्रं ते कालरूपं व्यथयतु न तु मां त्वत्पदैकावलंबं
विष्णो कारुण्यसिन्धो पवनपुरपते पाहि सर्वामयौघात् ॥11॥

துர்வாரம் த்வாதசாரம் த்ரிசதபரிமிலத்ஷஷ்டி பர்வாபி
வீதம்
ஸம்ப்ராம்யத் க்ரூரவேகம் க்ஷணமநு ஜகதாச்சித்ய
ஸந்தாவமானம் |
சக்ரம் தே காலரூபம் வ்யதயது ந து மாம் த்வந்பதை
காவலம்பம்
விஷ்ணோ காருண்யஸிந்தோ பவநபுரபதே பாஹி
ஸர்வாமயௌகாத் ||

விஷ்ணுவான ஹே குருவாயூரப்பா, தங்களுடைய காலரூபமான சக்ரமானது ஒருவராலும்தடுக்க முடியாத தாயும், பன்னிரண்டு ஆரக்கட்டை போன்ற மாதங்கள் உள்ளதாலும் முன்னூற்று அறுவது நாட்களாகிற பழுக் களை (வட்டாக்களை) யுடையதாயும், எப்பொழுதும் நன்கு சுத்துகிறதாயும், பயங்கரமான வேகத்தையுடையதாயும், ஒரு க்ஷணத்தில் உலகத்தை பலாத்காரமாய் அழிக்க வேக மாய் ஓடுகிறதாயும் இருக்கிறது அந்த கால சக்ரமானது தங்கள் சரணத்தையே பிடிப்பாக நம்பியிருக்கும் என்னை கஷ்டபடுத்தாமல் இருக்கட்டும் கருணைக் கடலான ஹே கிருஷ்ண எல்லா வியாதிகளிலிருந்தும் என்னைக் காற்க வேண்டும் என்று நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்,

—o—

## ஸ்ரீ அப்பனின் மஹிமை

ஒரு ஆஸ்திகர் வாலாஜாபாத்தில் பெரிய உத்தியோ கத்தில் இருக்கிறார். அவருக்கு எல்லா முறையிலும் சந்தோ ஷம் காணப்பட்டது. ஆனால் ஒரு துக்கம் மனதை ரொம்ப வும் துன்புருத்தியது. அதாவது அவருடைய மனைவிக்கு அடிக்கடி அபார்ஷன் ஆகிக்கொண்டே இருந்தது. பல விதமான முறையில் வைத்ய சிகித்ஸைகள் செய்தும் ஒன் றும் பயனளிக்கவில்லை. இவ்விதம் வருந்திக் கொண்டிருக்

கும் ஸமயம் அவர் பிதாவே வந்து நீங்கள் குருவாயூ ரப்பனை பிரார்த்தனை செய்துகொண்டு ஸ்ரீ நாராயணீய ஸ்தோத்திரத்தை பாராயணம் செய்து வாருங்கள், உங்கள் துக்கம் நீங்கி சீக்கிரம் நல்ல குழந்தையை அடைவீர்கள் என்று கூறினர். அவ்விதமே ஸ்ரீ அப்பனை பிரார்த்தித்துக் கொண்டு ஸ்ரீ நாராயணீயத்தையும் பாராயணம் செய்து வந்தார்கள். அதிலிருந்து அபார்ஷன் ஆகவில்லை. தற் போது நிறைய குழந்தைகளைப் பெற்று சௌக்யமாக இருந்து வருகிருர்கள். இவ்விதம் தன்னை அண்டியவர் களின் துக்கத்தை இக்கலியிலும் ஸ்ரீ குருவாயூரப்பன் நீக்கி அவர்கள் கோரிக்கையை அளித்து வருவதை கண் முன்ஞக பார்த்து வருகிறோம்.

இவ்விதம் ஸ்ரீ குருவாயூரப்பன் அருளால் அடைந்த சந்தோஷத்தையும், ஸ்ரீ அப்பனின் மஹிமையை யும், எல்லோரிடமும் கூறுவதுடன் என்னிடமும் நேரில் அவருடைய தமையனர் கூறி சந்தோஷித்தார்.

—o—

## 99-வது தசகம்

## வைகுண்டலோகத்தை வேண்டுதல்

विष्णोर्वीर्याणि को वा कथयतु धरणेः कश्च रेणून्मिमीते
यस्यैवाङ्घ्रित्रयेण त्रिजगदभिमितं मोदते पूर्णसंपत् ।
योसौ विश्वानि धत्ते प्रियमिह परमं धाम तस्याभियायां
तद्भक्ता यत्र माद्यन्त्यमृतरसमरन्दस्य यत्र प्रवाहः ॥ 1 ॥

விஷ்ணோர்வீர்யாணி கோ வா கதயது தரணேः
கச்ச ரேணூந்மிமீதே
யஸ்யைவாங்க்ரி த்ரயேண த்ரிஜகதபிமிதம் மோததே
பூர்ணஸம்பத் |
யோஸௌ விச்வானி தத்தே ப்ரியமிஹ பரமம் தாம
தஸ்யாபியாயாம்
தத்பக்தா யத்ர மாத்யந்த்யம்ருதரஸமரந்தஸ்ய
யத்ர ப்ரவாஹः ||

ஹே குருவாயூரப்பா, எந்த பகவானுடைய மூன்று அடிகளாலேயே மூன்று உலகங்களும் அளக்கப்பெற்று அதனால் ஐச்வர்யம் நிறம்பியதாய் சந்தோஷத்துடன் விளங்குகிறதோ, எந்த பகவான் உலகங்களை தரிக்கிறுனே, விஷ்ணுவினுடைய பராக்ரமங்களை யார்தான் கூறமுடியும். பூமியிலுள்ள புழுதிகளை யார்தான் கணக்கிடுவான்?

மேலும், எந்த இடத்தில் தங்களுடைய பக்தர்கள் சந்தோஷத்துடன் வாழ்கிறுர்கள். எந்த இடத்தில் அம்ருத ரஸமாகிற தேனின் ப்ரவாஹம் இருக்கிறதோ மிக்க பிரியமானதும், சிறந்ததுமான அந்த வைகுண்ட மான தங்கள் ஸ்தானத்தை இந்த ஜன்மத்திலேயே நான் அடையவேணுக, என நம்பூதிரி வேண்ட, ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

## ஸ்ரீ பகவானின் ஆராதனம் எல்லாவற்றையும் அளிக்கும்

आद्यायाशेषकर्त्रे प्रतिनिमिषनवीनाय भर्त्रे विभूते-
र्भक्तात्मा विष्णवे यः प्रदिशति हविरादीनि यज्ञार्चनादौ ।
कृष्णाद्यं जन्म यो वा महदिह महतो वर्णयेत्सोऽयमेव
प्रीतः पूर्णो यशोभिस्त्वरितमभिसरेत् प्राप्यमन्ते पदं ते ॥ 2 ॥

ஆத்யாயாசேஷகர்த்ரே ப்ரதிநிமிஷ நவீனய
பர்த்ரே விபூதேர்—
பக்தாத்மா விஷ்ணவே ய: ப்ரதிசதி ஹவிராதீநி
யக்ஞார்சனுதௌ
க்ருஷ்ணத்யம் ஜந்ம யோ வா மஹதிஹ மஹதோ
வர்ணயேத் ஸோऽயமேவ |
ப்ரீத: பூர்ணோ யசோபிஸ்த்வரிதமபிஸரேத்
ப்ராப்யமந்தே பதம் தே ||

ஹே குருவாயூரப்பா, ஆதியில் உள்ளவனும் எல்லா வற்றிற்கும் காரணமாய் இருப்பவனும், (தன்னை தியானம் செய்கிறவர்களுக்கு) ஓவ்வொரு நிமிஷமும் புதிது புதிதாக தோன்றுகிறவரும் லஷ்மீதேவியின் பர்த்தாவும் விஷ்ணுவுமான தங்களுக்கு யக்ஞம், பூஜை முதலியவற்றில், ஹவிஸ் முதலியதை பக்தி நிறைந்து எவன் கொடுக்கிறனோ இவைகளைக் காட்டிலும் எவன், விஷ்ணுவைக் காட்டிலும், பெரியதான ஸ்ரீ கிருஷ்ணனின் ஆதியான அவதாரம் முதலியதை வர்ணிக்கிறனோ அவனே மனங்களித்தவனுயும், யசஸ் நிறம்பியவனுயும் சீக்கிரமே ஆகிறன். மேலும் முடிவில், எல்லோரும் அடையவேண்டியதான தங்கள் ஸ்தானத்தையும் அடைகிறன்.

**கவிகளை ஸ்துதி செய்யும்படியும் மற்றவர்களை நாம ஸங்கீர்தனம் செய்யும்படியும் கூறுவது**

हे स्तोतार: कवीन्द्रास्तमिह खलु यथा चेतयध्वे तथैव
व्यक्तं वेदस्य सारं प्रणुवत जननोपात्तलीलाकथाभि: ।
जानन्तश्चास्य नामान्यखिलसुखकराणीति संकीर्तयध्वं
हे विष्णो कीर्तनाद्यैस्तव खलु महतस्तत्त्वबोधं भजेयम् ॥ 3 ॥

ஹே ஸ்தோதார: கவீந்த்ராஸ்தமிஹ கலு யதா
சேதயத்வே ததைவ
வ்யக்தம் வேதஸ்ய ஸாரம் ப்ரணுவத ஜனனோபாத்த
லீலாகதாபி: |
ஜானந்தச்சாஸ்ய நாமா ந்யகிலஸுககராணீதி
ஸங்கீர்த்தயத்வம்
ஹே விஷ்ணோ கீர்த்தனாத்யைஸ்தவ கலு மஹதஸ்தத்வ
போதம் பஜேயம் ||

கவிசிரேஷ்டர்களான ஸ்துதி பாடகர்களே அந்த பகவானை எவ்விதம் அறிவீர்களோ, அவ்விதமே வேதத்தின் ஸாரமாயும் பல அவதாரங்கள் எடுத்து லீலைகளை செய்ததையும் கூறுவதன் மூலம், விஸ்தாரமாய் ஸ்தோத்திரம் செய்யுங்கள். ஓ, அறிவாளிகளே எல்லா சுகங்களையும் அளிக்கிறதான ஸ்ரீ பகவானின் நாமங்களையே கானம் செய்யுங்கள். விஷ்ணுவான ஹே குருவாயூரப்பா, கீர்த்தனம் முதலியவற்றாலேயே மஹானான தங்களுடைய உண்மையான ஸ்வரூபக்ஞானத்தை அடைவேனாக.

## பகவானின் செய்கைகளையும் தியானம் செய்யக் கூறுவது

विष्णोः कर्माणि संपश्यत मनसि सदा यैः स धर्मानबध्नाद्
यानीन्द्रस्यैष भृत्यः प्रियसख इव च व्यातनोत् क्षेमकारी ।
ईक्षन्ते योगसिद्धाः परपदमनिशं यस्य सम्यक्प्रकाशं
विप्रेन्द्रा जागरूकाः कृतबहुनुतयो यच्च निर्भासयन्ते ॥ 4 ॥

விஷ்ணோ: கர்மாணி ஸம்பச்யத மனஸி ஸதா யை:
ஸ தர்மானபத்நாத்
யாநீந்த்ரஸ்யைஷ ப்ருத்ய: ப்ரியஸக இவ ச
வ்யாதநோத் க்ஷேமகாரீ
ஈக்ஷந்தே யோகஸித்தா: பரபதமநிசம் யஸ்ய
ஸம்யக்ப்ரகாசம்
விப்ரேந்த்ரா ஜாகரூகா: க்ருதபஹுநுதயோ யச்ச
நிர்பாஸயந்தே ||

ஹே அறிவு பெற்ற ஜனங்களே, அந்த விஷ்ணுவான வர் எந்த கர்மங்களைக் கொண்டு நற்பயனையளிக்கும் தர்மங்களை அதிகரிக்க தக்கவாறு செய்யும்படி செய்கிறாரோ இந்திரனுக்கு (உலகத்திற்கும்) ப்ரியமான ஸ்னேகிதன் போலும், வேலைக்காரன் போலும் இருந்து கொண்டும் சத்ருஸம்ஹாரம் ஸதுபதேசம் முதலிய க்ஷேமங்களை செய்கிறவனும் எந்த எந்த கர்மங்களை செய்தானோ எந்த பகவானுடைய மிக்கப்ரகாசிக்கிற பரமபதமான வைகுண் டத்தை யோகஸித்தி பெற்றவர்கள் எப்போழுதும் பார்க் கிறார்களோ, சிறந்த ப்ராம்மணர்கள் மிக்க ஜாக்ரதையாய் இருந்து கொண்டு, பலவிதமாய் ஸ்தோத்திரம் செய்வதின் மூலம் எந்த ஸ்தானத்தை விளக்கச் செய்கிறார்களோ, அந்த பகவானுடைய அந்த கர்மங்களை மனதில் நீங்கள் பாருங்கள் (தியானம் செய்யுங்கள் எனக் கருத்து.)

ஸ்ரீ பகவன்நாம மஹிமையைக் கூறுவது

नो जातो जायमानोऽपि च समधिगतस्त्वन्महिम्नोऽवसानं
देव श्रेयांसि विद्वान् प्रतिमुहुरपि ते नाम शंसामि विष्णो ।
तं त्वां संस्तौमि नानाविधनुतिवचनैरस्य लोकत्रयस्या-
प्यूर्ध्वे विभ्राजमाने विरचितवसतिं तत्र वैकुण्ठलोके ॥ 5 ॥

நோ ஜாதோ ஜாயமானோ஽பி ச ஸமதிகதஸ்த்வந்மஹிம் னோ஽வஸானம்
தேவ ச்ரேயாம்ஸி வித்வான் ப்ரதிமுஹுரபி தே நாம சம்ஸாமி விஷ்ணோ ।
தம் த்வாம் ஸம்ஸ்தௌமி நானாவிதநுதிவசனைரஸ்ய லோகத்ரயஸ்யா
ப்யூர்த்வம் விப்ராஜமானே விரசிதவஸதிம் தத்ர வைகுண்டலோகே ॥

தேவனான ஹே குருவாயூரப்பா, தங்களுடைய மஹிமை யின் முடிவை அறிந்தவன் பிறக்கவும் இல்லை. பிறக்க போவதுமில்லை, ஆகவே ஹே விஷ்ணோ! தங்களுடைய நாமங்களே சிரேயஸ்ஸையளிக்க வல்லது என அறிந்த நான் அடிக்கடி தங்கள் நாமங்களை சொல்கிறேன், மூன்று உலகத்திற்கு மேல் விளங்குகிறதான வைகுண்ட லோகத்தில் வஸிக்கும் தங்களுடைய பலவிதமான கல்யாண குணங்களைக் கூறும் சொற்களால் நன்கு ஸ்தோத்திரம் செய்கிறேன்.

### ஜலசாயியான பகவானை வர்ணித்தல்

आप: सृष्टयादि जन्या: प्रथममयि विभो गर्भदेशे दधुस्त्वां
यत्र त्वय्येव जीवा जलशयनहरे सङ्गता ऐक्यमापन् ।
तस्याजस्य प्रभो ते विनिहितमभवत्पद्ममेकं हि नाभौ
दिक्पत्रं यत्किलाहु: कनकधरणिभृत्कर्णिकं लोकरूपम् ॥ 6 ॥

ஆப: ஸ்ருஷ்ட்யாதி ஜந்யா: ப்ரதமமயி விபோ கர்பதேசே ததுஸ்த்வாம்
யத்ர த்வய்யேவ ஜீவா ஜலசயந ஹரே ஸங்கதா ஐக்யமாபந் |
தஸ்யாஜஸ்ய ப்ரபோ தே விநிஹிதமபவத்பத்மமேகம் ஹி நாபௌ
திக்பத்ரம் யத்கிலாஹு: கனகதரணிப்ருத்கர்ணிகம் லோகரூபம் ||

ப்ரபுவான ஹே குருவாயூரப்பா, எல்லாவற்றிற்கும் முதலில் ஸ்ருஷ்டிக்கப் பெற்ற ஜலங்கள் தங்களை கர்பத்தில் தரித்து ஜலத்தில் பள்ளி கொண்ட ஹே கிருஷ்ணா எந்த ஜலத்தில் படுத்திருந்த தங்களிடத்திலேயே எல்லா ஜீவன்களும் வந்து ஐக்யத்தை அடைந்ததுகளோ அப்பேர்பட்ட ஹே ப்ரபுவே பிறப்பற்றவரான தங்களுடைய நாபியில் ஒரு தாமரை புஷ்பம் மட்டும் காணப் பட்டது. அந்த புஷ்பத்

தைதான் முனிவர்கள் உலகமாகவும், திக்குகளை அந்த புஷ்பத்தின் இதழ்களாகவும் மேருமலையை மொட்டாகவும் கூறுகின்றனர்.

## பகவத் தியானம் செய்யாதவர்களைக் கண்டு வருந்துவது

हे लोका विष्णुरेतद् भुवनमजनयत्तन्न जानीथ यूयं
युष्माकं ह्यन्तरस्थं किमपि तदपरं विद्यते विष्णुरूपम् ।
नीहारप्रख्यमायापरिवृतमनसो मोहिता नामरूपैः
प्राणप्रीत्यैकतृप्ताश्चरथ मखपरा हन्त नेच्छा मुकुन्दे ॥ 7 ॥

ஹே லோகா விஷ்ணுரேதத் புவனமஜனயத்தந்ந ஜாநீத யூயம்
யுஷ்மாகம் ஹ்யந்தரஸ்தம் கிமபி ததபரம் வித்யதே விஷ்ணுரூபம் |
நீஹாரப்ரக்யமாயாபரிவ்ருதமனஸோ மோஹிதா நாமரூபை:
ப்ராணப்ரீத்யைகத்ருப்தாச்சரத மகபரா ஹந்த நேச்சா முகுந்தே ||

ஹே ஜனங்களே, ஸ்ரீ விஷ்ணுவே இவ்வுலகை ஸ்ருஷ்டித்தார். அதை நீங்கள் அறியவில்லை. சொல்ல முடியாததாயும், ஜீவனைக் காட்டிலும் வேறானதும் ஆன, எந்த ஸ்ரீ விஷ்ணுவின் ஸ்வரூபம், உங்களுடைய ஹ்ருதயத்தில் இருக்கிறதோ, அதையும் நீங்கள் அறியவில்லை. ஏனெனில் பனி போன்ற மாயையால் மறைக்கப்பட்ட மனமுள்ளவர்களும், பெயர்களாலும் உருவங்களாலும் மோஹத்தையடைந்தவர்களும் இந்திரியங்களை சந்தோஷப்படுத்துவது ஒன்றிலேயே களிப்புற்றவர்களாய் காம்யகர்மங்களை செய்வதில் ஈடுபடுகிறீர்கள். முகுந்தனை ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பக்தியே இருப்பதில்லை, கஷ்டம்!

## உருவமற்ற பகவானை மோக்ஷரூபியாகக் கூறுவது

मूर्ध्नामक्ष्णां पदानां वहसि खलु सहस्राणि संपूर्य विश्वं
तत्प्रोत्क्रम्यापि तिष्ठन् परिमितविवरे भासि चित्तान्तरेऽपि ।
भूतं भव्यं च सर्वं परपुरुष भवान् किञ्च देहेन्द्रियादि-
ष्वाविष्टो ह्युद्गतत्वादमृतसुखरसं चानुभुङ्क्षे त्वमेव ॥ 8 ॥

மூர்த்நாமக்ஷ்ணாம் பதானாம் வஹஸி கலு
ஸஹஸ்ராணி ஸம்பூர்ய விச்வம்
தத் ப்ரோத்க்ரம்யாபி திஷ்டன் பரிமிதவிவரே பாஸி
சித்தாந்தரேऽபி |
பூதம் பவ்யம் ச ஸர்வம் பரபுருஷ பவான் கிஞ்ச
தேஹேந்த்ரியாதி—
ஷ்வாவிஷ்டோ ஹ்யுத்கதத்வாதம்ருதஸுகரஸம்
சானுபுங்க்ஷே த்வமேவ ||

ஹே குருவாயூரப்பா, ஆயிரக்கணக்கான தலைகளையும் கண்களையும் பாதங்களையும் தரிக்கிறீர். உலகம் முழுவதும் நிறம்பியும் அதைத் தாண்டியும் வியாபித்து நிற்கிறீர். ஆயினும் மிகச் சிறியதான மனதிற்குள்ளேயும் இருக்கிறீர். பரம புருஷனை ஹே கிருஷ்ணா முன்பு இருந்ததோ, இருக்கப்போவதோ எல்லாம் தாங்களே. மேலும் தேஹம் இந்திரியம் முதலியவற்றில் ப்ரவேசித்தவராய் (விஷயங்களை அனுபவிக்கிறவராய்) இருந்தபோதிலும், அதைத் தாண்டினவரானதால் மோக்ஷசுகத்தின் ரஸத்தையும் தாங்களே அனுபவிக்கிறீர்.

## அறிவு வடிவமாக இருப்பதைக் கூறுவது

यत्तु त्रैलोक्यरूपं दधदपि च ततो निर्गतोऽनन्त शुद्ध-
ज्ञानात्मा वर्तसे त्वं तव खलु महिमा सोऽपि तावान् किमन्यत् ।
स्तोकस्ते भाग एवाखिलभुवनतया दृश्यते त्र्यंशकल्पं
भूयिष्ठं सान्द्रमोदात्मकमुपरि ततो भाति तस्मै नमस्ते ॥ 9 ॥

யத்து த்ரைலோக்யரூபம் தததபி ச ததோ
நிர்கதோऽநந்த சுத்த—
க்ஞானாத்மா வர்தஸே த்வம் தவ கலு மஹிமா ஸோऽபி
தாவாந் கிமன்யத் |
ஸ்தோகஸ்தே பாக ஏவாகிலபுவனதயா த்ருச்யதே
த்ரியம்சகல்பம்
பூயிஷ்டம் ஸாந்த்ரமோதாத்மகமுபரி ததோ பாதி
தஸ்மை நமஸ்தே ||

ஹே குருவாயூரப்பா, தாங்கள் இம்மூன்று உலகங்களையே ஸ்வரூபமாக தரிக்கிறீர். ஆனாலும், அவ்வுலகங்களை தாண்டி சுத்தக்ஞானஸ்வரூபமாய் விளங்குகிறீர். இவ்விதம் இருப்பதற்கும் தங்களுடைய கூறமுடியாத மஹிமை தான் காரணமாகும். வேறு எது இவ்விதம் இருக்க முடியும். எந்த தங்கள் ஸ்வரூபத்தில் நான்கில் ஒரு பாகமே எல்லா உலகங்களாகக் காணப்படுகின்றதோ அதிகமான மற்ற மூன்று பாகங்களும், அதைத் தாண்டி மிக்க ஆனந்தம் நிறைந்தமயமாகவே இருக்கின்றதோ அப்பேர்கொத்த தங்களை நமஸ்கரிக்கிறேன்.

## நம்பூதிரி ஸ்ரீ அப்பனே தனக்கு உகந்த மூர்த்தியெனக் கருதுவது

अव्यक्तं ते स्वरूपं दुरधिगमतमं तत्तु शुद्धैकसत्त्वं
व्यक्तं चाप्येतदेव स्फुटममृतरसांभोधिकल्लोलतुल्यम् ।
सर्वोत्कृष्टामभीष्टां तदिह गुणरसेनैव चित्तं हरन्तीं
मूर्तिं ते संश्रयेऽहं पवनपुरपते पाहि मां कृष्ण रोगात् ॥10॥

அவ்யக்தம் தே ஸ்வரூபம் துரதிகமதமம் தத்து
சுத்தைகஸத்வம்
வ்யக்தம் சாப்யேததேவ ஸ்புடமம்ருதரஸாம்
போதிகல்லோல துல்யம் ।
ஸர்வோத்க்ருஷ்டாமபீஷ்டாம் ததிஹ குணரஸேனைவ
சித்தம் ஹரந்தீம்
மூர்த்திம் தே ஸம்ச்ரயே஽ஹம் பவநபுரபதே பாஹி
மாம் க்ருஷ்ண ரோகாத் ॥

ஹே கிருஷ்ணு, தங்களுடைய நிர்குண ஸ்வரூபமானது கஷ்டப்பட்டும் அடைய முடியாததாய் இருக்கிறது. சுத்தமான ஸத்வம் மட்டும் உள்ள இந்த ஸகுண ஸ்வரூபமோவெனில் ஸ்பஷ்டமாய் காணப்படுகிறது. இந்த ப்ரகாசிக்கிறதான க்ருஷ்ணன் முதலிய ஸகுண ஸ்வரூபமே. அம்ருத ரஸத்தின் கடலினுடைய அலேகளுக்கு ஸமமாய் இருக்கிறது. ஆகவே எல்லாவற்றை காட்டிலும் சிறந்ததாயும். மிக்க பிரியமாயும் கல்யாண குணங்களின் இனிமையால் மனதைக் கவற்கிறதாயும் ஆன தங்களுடைய மூர்த்தியையே முழுமையாய் ஆச்ரயிக்கிறேன். ஹே குருவாயூரப்பா! தாங்கள் ரோகத்திலிருந்து என்னேக் காற்கவேண்டும்.

என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

—o—

## ஸ்ரீ குருவாயூரப்பனின் மஹிமை

புனுவில் ஒரு ஆஸ்திகர் சிறந்த அரசாங்க பதவியில் இருந்து வருகிறுர். அவருக்கு தாய் தந்தையர்களும் இருந்தார்கள். எல்லா வசதிகளும் இருந்தன. ஆயினும் அவருக்குக் குழந்தை இல்லாதது மிகக் குறையாகவே இருந்தது. கல்யாணமாகி பதினைன்கு வருஷம் ஆகியும் குழந்தை இல்லாததைக் கண்டு எல்லோருமே மிக்க வருந்திஞர்கள். அதுஸமயம் நோய்வுற்றிருந்த அவர் பிதா தன்

பிள்ளையை அழைத்து நீ குருவாயூரப்பனுக்கு ப்ரார்த்தனை செய்துகொள். நிச்சயம் குழந்தை பிறக்கும் என்று கூறினர். அவ்விதமே அவரும், அவர் மனைவியும் ஸ்ரீ குருவாயூரப்பனை பிரார்த்தனை செய்து துலாபாரம் செய்து கொள்வதாயும் வேண்டிக் கொண்டார்கள். தந்தை இறந்த அதே வருஷத்தில் இவர்களுக்கு ஸ்ரீ குருவாயூரப்ப னின் அருளால் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அது ஸமயம் தன் தந்தை கூறிய ஸ்ரீ அப்பனின் பெருமையை எல்லோரிடமும் கூறி சந்தோஷித்தார்கள். மேலும் அக் குழந்தை நான்கு வயதிலேயே தெய்வீகமான சக்தியுடனும் சிறந்த புத்தியுடனும் இருப்பதைக் காணும் எல்லோரும் ஸ்ரீ அப்பனின் மஹிமையைக் கொண்டாடி சந்தோஷிப்ப தும் குறிப்பிடத்தக்க விஷயம். இவ்விதம் ஸ்ரீ அப்பனின் பெருமையை இக்கலியிலும் உலகம் முழுவதும் அனு பவித்து வருகிறார்கள்.

### நம்பூதிரி எதிரில் வைகுண்டத்தைக் காண்பது

अग्रे पश्यामि तेजो निबिडतरकलायावलीलोभनीयं
पीयूषाप्लावितोऽहं तदनु तदुदरे दिव्यकैशोरवेषम् ।
तारुण्यारंभरम्यं परमसुखरसास्वादरोमाञ्चिताङ्गै-
रावीतं नारदाद्यैर्विलसदुपनिषत्सुन्दरीमण्डलैश्च ॥ 1 ॥

அக்ரே பச்யாமி தேஜோ நிபிடதரகலாயாவளீ
லோபநீயம்
பீயூஷா ப்லாவிதோஹம் ததனு தததுரே திவ்ய
கைசோரவேஷம் |
தாருண்யாரம்பரம்யம் பரமஸுகரஸாஸ்வாத
ரோமாஞ்சிதாங்கை—
ராவீதம் நாரதாத்யைர்விலஸதுபநிஷத்ஸுந்தரீ
மண்டலைச்ச ||

ஹே குருவாயூரப்பா, மிக்க நெருக்கமான கலாய (காசாம்பூ) புஷ்ப கொத்துபோல் அழகான தேஜஸ்ஸை (ஒளியை) நான் எதிரில் காண்கிறேன். அதனால் நான் அம்ருதத்தால் நனைக்கப்பட்டவனாய் இருக்கிறேன். பிறகு அந்த ஒளியின் நடுவில் ஸாத்விகமான பதினாறு வயதுள்ள பாலனின் வேஷம் கொண்டவராயும் யௌவனாரம்பத்தால் மிக்க அழகாய் இருக்கிறதாயும் ப்ரும்மானந்த அனுபவத்தால் ரோமாஞ்சமுள்ள நாரதர் முதலியவர்களாலும் உருவங்கொண்டு நிற்கும் உபனிஷத்துகளாகிற ஸ்திரீகளாலும் சூழப்பட்டும் இருப்பதாயும் தங்களை நான் நேரில் காண்கிறேன்.

## ஸ்ரீ அப்பனின் தலைக்கொண்டையையும் நெற்றியையும் வர்ணித்தல்

नीलाभं कुञ्चिताग्रं घनममलतरं संयतं चारुभङ्ग्या
रत्नोत्तंसाभिरामं वलयितमुदयच्चन्द्रकैः पिञ्छजालैः ।
मन्दारस्रङ्निवीतं तव पृथुकबरीभारमालोकयेऽहं
स्निग्धश्वेतोर्ध्वपुण्ड्रामपि च सुललितां फालबालेन्दुवीथीम् ॥2॥

நீலாபம் குஞ்சிதாக்ரம் கனமமலதரம் ஸம்யதம் சாருபங்க்யா
ரத்னோத்தம்ஸாபிராமம் வலயிதமுதயச்சந்த்ரகை: பிஞ்சஜாலை:
மந்தாரஸ்ரங்நிவீதம் தவ ப்ருதுகபரீபாரமாலோகயே஽ஹம்
ஸ்நிக்தச்வேதோர்த்வபுண்ட்ராமபி ச ஸுலலிதாம் பாலபாலேந்துவீதீம் ॥

ஹே குருவாயூரப்பா, கருத்த காந்தியுள்ளதும், சுருண்ட அக்ரபாகத்தையுடையதும், நெருக்கமாய் வளர்ந்திருக்கிறதும் சுத்தமாய் விளங்குகிறதும், விசேஷமான

முறையில் (கொண்டையால்) தூக்கிக் கட்டியிருப்பதால் அழகுற்றதும் சிறந்த ரத்னங்களால் அலங்கரிக்கப் பெற்றதும் பல வர்ணங்களாய் விளங்கும் மயில் தோகைகளால் அலங்கரிக்கப்பட்டதும், மந்தார புஷ்ப மாலையால் சுற்றப் பட்டதுமான தங்களுடைய பெரிய கேசபாரத்தை நான் காண்கிறேன். வெளுப்பானதும், மேல் நோக்கியதாயு மிட்ட, அழகான திலகத்தோடு கூடினதும், மிக்க மனோகர மாயும் உள்ள சந்திர கலைக்கொப்பான நெற்றியை நான் காண்கிறேன்.

### கதியற்ற தன்னை கடாக்ஷிக்கும்படி வேண்டுதல்

हृद्यं पूर्णानुकम्पार्णवमृदुलहरीचञ्चलभ्रूविलासै-
रानीलस्निग्धपक्ष्मावलिपरिलसितं नेत्रयुग्मं विभो ते ।
सान्द्रच्छायं विशालारुणकमलदलाकारमामुग्धतारं
कारुण्यालोकलीलाशिशिरितभुवनं क्षिप्यतां मय्यनाथे ॥3॥

ஹ்ருத்யம் பூர்ணநுகம்பார்ணவம்ருதுலஹரீ
சஞ்சலப்ருவிலாஸை—
ராநீலஸ்நிக்த பக்ஷ்மாவளி பரிலஸிதம் நேத்ரயுக்மம்
விபோ தே |
ஸாந்த்ரச்சாயம் விசாலாருண கமலதளாகாரமா
முக்ததாரம்
காருண்யாலோகலீலாசிசிரிதபுவனம் க்ஷிப்யதாம்
மய்யநாதே ||

ஹே குருவாயூரப்பா, கருணை நிறைந்த கடலின் அலை போல் சஞ்சலமான புருவங்களுடைய விலாஸங்களால் மனதைக் கவர்கிறதும், எங்கும் கருத்து அழகாய் இருக்கும் இமைகளின் மயிர்களால் விளங்குகிறதும், மிக்க காந்தியுள்ளதும், நீண்டும் சிவந்தும் உள்ள தாமரை மலரின் இதழ்போலுள்ளதும், அழகான கருவிழிகளை யுடையதும்,

ஆன தங்களுடைய இரு நேத்திரங்கள், தன் கருணை நிறம்பிய விளையாட்டு பார்வையாலேயே உலகம் முழுவதையும் குளிரச் செய்கிறது. அவ்விதம் தங்கள் பார்வையை அனுதனை என்மேல் போடவேண்டும். (என்னை பார்க்க வேண்டும் எனக் கருத்து)

### பகவானின் முகத்தைக்காண வேண்டுதல்

उत्तुङ्गोल्लासिनासं हरिमणिमुकुरप्रोल्लसद्गण्डपाली-
व्यालोलत्कर्णपाशाञ्चितमकरमणीकुण्डलद्वन्द्वदीप्रम् ।
उन्मीलद्दन्तपङ्क्ति स्फुरदरुणतरच्छायबिम्बाधरान्तः—
प्रीतिप्रस्यन्दिमन्दस्मितमधुरतरं वक्त्रमुद्भासतां मे ॥ 4 ॥

உத்துங்கோல்லாஸிநாஸம் ஹரிமணிமுகுர
ப்ரோல்லஸத்கண்டபாலீ—
வ்யாலோலத்கர்ண பாசாஞ்சிதமகரமணீகுண்டல
த்வந்த்வதீப்ரம் ।
உன்மீலத்தந்தபங்தி ஸ்புரதருணதரச்சாயபிம்பா
தராந்த:—
ப்ரீதிப்ரஸ்யந்திமந்தஸ்மிதமதுரதரம் வக்த்ரமுத்
பாஸதாம் மே ॥

ஹே குருவாயூரப்பா, உயர்ந்த நாஸிகையுடன் விளங்குகின்றதும், பச்சை மணியால் செய்யப்பட்ட கண்ணாடிபோல் விளங்கும் கன்னப்ரதேசங்களின் (ப்ரதி பிம்பமாய்) ஆடுகிறதுகளான, காதுகளில் அலங்கரிக்கப் பட்ட மகராக்ருதியான இரு ரத்ன குண்டலங்களால் சோபிக்கிறதும் மிகச் சிவப்பான காந்தியுள்ளதுமான கோவைப்பழம் போன்ற இரு உதடுகளாலும் உள்ளூர சந்தோஷத்தால் ஏற்றபட்ட மந்தஹாஸத்தால் மிக்க அழகாய் இருக்கிறதுமான தங்கள் முகமானது எனக்குத் தோன்றட்டும்.

## வேணுகானத்தை வேண்டுதல்

बाहुद्वन्द्वेन रत्नोज्ज्वलवलयभृता शोणपाणिप्रवाले-
नोपात्तां वेणुनालीं प्रसृतनखमयूखाङ्गुलीसङ्गशाराम् ।
कृत्वा वक्त्रारविन्दे सुमधुरविकसद्रागमुद्भाव्यमानैः
शब्दब्रह्मामृतैस्त्वं शिशिरितभुवनैः सिञ्च मे कर्णवीथीम् ॥

*பாஹுத்வந்த்வேந ரத்நோஜ்வலவலய ப்ருதா சோண பாணி ப்ரவாலே—*
*நோபாத்தாம் வேணுநாலீம் ப்ரஸ்ருதநகமயூகாங்கு லீஸங்கசாராம் |*
*க்ருத்வா வக்த்ராரவிந்தே ஸுமதுரவிகஸத்ராக முத்பாவ்யமாநை:*
*சப்தப்ரஹ்மாம்ருதைஸ்த்வம் சிசிரித புவநை: ஸிஞ்ச மே கர்ணவீதீம் ||*

ஹே குருவாயூரப்பா, ரத்னங்களால் விளங்கும் வளையல்களை அணிந்து கொண்டிருக்கிறதும் சிவந்த தளிர் போன்ற உள்ளங்கையை யுடையதுமான இருகைகளால் வஹிக்கப் பட்டதும், நகத்தின் காந்தியால் வ்யாப்தமான விரல்களுடைய சேர்கையால் பலவர்ணங்களாக இருக்கிறதுமான புல்லாங்குழலை தாமரை போன்ற தங்கள் முகத்தில் வைத்து, இனிமையாய் விளங்கும் ராகத்துடன் கூடியிருக்கும்படி வெளிவருகிறதும் உலகம் முழுவதையும் குளிரச் செய்கிறதுமான சப்தப்ரும்மமாகிற (நாதப்ரும்மமாகிற) அம்ருதத்தால், என்னுடைய கர்ணமார்கத்தை (காதுவழியை) நனைக்க வேண்டும். (அதாவது தாங்கள் புல்லாங்குழல் வாசிக்க நான் அதை கேட்டு களிக்க வேண்டும் எனக் கருத்து).

## ஸ்ரீ அப்பனின் மாலையுடன் கூடிய மார்பை தியானம் செய்வது

उत्सर्पत्कौस्तुभश्रीततिभिररुणितं कोमलं कण्ठदेशं
वक्ष: श्रीवत्सरम्यं तरलतरसमुद्दीप्रहारप्रतानम् ।
नानावर्णप्रसूनावलिकिसलयिनीं वन्यमालां विलोल-
ल्लोलंबां लंबमानामुरसि तव तथा भावये रत्नमालाम् ॥6॥

உத்ஸர்பத்கௌஸ்துப ஸ்ரீததிபிரருணிதம் கோமளம் கண்டதேசம்
வக்ஷ : ஸ்ரீவத்ஸரம்யம் தரலதரஸமுத்தீப்ரஹாரப்ரதாநம் |
நாநாவர்ணப் ப்ரஸூநாவலி கிஸலயிநீம் வந்யமாலாம் விலோலல்—
லோலம்பாம் லம்பமானாமுரஸி தவ ததா பாவயே ரத்னமாலாம் ||

ஹே குருவாயூரப்பா! மேல் நோக்கி வீசும் கௌஸ்துபமென்ற மணியின் காந்திகளால் சிவந்து அழகான கழுத்தையும், மிக்க ஆடுகின்றதும் ப்ரகாசிக்கிறதுமான முத்துமாலைகளையுடையதும், ஸ்ரீவத்ஸ மென்னும் மச்சத்தை யுடையதுமான மார்பையும் பலவிதமான புஷ்பக் கொத்துகளையும் தளிர்களையும் சேர்த்துக் கட்டியதும், இங்குமங்கும் அலைகிற வண்டுகளுடன் கூடியதுமான வனமாலையையும் தங்கள் மார்பில் தொங்கும் ரத்னஹாரங்களையும் அவ்விதமே தியானம் செய்கிறேன்.

## சந்தனம், பீதாம்பரம் முதலியவற்றால் அலங்கரித்த பகவானை தியானம் செய்வது

अङ्गे पञ्चाङ्गरागैरतिशयविकसत्सौरभाकृष्टलोकं
लीनानेकत्रिलोकीविततिमपि कृशां बिभ्रतं मध्यवल्लीम् ।
शक्राश्मन्यस्ततप्तोज्ज्वलकनकनिभं पीतचेलं दधानं
ध्यायामो दीप्तरश्मिस्फुडमणिरशनाकिङ्किणीमण्डितं त्वाम् ॥7॥

அங்கே பஞ்சாங்கராகைரதிசய விகஸத்ஸௌரபாக்ருஷ்டலோகம்
லீநாநேகத்ரிலோகீ விததிமபி க்ருசாம் பிப்ரதம் மத்யவல்லீம் |
சக்ராச்மந்யஸ்ததப்தோஜ்ஜ்வல கநகநிபம் பீதசேலம் ததாநம்
த்யாயாமோ தீப்தரச்மி ஸ்புடமணிரசநா கிங்கிணீ மண்டிதம் த்வாம் ||

ஹே குருவாயூரப்பா, ஐந்து விதமான சந்தனப் பூச்சுகளுடைய மிக்க ஆச்சர்யகரமாய் விளங்கும் வாஸனையினால் ஜனங்களை தன்வசமாய் இழுக்குகிறீர். பலப்ரும்மாண்டங்களை உள்ளே மறைவாய் தரிக்கிறதாய் இருந்த போதிலும் தங்கள் இடை கொடிபோல் மிகச்சிறியதாக இருக்கிறது இந்திர நீலக்கல்லில் வைக்கப்பட்ட உருக்கிய தங்கம் போல் இருக்கிற பீதாம்பரத்தை தரிக்கிறவரும் ப்ரகாசிக்கின்ற கிரணங்களால் நன்கு விளங்கும் ரத்ன ஒட்டியாணத்தாலும் சிறியமணிகள் கட்டிய ஸூத்திரத்தாலும் அலங்கரிக்கப்பட்டவரான தங்களை தியானம் செய்கிறோம்.

## பகவானின் துடை முதலியவற்றை தியானித்தல்

ऊरू चारू तवोरू घनमसृणरुचौ चित्तचोरौ रमायाः
विश्वक्षोभं विशङ्क्य ध्रुवमनिशमुभौ पीतचेलावृताङ्गौ ।
आनम्राणां पुरस्तान्न्यसनधृतसमस्तार्थपालीसमुद्ग-
च्छायं जानुद्वयं च क्रमपृथुलमनोज्ञे च जङ्घे निषेवे ॥ 8 ॥

ஊரூ சாரு தவோரு கநமஸ்ருணருசௌ
சித்தசோரௌ ரமாயா:
விச்வக்ஷோபம் விசங்க்ய த்ருவமநிசமுபௌ
பீதசேலாவ்ருதாங்கௌ |
ஆநம்ராணாம் புரஸ்தாந்யஸநத்ருதஸமஸ்தார்த
பாலீஸமுத்க—
ச்சாயம் ஜாநுத்வயம் ச க்ரமப்ருதுலமநோக்ஞே ச
ஜங்கே நிஷேவே ||

ஹே குருவாயூரப்பா, பெருத்ததுகளும், கெட்டியான சதையால் மினுமினுப்பாய் இருக்கிறதுகளும், மஹா லக்ஷ்மியின் மனதைக் கவர்கிறதுகளும், அழகினால் உலகம் கலங்குமோவென நினைத்ததுபோல் பீதாம்பரத்தால் மறைக்கப்பட்ட அவயவங்களையுடையதுகளும், அழகானதுகளுமான இரு துடைகளையும் தன்னை வணங்குகிறவர்களுக்கு முன்பாகவே வைப்பதற்காக எல்லா புருஷார்த்தங்களை தரிக்கும் ஸம்புடம் போலுள்ள முழங்காலையும், முறையே பெருத்தும், மனோக்ஞமாயுமுள்ள இருகணைக் கால்களையும் நான் பஜிக்கிறேன்.

## ஸ்ரீ அப்பனின் சரணத்தை தியானித்தல்

मञ्जीरं मञ्जुनादैरिव पदभजनं श्रेय इत्यालपन्तं
पादाग्रं भ्रान्तिमज्जत्प्रणतजनमनोमन्दरोद्धारकूर्मम् ।
उत्तुङ्गाताम्रराजन्नखरहिमकरज्योत्स्नया चाश्रितानां
सन्तापध्वान्तहन्त्रीं ततिमनुकलये मङ्गलामङ्गुलीनाम् ॥ 9 ॥

மஞ்ஜீரம் மஞ்ஜுநாதைரிவபதபஜநம் ச்ரேய இத்யால
பந்தம்
பாதாக்ரம் ப்ராந்திமஜ்ஜத்ப்ரணதஜநமனோ
மந்தரோத்தாரகூர்மம் |
உத்துங்காதாம்ரராஜந்நகரஹி மகரஜ்யோத்ஸ்நயா
சாச்ரிதாநாம்
ஸந்தாபத்வாந்தஹந்த்ரீம் ததிமநுகலயே மங்களா
மங்குலீநாம் ||

ஹே குருவாயூரப்பா, இந்த பாதத்தை பஜிப்பதே சிரேயஸ்ஸை யளிக்கும் மார்க்கம் என தன் அழகான சப்தங்களால் கூறுகிறது போல் இருக்கிற இரு நூபுரத்தை (கொலுஸை)யும், மோஹமாகிற சமுத்திரத்தில் மூழ்கின பக்தர்களின் மனமாகிற மந்தர மலையை தூக்கி கறையேற்ற ஆமை போன்ற பாதத்தின் மேல்பாகத்தையும், உயரே நோக்கியதாயும், கொஞ்சம் சிவந்தும் விளங்கும் நகங்களாகிற சந்திரனின் நிலவினால் தன்னை ஆச்ரயித்தவர்களுடைய ஸந்தாபத்தைப் போக்குகிறதும், மங்களத்தையளிக்கிறதாயுமுள்ள கால் விரல்களுடைய கூட்டத்தையும் நான் தியானம் செய்கிறேன்.

## ஸ்ரீ பகவானை சரணத்தையளித்து தாபத்தை நீக்கும்படி வேண்டுதல்

योगीन्द्राणां त्वदङ्गेष्वधिकसुमधुरं मुक्तिभाजां निवासो
भक्तानां कामवर्षद्युतरुकिसलयं नाथ ते पादमूलम् ।
नित्यं चित्तस्थितं मे पवनपुरपते कृष्ण कारुण्यसिन्धो
हृत्वा निश्शेषतापान् प्रदिशतु परमानन्दसन्दोहलक्ष्मीम् ॥10॥

யோகீந்த்ராணும் த்வதங்கேஷ்வதிகஸுமதுரம்
முக்திபாஜாம் நிவாஸோ
பக்தாநாம் காமவர்ஷத்யுதருகிஸலயம் நாத தே
பாதமூலம் |
நித்யம் சித்தஸ்திதம் மே பவனபுரபதே க்ருஷ்ண
காருண்யஸிந்தோ
ஹ்ருத்வா நிச்சேஷதாபான் ப்ரதிசது பரமானந்த
ஸந்தோஹலக்ஷ்மீம் ||

நாதனுன ஹே குருவாயூரப்பா, சிறந்த யோகிகளுக்கு தங்களுடைய அங்கங்களுள் மிக்க மனோகரமாய் விளங்குகிறதும், மோக்ஷத்தை யடைந்தவர்களுக்கு வாஸஸ்தலமாயுள்ளதும், பக்தர்களுக்கு வேண்டிய பொருளை வர்ஷிக்கும் கல்பவ்ருக்ஷத்தின் தளிர்போன்று இருக்கிறதுமான, தங்கள் பாததலமானது என் ஹ்ருதயத்தில் இருக்கட்டும். கருணைக் கடலான ஹே க்ருஷ்ணு! அந்த பாதமானது என் எல்லா தாபங்களை போக்கி ப்ரும்மானந்தப்ரவாஹத்தின் சோபையை (மோக்ஷலக்ஷ்மியை) அளிக்கட்டும்.

## ஸ்ரீ பகவானை மன்னிப்பு கேட்பதும், இந்த ஸ்தோத்ரத்தை படிப்பவர்களுக்கும் க்ஷேமத்தை யளிக்கும்படி வேண்டுதல்

अज्ञात्वा ते महत्त्वं यदिह निगदितं विश्वनाथ क्षमेथाः
स्तोत्रं चैतत्सहस्रोत्तरमधिकतरं त्वत्प्रसादाय भूयात् ।
द्वेधा नारायणीयं श्रुतिषु च जनुषा स्तुत्यतावर्णनेन
स्फीतं लीलावतारैरिदमिह कुरुतामायुरारोग्यसौख्यम् ॥ 11 ॥

அக்ஞாத்வா தே மஹத்வம் யதிஹ நிகதிதம் விச்வநாத க்ஷமேதா :
ஸ்தோத்ரம் சைதத்ஸஹஸ்ரோத்தர மதிகதரம் த்வத் ப்ரஸாதாய பூயாத் |
த்வேதா நாராயணீயம் ச்ருதிஷு ச ஜநுஷாஸ்துத்யதா வர்ணநேந
ஸ்பீதம் லீலாவதாரைரிதமிஹ குருதாமாயுராரோக்ய ஸௌக்யம் ||

உலகிற்கு நாதனான ஹே குருவாயூரப்பா, தங்களுடைய மஹிமையை யறியாமல், எது இதில் கூறியிருந்தாலும் அதை தாங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும். மேலும் ஆயிரத் திற்கு மேல் அதிகமாய் கூறப்பட்ட இந்த ஸ்தோத்திரமா னது (படிப்பவர்களுக்கும்: கேட்பவர்களுக்கும்) தங்கள் ப்ரஸாதத்தை யளிப்பவையாக ஆகட்டும், வேதங்களில் உண்டான (வேதத்தை ப்ரமாணமாய்க் கொண்டு ஏற்பட்ட) விளையாட்டாய் செய்த அவதாரங்களைக் கூறுவதின் மூலம் ஸ்துதிக்கத்தகுந்தவர்ணனையினால் நிறம்பியதும், இரண்டு விதமான காரணத்தால் நாராயணீயம் என்று பெயர் பெற்றது. ஸ்ரீ நாராயணனைப் பற்றி இதில் கூறப்பட்டிருப் பதாலும் நாராயணன் என்ற நம்பூதிரி செய்ததாலும், இந்த ஸ்தோத்திரத்திற்கு நாராயணீயம் என்று பெயர். இந்த ஸ்தோத்திரத்தை (படிக்கும், கேட்கும்) இங்குள்ளவர்களுக்கு ஆயுளையும் ஆரோக்யத்தையும், சுகத்தையும், அளிக்கட்டும் என நம்பூதிரி வேண்ட ஸ்ரீ அப்பனும் தலையை ஆட்டி அங்கீகரித்தார்.

முற்றும்

| பக்கம் | ச்லோகம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- | --- |
| 2 | 2 | 23 | துரியோதனல் | துரியோதனனுல் |
| 3 | 3 | 14 | ஜஹ்றிஷே | ஜஹ்ருஷே |
| 3 | 3 | 15 | காண்டவனத்தை | காண்டவ வனத்தை |
| 4 | 4 | 7 | ஸப்தமூர்திர் | ஸப்தமூர்திர் |
| 5 | 5 | 8 | லக்ஷ்மணா | லக்ஷ்மணா |
| 5 | 5 | 10 | நரகன் என்ற அசுரன் | Delete |
| 5 | 6 | 17 | त्रुहित | त्रुटित |
| 5 | 6 | 21 | த்ருஹித | த்ருடித |
| 7 | 8 | 2 | भगदत्तेस्य | भगदत्तेऽस्य |
| 15 | 6 | 1 | முமுஹாஷி | முமுஹாஷி |
| 15 | 6 | 6 | எடுத்து | தடுத்து |
| 15 | 6 | 7 | பயந்து | Delete |
| ,, | ,, | 8 | ஓடிவிட்டன | பயந்து ஓடி விட்டன |
| 16 | 7 | 5 | அவனுடை | அவனுடைய |
| ,, | ,, | 14 | நிறைந்தவைகள் | நிறைந்தவர்கள் |
| 20 | 2 | 17 | சிரித்தார்களாமே | பரிஹஸித்தார் களாமே |
| 21 | 4 | 23 | ப்ரலயகாந்திய | ப்ரலயகாலத்திய |
| 22 | 5 | 11 | பதைதைக்யதியா | பவதைக்யதியா |
| 24 | 8 | 5 | काशीपुरीमदाक्षीत् | काशीपुरीमधाक्षीत् |
| ,, | ,, | 14 | எதிர்த்தது | எரித்தது |
| 27 | 1 | 7 | கோபிகைகளோடு | யாதவஸ்த்ரீகளோடு |
| 28 | 3 | 14 | சத்யபாமா | சத்யபாமா முதலிய |
| ,, | ,, | 15 | கேட்டு | கேட்டு ஸுபத்ரை முதலிய |
| 29 | 4 | 7 | வெகு | வெகுமதித்து வெகு |
| 32 | 10 | 24 | ஸ்னேகிதர் | ஸ்னேகிதர்கள் |

| பக்கம் | ஸ்லோகம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 33 | 11 | 2 | दृढमुपगृह्य | दृढमुपगूह्य |
| ,, | ,, | 6 | த்ருடமுபக்ருஹ்ய | த்ருடமுபகூஹ்ய |
| 34 | 1 | 10 | मगदभूभृता | मगधभूभृता |
| ,, | ,, | 11 | मूमिभृताम् | भूमीभृताम् |
| ,, | ,, | 15 | பூமிப்ருதாம் | பூமீப்ருதாம் |
| 37 | 5 | 5 | समनुगृ | समनुगृह्य |
| 38 | 6 | 6 | என்றும் | என்னும் |
| ,, | ,, | ,, | செய்தீராமே | செய்திராமே. அச்சிறந்த அரசருடைய பாக்யத்தின் பெருமையை என்னவென்று கூறுவேன். |
| 39 | 8 | 9 | सभाजयदि | सभाजयति |
| ,, | ,, | 17 | எல்லா அரசர்களும் அங்கு கூடியிருந்தார்கள். அது சமயம் | முனிவர்களும் அரசர்களும், கிருஷ்ணனை பூஜிப்பதை பார்த்துக் கொண்டிருக்கும் போது |
| ,, | ,, | 24 | ——— | இது ஆச்சர்யம் |
| 41 | 10 | 3 | கலஸ்ஸது | கல: ஸது |
| ,, | ,, | 8 | என்று கூறிக் கொண்டே | என்றும் ஸ்ரீ கிருஷ்ணன் ஸர்வோத்க்ருஷ்டமாய் விளங்குகிறார் என்றும் |
| ,, | ,, | 14 | கோபத்தை | மோஹத்தை |
| 45 | 3 | 9 | எறிந்தானுமே | எறிந்தான் |

| பக்கம் | ச்லோகம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 47 | 5 | 3 | घि—ते | घिक्कृते |
| ,, | ,, | 15 | வார்த்தைக் | வார்த்தையைக் |
| 49 | 7 | 6 | प्राञ्चलिं | प्राञ्जलिं |
| ,, | ,, | 10 | ப்ராஞ்சலிம் | ப்ராஞ்ஜலிம் |
| 51 | 9 | 12 | பாசத்தால் | பாபத்தால் |
| ,, | ,, | 16 | கூறிநீர் | கூறினீர் |
| 53 | 11 | 8 | மஹிதைதர்மஜம் | மஹிதைர்தர்மஜம் |
| ,, | 4 | 24 | நிர்வ்ருதீம் | நிர்வ்ருதிம் |
| 57 | 4 | 3 | தங்கள் | தாங்கள் ருக்மிணி<br>யுடன் இருக்கும் |
| 58 | 6 | 8 | நத்வியதேதி | நந்வியதேதி |
| ,, | ,, | 9 | ருரோத | ருரோத |
| 62 | 1 | 13 | ஸீனுவீக்ஷாம் | ஸௌனுவீக்ஷாம் |
| ,, | ,, | 15 | சாபாத்திரண்யான்<br>வித கசிபுவான் | சாபாத்திரண்யான்<br>விதகசிபுபவான் |
| ,, | ,, | 16 | ஸ்ருத | ச்ருத |
| 65 | 4 | 2 | நிருத்யாதிகி | நிருந்தியாதிகி |
| 66 | 6 | 19 | ஸௌனகரீர்<br>வித்யயா | ஸௌரவர.நகரீர்<br>வித்யயா |
| ,, | ,, | 55 | முடியால் | முடியாமல் |
| 67 | 7 | 9 | स्यन्धते | स्यन्दने |
| ,, | 7 | 13 | ப்ரதீசிம் | ப்ரதீசீம் |
| 69 | 9 | 2 | விபீன்னௌ | விபின்னௌ |
| 70 | 11 | 25 | வஸுதேவன் | தங்கள் தந்தை<br>வஸுதேவர் |
| 72 | — | 18 | என்றும் | என்றும் சொன்<br>னேன் |
| 73 | 1 | 10 | இவ்வுலத்தில் | இவ்வுலகத்தில் |
| | | 12 | ஏனேன்றால் | ஏனென்றால் |
| | | 14 | செய்கீறீர் | செய்கிறீர் |
| 74 | 3 | 16 | गिरिश | गिरीश |

| பக்கம் | ச்லோகம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 76 | 5 | 6 | அடைத்த | அடைந்த |
| 82 | 3 | 9 | விஷ்னு | விஷ்ணு |
| 83 | 5 | 17 | சகலேஷீ | ஸகலேஷு |
| 84 | 6 | 4 | பொருன் | பொருள் |
| 92 | 4 | 24 | போக்கக் | போக்க |
| 93 | 6 | 18 | கருணாயினால் | கருணையினால் |
| 94 | 6 | 3 | ஸித்தயேன்மம | ஸித்யேன்மம |
| 95 | 8 | 18 | जटमतिषु | जडमतिषु |
| 96 | 9 | 19 | माऽभिभृन्मामयि | माऽभिभून्मामयि |
| 104 | 16 | 4 | पाशैनिबध्य | पाशैर्निबध्य |
| | 23 | 4 | பாசைநிர்பத்ய | பாசைர்நிபத்ய |
| 018 | 3 | 1 | त्वय्युपावेशितत्मा | त्वय्युपावेशितात्मा |
| 110 | 2 | 1 | त्वत्करण्ये | त्वत्कारुण्ये |
| „ | 13 | 3 | தத்விஷ | தத்தத்விஷ |
| 124 | 7 | 4 | புங்தே | புங்க்தே |
| 173 | 12 | | தரிக்கிருனோ | தரிக்கிருனோ அந்த |

—o—